# ஸ்ரீ சிவபாதாதிகேசாந்த வர்ணன

## முதலிய ஐந்து சிவ ஸ்தோத்திரங்கள்

ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும்






ஸ்ரீ கைலாஸநாதர்

श्रीकामकोटिग्रन्थावलिः १६

॥ श्रीः ॥

॥ श्रीचन्द्रमौलीश्वराय नमः ॥

श्रीमत् आदिशङ्करभगवत्पादविरचितानि

# ॥ श्रीशिवपादादिकेशान्तवर्णनादि पञ्चशिवस्तोत्राणि ॥



श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यकामकोटिपीठाधीश्वर
श्रीजगद्गुरु श्रीमच्चन्द्रशेखरेन्द्रसरस्वती श्रीपादानां
श्रीमुखेन समुद्भासितानि



श्रीकामकोटिर्विजयते

श्रीकामकोटिकोशस्थानेन प्रकाशितानि
५७, मेल डवीर वीथी, कुम्भघोणम्

स्वाम्यं कोशस्थानस्यैव ] 1944 [ मूल्यम् द्वादशकलाः

ஸ்ரீ:
ஸ்ரீ சந்த்ரமௌளீஸ்வராய நம:

# ஸ்ரீ சிவபாதாதிகேசாந்த வர்ணன ஸ்தோத்ரம்
# ஸ்ரீ சிவகேசாதிபாதாந்த வர்ணன ஸ்தோத்ரம்
# ஸ்ரீ வேதஸார சிவ ஸ்தோத்ரம் -
# ஸ்ரீ சிவ பஞ்சாக்ஷர ஸ்தோத்ரம் -
# ஸ்ரீ தசச்லோகீஸ்துதி: - -

இவை

வேதாந்த ஸாஹித்ய சிரோமணி
ப்ரஹ்மஸ்ரீ V. H. ஸுப்ரம்மண்ய சாஸ்திரிகள்
எழுதிய தமிழ் அநுவாதங்களுடனும்,

மகோபதேசக, வித்யாரத்ன, ஆஸ்திகமணி, திவான்பகதூர்
கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரிகள் அவர்கள்
எழுதிய முன்னுரையுடனும்,

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான
ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்
அருளிய திவ்ய ஸ்ரீமுகத்துடனும்
கூடியது

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
57, மேல டபீர் வீதி :: கும்பகோணம்

பதிப்புரிமை] டிஸம்பர் 1944 [விலை அணு 12



ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகள்
ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

॥ श्रीः ॥

मुद्रा

श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्यश्रीमच्छङ्करभगवत्पाद-
प्रतिष्ठितश्रीकाञ्चीकामकोटिपीठाधिप जगद्गुरु श्रीम-
च्चन्द्रशेखरेन्द्रसरस्वतीश्रीपादैः

श्रीकामकोटिकोशस्थानसंवर्धकभक्तशिष्यजनविषये
क्रियते नारायणस्मृतिः ॥

वेदान्तो निलयायते स्थिरतरानन्दः स्वरूपायते यस्य निर्गुणस्य पूर्णस्य शान्तसकलविकल्पस्य अद्वैतस्य, यं च ओङ्कारस्य विवेचनी माण्डूक्यश्रुतिः तुर्यं शिवमाचष्टे, तस्यैव दीनभक्तजनप्रेमशीतलिम्ना घृतकाठिन्यमिव सगुणतां प्राप्तस्य आकाशः चिकुरायते दशदिशाभोगो दुकूलायते शीतांशुः प्रसवायते सुविनयः स्वभावायते इति श्रीभगवत्पादैः अस्मदादि-दीनशिष्योद्धारैकदृष्ट्या अस्तावि त्रयीमध्यगयजुर्गर्भस्थशत-रुद्रीयप्रोतपञ्चाक्षरमणिदीप्तिज्योतीरूप उमासहायः परमेश्वरो विभुः त्रिलोचनो नीलकण्ठः दशश्लोकीस्तोत्रेण शिवपञ्चाक्ष-रीस्तोत्रेण वेदसारशिवस्तोत्रेण च ।

"ईश्वरानुग्रहादेव पुंसामद्वैतवासना" इत्यादिशास्त्रे उपदिष्टसगुणस्येश्वरस्यानुग्रहः तस्यैकान्तभजनेन सिध्यतीति तद्भजनोपयोगितया भगवतः परमेश्वरस्य त्रैलोक्यमोहनं रूपं प्रत्यवयवं सरससरसाभिः स्रग्धराभिः नखादिशिखान्तमभि-

वर्ण्य "आत्मारामाश्च मुनयो निर्ग्रन्था अप्युरुक्रमे। कुर्वन्त्यहैतुकीं भक्तिम्" इति न्यायेन तत्र भक्तिपरवशाः इयताऽप्यपरितुष्यन्तः भगवत्पादाः पुनरपि शिखादिनखान्तं वर्णयांचक्रुः। यथा विष्णुपादादिकेशान्ते भगवत्तिलकस्य भगवत्किरीटस्य च स्तुतौ स्फाटिकैशानिलङ्ग प्रत्यभिज्ञायि, एवमत्र शिवकेशादिपादान्तस्तुतौ महेश्वरोदरसौन्दर्यवर्णनावसरे वीचीभरितक्षीरार्णवलग्नभक्तचित्तस्य त्रिधामत्वरूपणेन विष्णोरप्यविस्मृतिः समपादि,

मुक्तामुक्ते विचित्राकुलवलिलहरीजालशालिन्यवाञ्च-
न्नाभ्यावर्ते विलोलद्भुजगवरयुते कालशत्रोर्विशाले।
युष्मच्चित्तत्रिधामा प्रतिनवरुचिरे मन्दिरे कान्तिलक्ष्म्याः
शेतां शीतांशुगौरे चिरतरमुदरक्षीरसिन्धौ सलीलम् ॥१९॥

इत्यादिना।

अनेन मूर्तिवैषम्यादिदोषमुक्ता भक्तिरेव मुक्तये कल्पत इति इयमसाधारणी धोरणी भगवत्पादानाम्।

एवं पञ्चमुखस्य पञ्चाक्षरवेद्यस्य अनया पञ्चस्तोत्र्या प्रपञ्चितगुणपूगस्य निरन्तरमाकलनेन दोर्द्रुवत् क्षालितकल्मषं भक्तानां चिद्व्योमान्तरज्योतिःप्रभादीपितं तमसः परस्तात् समस्तसाक्षिचिद्घनं शिवं परमकल्याणमव्याजकरुणानिधिं सर्वमङ्गलोपेतमुपेत्य तान् भक्तान् सर्वमङ्गलभाजनीकुर्यादित्याशास्महे॥

| | |
|---|---|
| प्रकृतनिवासस्थानम्<br>वाकडे<br>तारण सं० तुलाकृष्णाष्टमी<br>ता० 8-11-44. | नारायणस्मृतिः |

ஸ்ரீ

# || ஸ்ரீமுகம் ||

முத்ரை

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்யர்களான ஸ்ரீமச் **சங்கர பகவத் பாதர்களால்** ப்ரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்திற்கு அதிபர்களாயும், ஜகத்குருவாயும் இருக்கும் **ஸ்ரீமச் சந்திரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதர்களால்,** ஸ்ரீ காமகோடி கோச ஸ்தானத்தை வளர்க்கும் பக்தர்களாகிய சிஷ்யஜனங்கள் விஷயத்தில் நாராயணஸ்மிருதி செய்யப்படுகிறது.

நிர்குணனும், எங்கும் நிறைந்தவனும், எல்லா வேற்றுமையும் அடங்கி அத்வைதமாயுமிருக்கும் எந்த சிவபெருமானுக்கு, வேதாந்தம் இருப்பிடமாய் விளங்குகிறதோ, நிலைபெற்ற ஆனந்தம் தன்வடிவமாய் துலங்குகிறதோ, எந்த சிவனை, ஓங்காரத்தின் பொருளை விளக்கும் மாண்டுக்ய உபனிஷத்து ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தையைக் கடந்து நான்காவதாய் ப்ரகாசிப்பதாயும், மங்களமயமாகிய சிவமாயும் கூறுகின்றதோ, அந்தப் பரமசிவன் ஏழை அடியார்களின்பால் அன்பால் பூரித்திருப்பதால், குளுமையால் நெய் உறைவதுபோல் ஸகுணமாகிறார். அப்பொழுது அவருக்கு ஆகாயம் தலையாயும், பத்து திக்குக்களும் ஆடையாயும், சந்திரன் தலையில் அணியும் மலராயும், வணக்கம் இயற்கை குணமாயும் ஆகிறது. ஆகவே ஸ்ரீ பகவத்பாதர்களால் நம்மைப்போன்ற ஏழை சிஷ்யர்களை கரையேற்றும் ஒரே நோக்கத்தால் வேதங்களுக்கு நடுவே இருக்கும் யஜுர்வேதத்திற்கு உள்ளடங்கிய ருத்ரப்ரச்னமென்னும் சதருத்ரீயத்தில் கோக்கப்பட்ட பஞ்சாக்ஷரமென்னும் ரத்தினத்தின் ஒளியே வடிவமாய் அமைந்தவரும், உமையுடன் கூடியவரும், எங்கும் பரவி இருப்பவரும், முக்கண்ணனைய்க் கறுத்த கழுத்தை உடையவருமான பரமேச்வரன், தசச்லோகி ஸ்தோத்திரத்தாலும், சிவபஞ்சாக்ஷர ஸ்தோத்திரத்தாலும், வேதஸார சிவஸ்தோத்திரத்தாலும் ஸ்துதிக்கப்பட்டுள்ளார்.

'ஈச்வரானுக்ரஹாதேவ பும்ஸாம் அத்வைதவாஸனா' இது முதலிய சாஸ்திரத்தில் உபதேசித்த ஸகுண மூர்த்தியாகிய பகவானுடைய அனுக்ரகம், அவரையே இடைவிடாமல் பஜிப்பதால்

கைகூடும் என்பதால், பஜனம் செய்வதற்கு உபயோகமாக பகவானு கிய பரமேச்வரனுக்கு ஒவ்வொரு அங்கத்திலும் துலங்கும் மூவுலகை யும் மயக்கச்செய்யும் எழிலை, நகம்முதல் சிகைவரையில் மிக அழகிய ஸ்ரக்தரா விருத்தத்தில் எழுதிய ச்லோகங்களால் வர்ணித்து; 'ஆத்மா ராமாஶ்ச முனயோ நிர்க்ரந்தா அப்யுருக்ரமே. குர்வந்த்யஹைதுகீம்ஹக்திம்' என்ற நியாயத்தைப் பின்பற்றி சிவபெருமானிடத்தில் பக்தி பரவசர்களாகி, அதனாலும் சந்தோஷமடையாமல் பகவத் பாதர்கள் மறுபடியும் சிகை முதல் நகம் வரையில் வர்ணித்தார்கள். விஷ்ணு பாதாதிகேசாந்த வர்ணன ஸ்தோத்திரத்தில் பகவானுடைய நெற்றிப் பொட்டையும், கிரீடத்தையும் துதிக்கும்பொழுது எப்படி ஸ்படிகத்தால் ஆன ஈசானலிங்கம் ஞாபகமூட்டப்பட்டதோ; அப் படியே இங்கு சிவ கேசாதிபாதாந்த வர்ணன ஸ்துதியில்,

முக்தாமுக்தே விசித்ராகுலவலிலஹரீஜாலஶாலிந்யவாஞ்சன்-
நாஹீயாவர்தே விலோலத்ஹுஜகவரயுதே காலஶத்ரோர்விஶாலே
யுஷ்மச்சித்தத்ரியாமா ப்ரதிநவருசிரே மந்திரே காந்திலக்ஷ்ம்யா:
ஶேதாம் ஶீதாம்ஶுகௌரே சிரதரமுதராக்ஷீரஸிந்தௌ ஸலீலம் ||

என்ற 19-ம் ச்லோகத்தில் மஹேச்வரனுடைய வயிற்றின் அழகை வர்ணிக்கும் சமயத்தில் அலைநிறைந்த பாற்கடலில் பற்றிய பக்தன் மனதை மஹாவிஷ்ணுவாய்க் கூறி இருப்பதால் விஷ்ணுவையும் மறக்காமல் நினைவூட்டியிருக்கிறார்.

இதனால் மூர்த்திகளின் வேறுபாடு முதலிய குற்றம் நீங்கிய பக்தியே முக்தியை அளிக்கவல்லது என்பதே பகவத்பாதர்களின் தனிப்பட்ட வழி என்று தெரிகிறது.

இவ்விதம் பஞ்சாக்ஷர மந்திரத்தால் அறியத்தகுந்த ஐந்து முகம் கொண்ட சிவனுடைய, இந்த ஐந்து ஸ்தோத்திரங்களால் விஸ்தரிக்கப் பட்ட குணக் கூட்டங்களை இடைவிடாமல் த்யானம் செய்வதால் உருகி உருகி பாபம் என்னும் அழுக்கை அலம்பி அகற்றிய பக்தர் களின் உள்ளம், உள்ளத்தின் ஒளியால் ப்ரகாச மடைந்து, அஞ்ஞான இருளுக்கு அப்பால் இருப்பவரும், அனைத்துக்கும் சாக்ஷியானவரும் ஞானமே உருக்கொண்டவரும், பரமகல்யாண மூர்த்தியானவரும், கபடமற்ற கருணைக்கடலானவரும் ஆகிய மங்களாம்பிகையான பார்வதியோடு சேர்ந்த சிவனை அடைந்து, அந்த பக்தர்களை எல்லா மங்களங்களுக்கும் பாத்திரமாகச் செய்யவேண்டும் என்று ஆசீர்வதிக் கின்றோம்.

முகாம்: வாக்கடை, தாரண, துலா, க்ருஷ்ண அஷ்டமீ. 8—11—'44. } **நாராயண ஸ்ம்ருதி:**

மகோபதேசக, வித்யாரத்ன, ஆஸ்திகமணி,

திவான்பகதூர் கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்த்ரிகள்

எழுதிய

# முன்னுரை

---

1. ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம் என்ற நூல் நிலயம் நம்முடைய நாட்டுக்கும் நாகரீகத்திற்கும் இணையற்ற தொண்டாற்றி வருகின்றது. சநாதன தர்மத்தைப் பாதுகாத்து ஒப்புயர்வற்ற சநாதன மதத்தை உலகம் போற்றும் முன்னேற்ற நிலையில் வைக்க அரும்பாடு பட்டுவரும் ஸ்ரீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்யர் அவர்களுடைய உத்திரவுப்படி அந்த கோசஸ்தானம் பக்தியுடன் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. இதுவரையில் வெளிவந்துள்ள அரிய அழகிய நூல்களை உலகம் வாயாறப் புகழ்ந்து கொண்டாடுகின்றது. ஆதி சங்கராசார்யார் அவர்களால் இயற்றப்பட்டு இந்த நூலில் வெளியிடப்பட்ட ஸ்ரீ சிவபாதாதிகேசாந்த வர்ணன ஸ்தோத்ரம், ஸ்ரீ சிவ கேசாதிபாதாந்த வர்ணன ஸ்தோத்ரம், ஸ்ரீ வேதஸார சிவஸ்தோத்ரம், ஸ்ரீ சிவபஞ்சாக்ஷர ஸ்தோத்ரம், ஸ்ரீ தசச்லோகீஸ்துதி என்ற துதிகள் மிக உயர்ந்த கடவுள் துதியாகும். இந்நூலுக்கு முகவுரை எழுதும் அரிய பணியை எனக்கு அளித்ததற்காக என்னுடைய மறவாத நன்றியறிவு எப்பொழுதும் உரித்தாகும்.

2. மத உணர்ச்சிதான் ஒரு மனிதனுடைய வாழ்நாளில் முக்கிய சம்பவம் (the chief fact in regard to man's life) என்று கார்லைல் (Carlyle) என்ற ஆங்கிலேய பேரறிஞர் கூறுகின்றார். ஸ்ரீமத் பாகவதத்தில் கடவுளை அறியக்கூடிய மனதுள்ள மனிதனைப் படைத்த பிறகுதான் கடவுள் இன்புற்றார் என்று அழகாகக் கூறப்பட்டிருக்கின்றது.

**तैस्तैरतुष्टहृदयो मनुजं विधाय ब्रह्मावलोकधिषणं मुदमाप देवः॥**

ஆகையால் நம்முடைய நாகரீகத்தின் உயிர்நிலை நம்முடைய மதமாகும். நாம் சுதந்திரமிழந்த துன்பகாலங்களிலும்கூட அதை நன்கு பாதுகாத்து வந்திருக்கின்றோம். அதன் வழியாகத்தான் பெரும் பேராசைப் புயல்களால் அடிபடும் உலகம் (**आशापाशशतैर्बद्धाः कामक्रोधपरायणाः**) அறிவையும், அழகையும், அன்பையும், ஆனந்தத்தையும் அடையும். அதைக் காப்பாற்றி உலகத்திற்கு அளிக்க நம்மைக் கடவுள் வைத்திருப்பதால்தான் அனேக நாகரீகங்கள் காலப்பிரவாகத்தில் அமிழ்ந்து அழிந்தாலும் நம்மவர்களுடைய நாகரீகம் அழிவற்று சதமாக வாழ்கின்றது.

3. ஆதி சங்கராசார்யார் அவர்கள் உலகத்திற்கு அளித்த அத்வைதம் என்ற உயர்ந்த மதத்தின் மர்மங்களை நாம் நன்கு உணர்ந்தால் அதன் தத்துவ விசாரமும் தைவிக உணர்ச்சியும் (philosophic enquiry and religious fervour) நமக்கு நன்கு விளங்கும். ஏனைய நாடுகளில் தத்துவ விசாரமும் தைவிக உணர்ச்சியும் ஒன்றுபடவில்லை. தத்துவ விசாரமும் மதமும் அவ்விடங்களில் வெவ்வேறு வழிகளிலும் முரண்பாடாகவும் சென்றன. ஆனால் நம்முடைய நாட்டில் அவைகள் சமரசமாக ஒன்றுபட்டு வாழ்ந்துவந்திருக்கின்றன. அவைகளின் ஒன்றுபட்ட உச்சிநிலையை உபநிடதங்களிலும், கீதையிலும், ப்ரஹ்மசூத்திரங்களிலும், ஸ்ரீ சங்கரருடைய பாஷ்யங்களிலும் பிரகரண கிரந்தங்களிலும் ஸதோத்திரங்களிலும் நாம் நன்கு அறிய முடியும்.

4. முக்குணங்களையுங் கடந்த நிலையில் பிரபஞ்ச சம்பந்தத்தை விலக்கி நாம் செய்யும் விசாரத்தில் உருவம் குணம் கடந்த நிர்க்குண பரபிரஹ்மம் தான் நித்திய சத்தியம் என்ற அனுபவம் ஆதிசங்கராசார்யார் அவர்களால் தைரியமாகக் கூறப்பட்டிருக்கின்றது. அது இக்காலத்தில் உள்ள மிக உயர்ந்த மேனாட்டு தத்துவ சாஸ்திரிகளால் கூறப்பட்ட கொள்கையாகும். இக்காலத்தில் மிக விரிவையடைந்து நுண்ணிய உலக ஆராய்ச்சிகளை செய்யும் விஞ்ஞான சாஸ்திரம் (Science) அக்கொள்கையையே தழுவி நிற்கின்றது. உருவம் அருவம் என்ற இருவகைப்பட்ட உலகதத்துவங்களுக்கு மூலமான கடவுள் இந்த உருவத்துடன் இருக்கவேண்டும் என்ற கட்டாயக் கொள்கையாக கூறுவது அறிவுக்கு (Reason) பொருத்த மற்றதாகும். ஆனால் கடவுள் நிர்க்குண பிரஹ்மம்தான் சகுண பிரஹ்மம் அல்ல என்று வாதிப்பதும் பொருத்த மற்றதே. ஆதிசங்கராசாரியார் அவர்கள் நிர்க்குண ஸகுண பிரஹ்ம ஐக்யத்தைத் தெளிவாகக் கூறி இருக்கின்றார்.

**न यस्यास्ति मूर्तिस्त्रिमूर्तिं तमीडे। द्विरूपं हि ब्रह्मावगम्यते मूर्तं चामूर्तंच। स्यात्परमेश्वरस्यापि इच्छावशात् मायामयं रूपं साधकानुग्रहार्थम्। एक एव तु परमात्मेश्वरस्तैस्तैर्गुणविशेषैर्विशिष्ट उपास्यो यद्यपि भवति, तथाऽपि यथागुणोपासनमेव फलानि भिद्यन्ते।**

5. ஆதிசங்கராசாரியார் அவர்கள் ஞானத்தினால் தான் முக்தி என்றுத் திரும்பித் திரும்பி வற்புறுத்திக் கூறுகின்றார்.

**ज्ञानविहीनः सर्वमतेन मुक्तिं न भजति जन्मशतेन॥ नहि अन्यत्र परमात्मज्ञानात् हिततमप्राप्तिरस्ति। ब्रह्मभावश्च मोक्षः—तस्याज्ञानमेकं मुक्त्वा क्रियाया गन्धमात्रस्याप्यनुप्रवेश इह नोपपद्यते।**

ஆனாலும் கீதாசாரியர் கூறியபடி பக்தி ஞானத்தின் முக்கியமான அங்கம்.

मयि चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी ।
ईश्वरानुग्रहादेव पुंसामद्वैतवासना ॥

பதஞ்சலி யோக சூத்திரங்களிலும் பக்தியால் யோக சமாதியை விரைவில் அடையக்கூடும் என்று உபதேசிக்கப்படுகின்றது. ईश्वरप्रणिधानाद्वा ।

நிர்குண ஸ்வரூபத்தை பக்திசெய்ய முடியும் என்று பாகவதத்தில் மூன்றாவது ஸ்கந்தத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

लक्षणं भक्तियोगस्य निर्गुणस्य ह्युदाहृतम् ।
अहैतुक्यव्यवहिता सा भक्तिः पुरुषोत्तमे ॥
सालोक्यसार्ष्टिसामीप्यसारूप्यैकत्वमप्युत ।
दीयमानं न गृह्णन्ति विना मत्सेवनं जनाः ॥
स एव भक्तियोगाख्य आत्यन्तिक उदाहृतः ।
येनातिव्रज्य त्रिगुणं मद्भावायोपपद्यते ॥

(13, 14, 15 சுலோகங்கள்)

ஆகிலும் உருவத்துடன் கூடிய பகவானை பக்தி செய்வது மனதிற்கு சுலபம். அது மனதிற்கு இணையற்ற தூய்மையையும், தெளிவையும், அமைதியையும் அளிக்கும். பாதாதி கேசாந்த வர்ணனைகளுடைய நினைவால் கடவுளுடைய உருவம் மனதில் நிலைத்து நிற்கும். ஈச்வர நாம பஜனையால் பாபங்கள் நசித்துவிடும்; மனோலயம் கைகூடும்.

विद्यातपःप्राणनिरोधमैत्रीतीर्थाभिषेकव्रतदानजप्यैः ।
नात्यन्तशुद्धिं लभतेऽन्तरात्मा यथा हृदिस्थे भगवत्यनन्ते ॥

(भागवतम्)

अंकोलं निजबीजसन्ततिरयस्कान्तोपलं सूचिका
साध्वी नैव विभुं लता क्षितिरुहं सिन्धुस्सरिद्वल्लभम् ।
प्राप्नोतीह यथा तथा पशुपतेः पादारविन्दद्वयं
चेतोवृत्तिरुपेत्य तिष्ठति सदा सा भक्तिरित्युच्यते ॥

(शिवानन्दलहरी)

VI. இத்தகைய ஹிந்து மதத்தின் ஓர் உயிர்நிலை சிவபக்தியாகும். கேனோபநிடத்தில் உமாதேவியே யக்ஷ உருவமாகத் தோன்றியவரை பிரஹ்மம் என்று அறிவித்தகதை கூறப்பட்டுள்ளது. மாண்டுக்ய உபநிஷத்தில் प्रपंचोपशमं शान्तं शिवमद्वैतं चतुर्थं मन्यन्ते

என்றுரைக்கப்பட்டிருக்கின்றது. ச்வேதாச்வதர உபநிஷத்தில் சிவ தத்துவம் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது.

यो देवानां प्रभवश्चोद्भवश्च विश्वाधिको रुद्रो महर्षिः ।
हिरण्यगर्भं जनयामास पूर्वं स नो बुद्ध्या शुभया संयुनक्तु ।
यस्मात्परं नापरमस्ति किंचिन्नाणीयो न ज्यायोऽस्ति किंचित् ।
वृक्ष इव स्तब्धो दिवि तिष्ठत्येकस्तेनेदं पूर्णं पुरुषेण सर्वम् ॥

ஏனைய சைவ சாக்த உபநிஷத்துக்களில் சிவன், சக்தி தத்துவங்களை நன்கு விளக்கிக் கூறப்பட்டிருக்கின்றது.

एक एव रुद्रो न द्वितीयाय तस्थुः
इमान् लोकानीशत ईशनीयुर्जननीयुः ।
प्रत्यङ्जनास्तिष्ठति संचुकोचान्तकाले
संसृज्य विश्वा भुवनानि गोप्ता ॥ (अथर्वशिरोपनिषत्)

अचिन्त्यमव्यक्तमनन्तरूपं शिवं प्रशान्तममृतं ब्रह्मयोनिम् ।
तमादिमध्यान्तविहीनमेकं विभुं चिदानन्दमरूपमद्भुतम् ॥
उमासहायं परमेश्वरं प्रभुं त्रिलोचनं नीलकण्ठं प्रशान्तम् ।
ध्यात्वा मुनिर्गच्छति भूतयोनिं समस्तसाक्षिं तमसः परस्तात् ॥
(कैवल्योपनिषत्)

स्फटिकरजतवर्णं मौक्तिकीमक्षमाला-
ममृतकलशविद्याज्ञानमुद्रां कराग्रे ।
दधतमुरगकक्ष्यं चन्द्रचूडं त्रिणेत्रं
विधृतविविधभूषं दक्षिणामूर्तिमीडे ॥ (दक्षिणामूर्त्युपनिषत्)

मायया मोहिताः शंभोर्महादेवं जगद्गुरुम् ।
न जानन्ति सुराः सर्वे सर्वकारणकारणम् ॥ (पंचब्रह्मोपनिषत्)

यो विस्फुलिंगेन ललाटजेन सर्वं जगद्भस्मासात्संकरोति ।
पुनश्च सृष्ट्वा पुनरप्यरक्षद् एवं स्वतन्त्रं प्रकटीकरोति ॥
(शरभोपनिषत्)

7. ஆனால் சிலர்கள் ஸநாதந ஹிந்து மதத்தில் திருமூர்த்திகளை கூறப்பட்டுள்ளதே என்று ஐயப்படுகின்றார்கள். மூன்று மூர்த்திகளும் ஒரே ஈச்வரன். முத்தொழில்களில் ஒவ்வொரு தொழிலை

செய்யும்பொழுது அவருக்கு வெவ்வேறு பெயர்கள். ரிக்வேதத்தில் **एकं सद्विप्रा बहुधा वदन्ति** என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் புருஷோத்தமன் என்ற பெயர் விஷ்ணுவையே குறிக்கும். மஹேச்வரன் என்ற பெயர் சிவனையே குறிக்கும்.

**हरिर्यथैकः पुरुषोत्तमः स्मृतो महेश्वरस्त्र्यम्बक एव नापरः ।**

என்று காளிதாஸர் கூறுகின்றார்.

புருஷஸூக்தத்தில்

**स ब्रह्मा स शिवः सेन्द्रः सोऽक्षरः परमः स्वराट् ।**

என்று கூறப்பட்டிருப்பது போல் கைவல்ய உபனிஷத்தில்

**स ब्रह्मा स शिवः स हरिः सेन्द्रः सोऽक्षरः परमः स्वराट् ।**
**स एव विष्णुः सप्राणः स कालोऽग्निः स चन्द्रमाः ॥**

என்று கூறப்பட்டிருக்கின்றது.

**रुद्रो ब्रह्मा उमा वाणी तस्मै तस्यै नमो नमः ।**
**रुद्रो विष्णुरुमा लक्ष्मीस्तस्मै तस्यै नमो नमः ॥**

இம்மாதிரியே ஈச்வரனுக்கும் சக்திக்கும் அபேதம் கூறப்பட்டுள்ளது. பேதப்படுத்துவது நம்முடைய மடமை.

வால்மீகி ராமாயணத்தில் பாலகாண்டம் 75 வது ஸர்க்கத்தில்

**अधिकं मेनिरे विष्णुं देवाः सर्षिगणास्तदा ।**

என்று கூறப்பட்டதிலிருந்து சிலர் பின்னபிப்ராயங்களைக் கூறத் தலைப்பட்டார்கள். அதே பாலகாண்டத்தில் 45 வது ஸர்க்கத்தில் ஸமுத்ரமதன காலத்தில் சிவனைக்குறித்து விஷ்ணுவின் வசனத்தை அவர்கள் கவனிக்கவேணும்.

**त्वदीयं सुरश्रेष्ठ सुराणामग्रजोऽसि यत् ।**
**अग्रपूजामिमां मत्वा गृहाणेदं विषं प्रभो ॥**

உத்தரகாண்டத்தில் சிவனையும் விஷ்ணுவையும் சமானமாகவே துதி செய்யப்படுகின்றது. மகாபாரதத்தில் விஷ்ணு ஸகஸ்ரநாமம் போல் சிவ ஸகஸ்ரநாமமு மிருக்கின்றது. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா தன் பிள்ளைக்கே ஸாம்பன் என்று பெயர் வைத்தார். பாகவதத்தில் அத்ரி தவத்தைக் கூறும்பொழுது ஈச்வரனைக் குறித்துத் தவஞ்செய்த திருமூர்த்திகள் அவருக்குப் பின் வருமாறு கூறியதாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றது.

शरणं तं प्रपद्येऽहं य एष जगदीश्वरः । (अत्रिवाक्यम्)

यद्वै ध्यायति ते वयम् (त्रिमूर्तिवाक्यम्)

தக்ஷ யஜ்ஞக் கதையில் விஷ்ணு பின்வருமாறு கூறியதாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றது.

अहं ब्रह्मा च विष्णुश्च जगतः कारणं परम् ।
आत्ममायां समाविश्य सोऽहं गुणमयीं द्विज ॥
सृजन् रक्षन् हरन्विश्वं दध्रे संज्ञां क्रियोचिताम् ॥
तस्मिन् ब्रह्मण्यद्वितीये केवले परमात्मनि ।
ब्रह्मरुद्रौ च भूतानि भेदेनाज्ञोऽनुपश्यति ॥

(भागवते चतुर्थस्कन्धे सप्तमाध्याये)

இத்தகைய அபேதத்தையே காளிதாஸர் குமார சம்பவத்தில் வற்புறுத்துகின்றார்.

एकैव मूर्तिर्बिभिदे त्रिधा सा सामान्यमेषां प्रथमावरत्वम् ॥

எவனுக்கு எந்த எந்த மூர்த்தியில் மனது லயமாகுமோ அவன் அம்மூர்த்தியை வழிபடவேணும்.

योयो यांयां तनुं भक्तः श्रद्धयाऽर्चितुमिच्छति ।
तस्य तस्याचलां श्रद्धां तामेव विदधाम्यहम् ॥

(भगवद्गीतायां सप्तमाध्याये)

शैवा वयं न खलु तत्र विचारणीयं
पञ्चाक्षरीजपरता नितरां तथाऽपि ।
चेतो मदीयमतसीकुसुमावभासं
स्मेराननं स्मरति गोपवधूकिशोरम् ॥ (श्रीकृष्णकर्णामृते)

महेश्वरे वा जगतामधीश्वरे जनार्दने वा जगदन्तरात्मनि ।
न वस्तुभेदप्रतिपत्तिरस्ति मे तथाऽपि भक्तिस्तरुणेन्दुशेखरे ॥

(भर्तृहरिसुभाषिते)

8. இத்தகைய மத மர்மங்களை மனதில் வைத்துக்கொண்டு இந்த நூலில் முக்கிய ரத்தினங்களாக விளங்கும் சிவபாதாதிகேசாந்த வர்ணன ஸ்தோத்ரத்தையும் சிவகேசாதிபாதாந்த வர்ணந ஸ்தோத்திரத்தையும் நாம் ஆதி சங்கராசார்யா ரவர்களிடமிருந்து பெற்றோம். அவைகளை நாம் படித்து மனனம் செய்தால் அவைகளின் அழகும்

உட்கருத்தும் நமக்கு நன்கு விளங்கும். அவைகள் பரமாத்மாவான சங்கரனை நம்முடைய மனதில் நன்கு சித்தரிக்கின்றன. அவைகளை ப்ரஹ்மஸ்ரீ. வி. எச். ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள் தமிழில் மொழி பெயர்த்து உட்கருத்தை அழகாக வெளியிட்டிருக்கிறார்கள். அவைகளி னுள் ஹாலாஹல விஷத்தை உட்கொண்டதை வர்ணிக்கும் மூன்று சுலோகங்களையும், தசச்லோகியில் ஒரு சுலோகத்தையும் இவ்விடத் தில் நான் சுட்டிக் காட்டுகின்றேன். அவை வெகு அழகாகவும் ரசமாகவும் இருக்கின்றன. அவைகளிலிருந்து த்வனிக்கும் தத்துவங் களும் வெகு உயர்ந்தவைகள்.

संभ्रान्तायाः शिवायाः पतिविलयभिया सर्वलोकोपतापात्
संविग्नस्यापि विष्णोस्सरभसमुभयोर्वारणप्रेरणाभ्याम् ।
मध्ये त्रैशंकवीयामनुभवति दशां यत्र हालाहलोष्मा
सोऽयं सर्वापदां नः शमयतु निचयं नीलकण्ठस्य कण्ठः ॥

(शिवपादादिकेशान्त-स्तोत्रम् 25)

आत्मप्रेम्णा भवान्या स्वयमिव रचिताः सादरं सांवनन्या
मष्या तिस्रः सुनीलांजननिभगलरेखाः समाभान्ति यस्याम् ।
आकल्पानल्पभासा भृशरुचिरतरा कम्बुकल्पाऽम्बिकायाः
पत्युः साऽत्यन्तमन्तर्विलसतु सततं मन्थरा कन्धरा वः ॥

वक्त्रेन्दोर्दन्तलक्ष्म्याश्चिरमधरमहाकौस्तुभस्याप्युपान्ते
सोत्थानां प्रार्थयन्त्यः स्थितिमचलभुवे वारयन्त्यै निवेशम् ।
प्रायुङ्क्तेवाशिषो यः प्रतिपदममृतत्वे स्थितः कालशत्रोः
कालं कुर्वन् गलं वो हृदयमलमयं क्षालयेत्कालकूटः ॥

(शिवकेशादिपादान्त-स्तोत्रम् 14, 15)

विष्णुब्रह्मसुराधिपप्रभृतयः सर्वेऽपि देवा यदा
संभूताज्जलधेर्विषात्परिभवं प्राप्तास्तदा सत्वरम् ।
तानार्तान् शरणागतानिति सुरान्योऽरक्षदर्धक्षणात्
तस्मिन् मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥

(दशश्लोकीस्तुतिः 10.)

மதராஸ்
1--11--44

கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்த்ரி.

# विषयसूचिका

# பொருளடக்கம்





॥ श्रीः ॥

# ॥ श्री शिवपादादिकेशान्तवर्णनस्तोत्रम् ॥

## ஸ்ரீ சிவபாதாதிகேசாந்த வர்ணன ஸ்தோத்ரம்

**कल्याणं नो विधत्तां कटकतटलसत्कल्पवाटीनिकुञ्ज-**
**क्रीडासंसक्तविद्याधरनिकरवधूगीतरुद्रापदानः ।**
**तारैर्हेरम्बनादैस्तरलितनिनदत्तारकारातिकेकी**
**कैलासः शर्वनिर्वृत्यभिजनकपदः सर्वदा पर्वतेन्द्रः ॥ १ ॥**

கல்யாணம் நோ விதத்தாம் கடகதடலஸத்கல்பவாடீநிகுஞ்ஜ-
க்ரீடாஸம்ஸக்தவித்யாதரநிகரவதூகீதருத்ராபதாநः ।
தாரைः ஹேரம்பநாதைः தரளிதநிநதத்தாரகாராதிகேகீ
கைலாஸः ஶர்வநிர்வ்ருத்யபிஜனகபதः ஸர்வதா பர்வதேந்த்ரः ॥ 1

**कटक-तट-लसत्-कल्पवाटी-निकुञ्ज-क्रीडा-संसक्त-विद्याधर-निकर-वधू-गीत-रुद्रापदानः** தாழ்வரைகளில் விளங்கும் கல்ப விருக்ஷக் கூட்டங்களில் இருக்கும் புதருக்குள் விளையாடுவதில் ஈடுபட்ட வித்யாதர ஸ்த்ரீகளின் கூட்டத்தால் பாடப் பட்ட பரமசிவனுடைய வீரச்செயலை உடையதும், **तारैः** உரத்த **हेरम्बनादैः** விநாயகருடைய சப்தங்களால் **तरलित-निनदत्-तारकाराति-केकी** சஞ்சலமானதும், சப்திக்கின்றதுமான தாரகனை வென்ற ஸுப்ரமண்யனின் மயிலை உடையதும் **शर्व-निर्वृत्यभिजनक-पदः** பரமசிவனுக்கு ஆனந்தத்தை விளைவிக்கும் சுற்றுப்ப்ரதேசத்தை உடையதும் ஆன **पर्वतेन्द्रः** மலைகளுக்கு அரசனாகிய **कैलासः** கைலாஸம் **सर्वदा** எப்பொழுதும் **नः** நமக்கு **कल्याणं** மங்களத்தை **विधत्तां** செய்யட்டும்.

கருத்து:—எந்த கைலேயங்கிரியின் தாழ்வரைகளிலிருக்கும் கல்ப விருக்ஷங்களுக் கிடையே வித்யாதரிகள் உட்கார்ந்து கொண்டு பரமசிவனுடைய வெற்றியை பாட்டாக பாடுகின்றார்களோ, எங்கு விநயகர் அவ்வப்பொழுது உறக்க வீரிடும் சத்தத்தை கேட்டு குகனுடைய மயில் மேக சப்தம் என்று உள்ளம் பூரித்து அகவுகின்றதோ, பர்வதங்களில் சிறந்ததும், பரமசிவனுக்குச் சந்தோஷத்தைவிளைவிப்பதுமாகிய அந்த கைலாஸம் நமக்கு மங்களம் அருள வேண்டும்.

यस्य प्राहुः स्वरूपं सकलदिविषदां सारसर्वस्वयोगं
यस्येषुः शार्ङ्गधन्वा समजनि जगतां रक्षणे जागरूकः ।
मौर्वी दर्वीकराणामपि च परिबृढः पूस्त्रयी सा च लक्ष्यं
सोऽव्यादव्याजमस्मानशिवभिदनिशं नाकिनां श्रीपिनाकः ॥ २॥

யஸ்ய ப்ராஹு: ஸ்வரூபம் ஸகலதிவிஷதாம் ஸாரஸர்வஸ்வயோகம்
யஸ்யேஷு: ஶார்ங்கதன்வா ஸமஜனி ஜகதாம் ரக்ஷணே ஜாகரூக: ।
மௌர்வீ தர்வீகராணமபி ச பரிப்ருட: பூஸ்த்ரயீ ஸா ச லக்ஷ்யம்
ஸோऽவ்யாதவ்யாஜமஸ்மானஶிவபிதநிஶம் நாகினாம் ஸ்ரீபினாக: ॥ 2

यस्य எந்த பிநாகத்தினுடைய स्वरूपं உருவத்தை सकलदिविषदां எல்லா தேவர்களுடைய सार-सर्वस्व-योगं முக்கிய ஸாராம்சங்களின் சேர்க்கையாக प्राहुः சொல்லுகின்றார்களோ, जगतां உலகங்களின் रक्षणे காப்பாற்றுவதில் जागरूकः ஜாக்ரதையோடுகூடிய शार्ङ्गधन्वा சார்ங்கம் என்னும் வில்லேஉடைய மஹாவிஷ்ணு यस्य எதற்க்கு इषुः பாணமாக समजनि ஆனரோ, अपि च மேலும் दर्वीकराणां பாம்புகளுக்கு परिबृढः அரசனுகிய வாஸுகி मौर्वी நாண் கயிறு ஆனனோ सा உலகத்தை துன்புறுத்திப் புகழ்பெற்ற அந்த पूस्त्रयी பட்டண உருவம் கொண்ட மூன்று அசுரர்களும் लक्ष्यं குறியாகவும்

ஆனார்களோ, नाकिनां தேவர்களுக்கு अनिशं எப்பொழுதும் अशिवभित् அமங்களத்தை அகற்றும் सः அந்த श्रीपिनाकः காந்தி பொருந்திய பினாகம் என்றவில்லு अव्याजं கபடமின்றி अस्मान् எங்களை अव्यात् காப்பாற்றவேண்டும்.

கருத்து:—எதனுடைய உருவம் எல்லா வானோர்களுடைய ஸாராம்சங்களும் ஒன்றாகப்பொருந்தி உண்டாகியிருக்கிறதோ, எதற்கு உலகை ஆளுவதில் ஊக்கம்கொண்ட நாராயணன் பாணமாயும், பாம்புகளின் அரசனான வாஸுகி நாண் கயிறாயும், த்ரிபுரர்கள் லக்ஷியமாகவும் இருக்கிறார்களோ, தேவர்களுடைய கஷ்டத்தை என்றும் அகற்றும் அந்தப் பரமசிவனது கையிலிருக்கும் பினாகம் என்ற தனுசு கபடமில்லாமல் நம்மைக் காப்பாற்றவேண்டும்.

आतङ्कावेगहारी सकलदिविपदामङ्घ्रिपद्माश्रयाणां
मातङ्गाद्युग्रदैत्यप्रकरतनुगलद्रक्तधाराक्तधारः ।
क्रूरः सूरायुतानामपि च परिभवं स्वीयभासा वितन्वन्
घोराकारः कुठारो दृढतरदुरिताख्याटवीं पाटयेन्नः ॥ ३ ॥

ஆதங்காவேகஹாரீ ஸகலதிவிஷதாமங்க்ரிபத்மாச்ரயாணாம்
மாதங்காத்யுக்ரதைத்யப்ரகரதனுகலத்ரக்தாராக்ததாரः |
க்ரூரः ஸூராயுதாநாமபி ச பரிபவம் ஸ்வீயபாஸா விதன்வன்
கோராகாரः குடாரோ த்ருடதரதுரிதாக்யாடவீம் பாடயேந் நः

अङ्घ्रिपद्माश्रयाणां தாமரைபோன்ற தன் திருவடியைத் தஞ்சமாய் அடைந்த सकलदिविपदां எல்லா தேவர்களுடையவும் आतङ्कावेग-हारी கவலையையும், துன்பத்தையும் அகற்றுகின்றதும் मातङ्गाद्युग्रदैत्यप्रकर-तनु गलद्रक्त-धाराक्त-धारः மாதங்கன் முதலிய கொடிய அசுரக்கூட்டத்தின் சரீரத்தினின்று பெருகுகின்ற இரத்தப்பெருக்கால் பூசப்பட்ட நுனியை உடையதும் क्रूरः கொடியதும் स्वीयभासा தன் காந்தியால் सूरायुतानां अपि பதினாயிரம் சூர்யன்களுக்கும் परिभवं அவ

மதிப்பை **चितन्वन् च** செய்துகொண்டும் **घोराकारः** பயங்கர வடிவம் கொண்டதும் ஆன **कुठारः** கோடாலி **नः** எங்களுடைய **दृढतर-दुरिताख्या-टवीं** மிகவும் த்ருடமான பாபம் என்னும் காட்டை **पाटयेत्** பிளந்து அழிக்கவேண்டும்.

கருத்து :—அடி பணியும் தேவர்களுடைய கவலையை அகற்றுவதும், மாதங்கன் முதலிய கொடிய அரக்கர்களின் இரத்தத்தைப் பூசிக்கொண்டதும், பதினுயிரம் சூர்யன்களையும் தனது ஒளியால் பழிப்பதும், பயங்கரமான உருவம் கொண்டதுமான சிவன் கையில் விளங்கும் கோடாலி மிகக் கடினமான நம்முடைய பாபக் காட்டை அழித்தருள வேண்டும்.

**कालारातेः कराग्रे कृतवसतिरुरःशाणशातो रिपूणां**
**काले काले कुलाद्रिप्रवरतनयया कल्पितस्नेहलेपः ।**
**पायान्नः पावकार्चिःप्रसरसखमुखः पापहन्ता नितान्तं**
**शूलः श्रीपादसेवाभजनरसजुषां पालनैकान्तशीलः ॥ ४ ॥**

காலாராதே: கராக்ரே க்ருதவஸதிருர:ஶாணஶாதோ ரிபூணாம்
காலே காலே குலாத்ரிப்ரவரதனயயா கல்பிதஸ்னேஹலேப: |
பாயாந்ந: பாவகார்சி:ப்ரஸரஸவமுக: பாபஹந்தா நிதாந்தம்
ஶூல: ஸ்ரீபாதஸேவாபஜனரஸஜுஷாம் பாலனைகாந்தஶீல: ‖ 4

**कालारातेः** யமனை வென்ற பரமசிவனுடைய **कराग्रे** கைநுனியில் **कृतवसतिः** வாஸம் செய்வதும் **रिपूणां** சத்ருக்களுடைய **उरःशाण-शातः** மார்பாகின்ற சாணைக்கல்லில் தீட்டப்பட்டதும் **काले काले** அவ்வப்பொழுது **कुलाद्रिप्रवर-तनयया** குல பர்வதங்களில் சிறந்த ஹிமவானின் பெண்ணுகிய பார்வதி அன்னையால் **कल्पित-स्नेह-लेपः** செய்யப்பட்ட எண்ணெயின் பூச்சோடு கூடியதும் **पावकार्चिः-प्रसर-सख-मुखः** அக்னியின் ஜ்வாலைபோன்ற நுனியை உடையதும், **नितान्तं** முற்றிலும் **पापहन्ता** தீவினையை ஒழிப்பதும் **श्रीपाद-सेवा-**

**भजन-रस-जुषां** சிவனின் திருவடியின் சேவையாகின்ற பக்தியின் ரசத்தை அனுபவிப்பவர்களை **पालने-कान्त शीलः** தவறாமல் காக்கும் இயல்புடையதுமான **शूलः** சூலம் **नः** நம்மை **पायात्** காக்கவேணும்.

கருத்து :—பரமசிவன் கையில் இருப்பதும், பகைவரின் மார்பாகிய சாணைக் கல்லில் தீட்டிப் பதம் பெற்றதும், அவ்வப்பொழுது பார்வதி தேவி எண்ணெய் தடவி செப்பனிட்டதும், நீண்டு வளர்ந்து வீசும் அக்னியின் ஜ்வாலை போன்ற நுனி உடையதும், பாபத்தை அகற்றுவதும், சிவன் மலரடி சேவித்து ரசம் அறிந்து அதில் ஆழ்ந்து கிடப்போரைக் காக்கும் இயல்புடையதுமான சூலம் நம்மை காப்பாற்றுக.

**देवस्याङ्काश्रयायाः कुलगिरिदुहितुः नेत्रकोणप्रचार-**
**प्रस्तारानत्युदारान् पिपठिषुरिव यो नित्यमत्यादरेण ।**
**आधत्ते भङ्गितुङ्गैरनिशमवयवैरन्तरङ्गं समोदं**
**सोमापीडस्य सोऽयं प्रदिशतु कुशलं पाणिरङ्गः कुरङ्गः ॥ ५ ॥**

தேவஸ்யாங்காஶ்ரயாயாஃ குலகிரிதுஹிதுஃ நேத்ரகோணப்ரசார-
ப்ரஸ்தாரானத்யுதாரான் பிபடிஷுரிவ யோ நித்யமத்யாதரேண |
ஆதத்தே பங்கிதுங்கைரநிஶமவயவைரந்தரங்கம் ஸமோதம்
ஸோமாபீடஸ்ய ஸோऽயம் ப்ரதிஶது குஶலம் பாணிரங்கஃ குரங்கஃ

**यः** எந்த மான் **देवस्य** பரமசிவனுடைய **अङ्काश्रयायाः** மடியில் வீற்றிருக்கும் **कुलगिरिदुहितुः** குலாசலமான ஹிமவானுடைய பெண்ணாகிய பார்வதியினுடைய **अत्युदारान्** பக்தர்களுக்கு அனுக்ரகம் செய்வதில் மிக்க தாராளமான **नेत्रकोण-प्रचार-प्रस्तारान्** கடைக்கண்களின் பலவிதமான பரவுதல்களை **नित्यं** என்றும் **अत्यादरेण** மிகுந்த ஆவலோடு **पिपठिषुरिव** படிக்க விருப்பம் கொண்டதுபோல் **भङ्गितुङ्गैः** வளைவுகளால் உயர்வுற்ற **अवयवैः** அவயவங்களால் **सोमापीडस्य** சந்திரனைத்

தலைக்கு அணியாகக் கொண்ட பரமசிவனுடைய अन्तरङ्गं உள்ளத்தை समोदं சந்தோஷத்தோடு கூடியதாக आधत्ते செய்கின்றனதோ, सः अयं அந்த पाणिरङ्गः பரமசிவன் கையை நர்த்தன ஸ்தானமாகக் கொண்ட कुरङ्गः மான் कुशलं க்ஷேமத்தை अनिशं எப்பொழுதும் प्रदिशतु கொடுக்கட்டும்.

கருத்து:—பரமசிவன் மடியில் வீற்றிருக்கும் பார்வதி தேவியின் கடைக்கண் பார்வைகளைக் கற்பதற்கு ஆவல் கொண்டதுபோல் தனது அவயவங்களை பற்பல பங்கங்கள் செய்து வளைத்துக்கொண்டு பரமசிவனுக்கு இன்பமூட்டுவதும், சிவன் கையில் இருப்பதுமான மான் நமக்கு க்ஷேமத்தை விளைவிக்கட்டும்.

குறிப்பு:—பரமசிவன் கையில் வேதம் மானுருவம் கொண்டிருப்பதாகப் புராணம் கூறுகிறது. அது உடம்பை பலவிதத்தில் பங்கம் (நர்த்தனத்திற் கேற்றபடி அசைத்தல்) செய்து கொண்டிருப்பதைப் பார்த்தால் பார்வதியின் கடைக்கண் பார்வையின் அசைத்தலை கவனித்துக் கற்றுக்கொள்வதற்கு அதற்கேற்றபடி உடம்பை அசைத்துக் கொள்வதுபோல் இருப்பதாக இந்த ச்லோகத்தில் கூறப்பட்டிருக்கிறது.

कण्ठप्रान्तावसज्जत्कनकमयमहाघण्टिकाघोरघोषैः
 कण्ठारावैरकुण्ठैरपि भरितजगच्चक्रवालान्तरालः ।
चण्डः प्रोद्दण्डशृङ्गः ककुदकबलितोत्तुङ्गकैलासशृङ्गः
 कण्ठेकालस्य वाहः शमयतु शमलं शाश्वतः शाक्करेन्द्रः ॥ ६ ॥

கண்ட²ப்ராந்தாவஸஜ்ஜத்கனகமயமஹாக⁴ண்டிகாகோ⁴ரகோ⁴ஷை:
கண்டா²ராவைரகுண்டை²ரபி ப⁴ரிதஜக³ச்சக்ரவாளாந்தராள: |
சண்ட³: ப்ரோத்³த³ண்ட³ச்ருங்க³: ககுத³கப³லிதோத்துங்க³கைலாஸ-
ச்ருங்க³:
கண்டே²காலஸ்ய வாஹ: சமயது சமலம் சாச்வத: சாக்வ-
ரேந்த்³ர: ‖ 6 ‖

कण्ठ-प्रान्त-अवसज्जत्-कनकमय-महाघण्टिका-घोरघोषैः கழுத்தின் ஓரத்தில் தொங்கும் பெரிய தங்க மணியினுடைய

பயங்கரமான முழக்கங்களாலும், **अकुण्ठैः** மழுங்காத (அதிகச் சத்தத்தோடு கூடிய) **कण्ठारावैः अपि** ஹம்பா காரங்களாலும் **भरित जगच्चक्रवालान्तरालः** உலக சக்ரத்தின் நடுவை நிரப்பியதும், **चण्डः** மிக க்ரூரமானதும் **प्रोद्दण्ड-शृङ्गः** பயங்கரமான கொம்பை உடையதும் **ककुद्-कबलितोत्तुङ्ग-कैलास-शृङ्गः** முதுகில் இருக்கும் ககுதத்தால் உயர்ந்த கைலாஸத்தின் சிகரத்தை ஜயித்ததும் **कण्ठेकालस्य** கழுத்தில் கறுப்பை உடையவரான பரமசிவனின் **वाहः** வாஹனமானதுமான **शाश्वतः** அழிவற்ற **शाक्करेन्द्रः** விருஷபராஜன் **शमलं** பாபத்தை **शमयतु** அகற்றட்டும்.

கருத்து :—கழுத்தில் கட்டிய தங்கமணியின் ஓசையினுலும், தன்னுடைய ஹம்பாகாரங்களாலும் உலகனைத்தையும் நிரப்புவதும், உயர்ந்த கொம்புடையதும், கைலையங்கிரியின் உயர்ந்த சிகரத்தையும் தோற்கடிக்கும் வெண்மையான திமிலை உடையதும் ஆன பரமசிவனுடைய வாஹனமாகிய அழிவற்ற விருஷப ராஜன் நமது தீவினையை அகற்ற வேண்டும்.

**निर्यद्दानाम्बुधारापरिमलतरलीभूतरोलम्बपाली-**
**झङ्कारैः शंकराद्रेः शिखरशतदरीः पूरयन् भूरिघोषैः ।**
**शार्वः सौवर्णशैलप्रतिमपृथुवपुः सर्वविघ्नापहर्ता**
**शर्वाण्याः पूर्वसूनुः स भवतु भवतां स्वस्तिदो हस्तिवक्त्रः ॥७॥**

நிர்யத்₃தா₃னாம்பு₃தா₄ராபரிமளதரளீபூ₄தரோலம்ப₃பாலீ-
ஜ₂ங்காரைஃ ஶங்கராத்₃ரேஃ ஶிக₂ரஶதத₃ரீஃ பூரயன் பூ₄ரிகோ₄-ஷைஃ ।
ஶார்வஃ ஸௌவர்ணஶைலப்ரதிமப்ருது₂வபுஃ ஸர்வவிக்₄னாபஹர்தா
ஶர்வாண்யாஃ பூர்வஸூனுஃ ஸ ப₄வது ப₄வதாம் ஸ்வஸ்திதோ₃ ஹஸ்திவக்த்ரஃ ॥ 7 ॥

नियत्-दानाम्बु-धारा-परिमल-तरलीभूत-रोलम्बपाली-झङ्कारैः பெருகுகின்ற மத ஜலதாரையின் மணத்தால் கவரப்பட்ட சஞ்சலமான வண்டுகளின் வரிசைகளின் ஜம் என்ற சப்தங்களாலும் भूरिघोषैः அதிகமான வீரிடுதல்களாலும் शङ्कराद्रेः பரமசிவன் மலையாகிய கைலாஸத்தின் शिखरशतदरीः நூற்றுக்கணக்கான சிகரங்களில் இருக்கும் குகைகளை पूरयन् நிரப்பிக்கொண்டு शार्वः பரமசிவனின் பிள்ளையாயும் सौवर्ण-शैल-प्रतिम-पृथु-वपुः தங்க மலை எனப்படும் மேரு பர்வதத்திற்கு ஒப்பான பருத்த சரீரத்தை உடையவரும் सर्व-विघ्ना-पहर्ता எல்லா இடையூறுகளையும் அகற்றுபவரும் शर्वाण्याः பார்வதியின் पूर्वसूनुः முதல் பிள்ளையானவரும் ஆன सः हस्तिवक्त्रः அந்த யானை முகம் உடைய கணபதி भवतां உங்களுக்கு स्वस्तिदः க்ஷேமத்தை கொடுப்பவராக भवतु இருக்கட்டும்.

கருத்து:—தனது கன்னத்திலிருந்து பெருகும் மத ஜலத்தின் வாஸனையால் கவரப்பட்ட வண்டுகளின் ஜங்காரங்களாலும், தனது வீரிடுதல்களாலும் கைலாஸத்தின் உச்சியில் இருக்கும் குகைகளை நிரப்பிக்கொண்டும், தங்கமலைக்கொத்த மேனியோடும், எல்லா இடையூறுகளையும் அகற்றுபவரும், யானைமுகம் கொண்டவரும், பார்வதி பரமேச்வரர்களின் முதல் பிள்ளையுமாகிய விநாயகர் உங்களுக்கு க்ஷேமத்தை கொடுப்பவராக இருக்கட்டும்.

यः पुण्यैर्देवतानां समजनि शिवयोः श्लाघ्यवीर्यैकमत्यात्
यन्नाम्नि श्रूयमाणे दितिजभटघटा भीतिभारं भजन्ते ।
भूयात्सोऽयं विभूत्यै निशितशरशिखापाटितक्रौञ्चशैलः
संसारागाधकूपोदरपतितसमुत्तारकस्तारकारिः ॥ ८ ॥

யஃ புண்யைர்தேவதானாம் ஸமஜனி ஶிவயோஃ ஶ்லாக⁴யவீர்யைக-மத்யாத்
யன்னாம்னி ஶ்ரூயமாணே திதிஜபடகடா பீதிபாரம் பஜந்தே ।

பூ⁴யாத்ஸோऽயம் விபூ⁴த்யை நிஶிதஶரஶிகா²பாடிதக்ரௌ-
ஞ்சஶைல:
ஸம்ஸாராகா³த⁴கூபோத³ரபதிதஸமுத்தாரகஸ்தாரகாரி: ॥ 8 ॥

**यः** எந்த ஸ்கந்தன் **देवतानां** தேவதைகளுடைய **पुण्यैः** புண்யங்களால் **शिवयोः** பார்வதீ பரமேச்வரர்களுடைய **श्लाघ्यवीर्यैकमत्यात्** புகழத்தக்க ஒத்துமையினல் **समजनि** உண்டானரோ **यन्नाम्नि** எவருடைய பெயர் **श्रूयमाणे** கேட்கப்படும்பொழுது **दितिज-भट-घटाः** அசுர வீரர்களின் கூட்டங்கள் **भीतिभारं** அதிக பயத்தை **भजन्ते** அடைகின்றார்களோ **निशित-शर-शिखा-पाटित-क्रौञ्चशैलः** கூரான பாணத்தின் நுனியால் க்ரௌஞ்சமலையைப் பிளந்தவரும் **संसारागाध-कूपो-दर-पतित-समुत्तारकः** சம்சாரம் என்ற ஆழமான கிணற்றினுள் விழுந்தவர்களைக் கரையேற்றுபவரும் ஆன **सः अयं** அந்த **तारकारिः** தாரகனைவென்ற ஸ்கந்தன் **विभूत्यै** ஐச்வர்யத்தின்பொருட்டு **भूयात्** ஆகவேண்டும்.

கருத்து:—தேவர்களின் புண்ய வசத்தால் பார்வதீ பரமேச்வரர்களுக்குப்புதல்வனய் அவதரித்தவரும், தனது கூரிய பாண நுனியால் க்ரௌஞ்ச மலையைப் பிளந்தவரும், தன் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் அசுரர்கள் பயமுறக் கூடிய பராக்ரமம் வாய்ந்தவரும், சம்சார மென்ற ஆழமான கிணற்றில் விழுந்தவர்களைக் கரையேற்றுபவருமான, தாரகனை வென்ற முருகப்பெருமான் நமக்கு விசேஷமான ஐச்வர்ய மளிக்கவேண்டும்.

आरूढः प्रौढवेगप्रजवितपवनं तुङ्गतुङ्गं तुरङ्गं
चेलं नीलं वसानः करतलविलसत्काण्डकोदण्डदण्डः ।
रागद्वेषादिनानाविधमृगपटलीभीतिकृद्भूतभर्ता
कुर्वन्नाखेटलीलां परिलसतु मनःकानने मामकीने ॥ ९ ॥

ஆரூடஃ ப்ரௌடவேகப்ரஜவிதபவனம் துங்கதுங்கம் துரங்கம்
சேலம் நீலம் வஸானஃ கரதலவிலஸத்காண்டகோதண்டதண்டஃ ।
ராகத்வேஷாதிநாநாவிதம்ருகபடலீபீதிக்ருத் பூதபர்தா
குர்வன்னாகேடலீலாம் பரிலஸது மனஃகானனே மாமகீனே ॥ 9 ॥

**प्रौढवेग - प्रजवित - पवनं** அதிகமான வேகத்தால் காற்றைத் தோற்கடித்து **तुङ्गतुङ्गं** அதிக உயரமான **तुरङ्गं** குதிரையில் **आरूढः** ஏறிக் கொண்டவரும் **नीलं** கறுப்பான **चेलं** வஸ்திரத்தை **वसानः** கட்டிக்கொண்டவரும் **करतल-विलसत्-काण्ड-कोदण्ड-दण्डः** கையில் விளங்கும் வில்லை உடையவரும் **भूतभर्ता** ப்ரமத கணங்களை ஆட்சி செய்பவரும் ஆன சாஸ்தா **मामकीने** என்னுடையதான **मनः-कानने** மனதாகிற காட்டில் **राग-द्वेषादि-नानाविध मृग-पटली-भीति-कृत्** ஆசை, வெறுப்பு முதலிய பற்பல விலங்குகளின் கூட்டத்திற்கு பயத்தைச் செய்துகொண்டு **आखेटलीलां** வேட்டை என்னும் விளையாட்டை **कुर्वन्** செய்கிறவராக **परिलसतु** விளங்கட்டும்.

கருத்து :—காற்றினும் கடிய வேகமுடைய உயர்ந்த குதிரையில் ஏறிக்கொண்டு கறுத்த துணியை உடுத்திக் கொண்டு கையில் வில்லேந்தி நிற்கும் ப்ரமத கணங்களின் நாதனாகிய ஹரிஹர புத்திரன் (சாஸ்தா) எனது மனமாகின்ற காட்டில் ஆசை, வெறுப்பு முதலிய விலங்குகளை வேட்டையாடிக் கொண்டு எப்பொழுதும் இருக்க வேண்டும்.

अम्भोजाभ्यां च रम्भारथचरणलताद्वन्द्वकुम्भीन्द्रकुंभैः
बिम्बेनेन्दोश्च कम्बोरुपरि विलसता विद्रुमेणोत्पलाभ्याम् ।
अम्भोदेनापि संभावितमुपजनिताडम्बरं शम्बरारेः
शंभोः संभोगयोग्यं किमपि धनमिदं संभवेत् संपदे नः ॥ १० ॥

அம்ஹோஜாஹ்யாம் ச ரம்ஹாரதசரணலதாத்வந்த்வகும்ஹீந்த்ர-
கும்ஹை:
ஶம்ஹேனேந்தோஶ்ச கம்ஹோருபரிவிலஸதா வித்ருமேணோத்-
பலாஹ்யாம் ।
அம்ஹோதேனாபி ஸம்ஹாவிதமுபஜனிதாடம்ஹரம் ஶம்ஹராரே:
ஶம்ஹோ: ஸம்ஹோகயோக்யம் கிமபி தனமிதம் ஸம்ஹவேத்
ஸம்பதே ந: ॥ 10 ॥

**अम्भोजाभ्यां** இரண்டு தாமரைகளாலும் **रम्भा रथचरण-लताद्वन्द्व-कुम्भीन्द्रकुम्भैः च** வாழை, தேர்ச் சக்கிரம், கொடி, சிறந்த யானையின் இரண்டு கும்பங்கள் இவைகளாலும் **कम्बोः** சங்கினுடைய **उपरि** மேலே **विलसता** விளங்குகின்ற **इन्दोः** சந்திரனுடைய **बिम्बेन च** பிம்பத்தாலும் **विद्रुमेण** பவழத்தாலும் **उत्पलाभ्यां** இரண்டு அல்லி மலர்களாலும் **अम्भोदेनापि** மேகத்தாலும் **संभावितं** கௌரவிக்கப்பட்டதும் **उपजनिताडम्बरं** உண்டாக்கப்பட்ட ஆடம்பரத்தை உடையதும் **शम्भोः** பரமசிவனுக்கு **संभोगयोग्यं** சேர்க்கைக்கு தக்கதுமான **शम्बरारेः** சம்பரன் என்ற அசுரனை வென்ற மன்மதனுடைய **किमपि** இன்னது என்று சொல்ல இயலாத **इदं धनं** இந்த தனம் **नः** நமக்கு **सम्पदे** சம்பத்திற்காக **संभवेत्** ஏற்படவேண்டும்.

கருத்து :—தாமரைகள் போன்ற திருவடியும், வாழை போன்ற துடைகளும், தேர் சக்கிரத்திற் கொப்பான ஜகனமும், கொடிபோன்ற ரோமலதையும், யானையின் இரண்டு மஸ்தகத்திற்குச் சமமான கொங்கைகளும், சங்கு போன்ற கழுத்திற்குமேல் துலங்கும் சந்திர பிம்பம் போன்ற முகமும், அதன் நடுவே பவழம்போன்ற இதழும், அல்லியின் தளம்போன்ற கண்களும், மேகம்போன்ற கூந்தலும் படைத்து, பரமசிவனோடு சேர்ந்து இணைபிரியாமலிருக்கும் மன்மதனுடைய குலதனம் போன்ற பார்வதி தேவி நமக்கு ஸம்பத்தை வளர்க்கவேண்டும்.

**குறிப்பு** :—இந்த ச்லோகத்தில் தேவியை மன்மதனுடைய தனமாக வர்ணித்திருக்கிறது. தேவியினுடைய அவயவங்களைத் தாமரை,

வாழை முதலானவற்றோடு சமமாய் இருப்பதாகவும் கூறி இருக்கிறது. ஆனால் தேவியையோ, தேவியின் அவயவங்களையோ குறிக்கும் சொற்கள் இங்கு காணப்படவில்லை. ஸம்ஸ்கிருத காவ்யம் படித்து பழக்கமிருப்போருக்கு இந்த ச்லோகத்தை வாசித்த உடனேயே தேவியையும், தேவியின் உருப்புக்களையும் தான் இந்த ச்லோகத்தில் குறிக்கிறார் கவி என்று அறியமுடியும். இவ்விதம் வர்ணிப்பது ருபகாதிசயோக்தி என்று வழங்கும் சிறந்த அலங்காரமாகும்.

वेणीसौभाग्यविस्मापिततपनसुताचारुवेणीविलासान्
वाणीनिर्धूतवाणीकरतलविधृतोदारवीणाविरावान् ।
एणीनेत्रान्तभंगीनिरसननिपुणापाङ्गकोणानुपासे
शोणान्प्राणानुदूढप्रतिनवसुषमाकन्दलानिन्दुमौलेः ॥ ११ ॥

வேணீஸௌபாக்யவிஸ்மாபிததபனஸுதாசாருவேணீவிலாஸான்
வாணீநிர்தூதவாணீகரதலவித்ருதோதாரவீணாவிராவான் |
ஏணீநேத்ராந்தபங்கீநிரஸனநிபுணாபாங்ககோணானுபாஸே
ஶோணான்ப்ராணானுதூடப்ரதிநவஸுஷமாகந்தலானிந்து-
மௌளே: || 11 ||

वेणी - सौभाग्य - विस्मापित - तपन - सुता-चारु-वेणी-विलासान् பின்னலின் அழகால் வியக்கும்படி செய்யப்பட்ட சூர்யன் பெண்ணாகிய யமுனையின் அழகிய ப்ரவாஹத்தின் விலாஸங்களை உடையவைகளும் वाणी - निर्धूत- वाणी -करतल-विधृतो-दार-वीणाविरावान् வார்த்தையால் உதறித் தள்ளப்பட்ட ஸரஸ்வதியின் கையில் தாங்கிய உயர்ந்த வீணையின் நாதத்தை உடையவைகளும் एणी-नेत्रान्तभङ्गी-निरसन-निपुणा-पाङ्गकोणान् பெண் மானுடைய கடைக்கண்ணின் பங்கங்களை விரட்டுவதில் திறமை பூண்ட கடாக்ஷங்களை உடையவைகளும் उदूढ-प्रतिनव-सुषमा-कन्दलान् புதிது புதிதாய்த் தளிர்க்கும் காந்தியை உடையவைகளும் ஆன इन्दुमौलेः பரமசிவனுடைய शोणान् சிவந்த प्राणान् ப்ராணங்களை (ப்ராணங்களைப்போன்ற பார்வதியை) उपासे ஸேவிக்கின்றேன்.

கருத்து :—யமுனையின் ப்ரவாஹம்போல் கறுத்து நீண்ட பின்னலும், கலைமகளின் கையில் விளங்கும் வீணையின் நாதம்போன்ற குரலும், பெண்மானின் கடைக்கண் போன்ற கடாக்ஷங்களும் வாய்ந்த பிறை சூடியாகிய பரமசிவனுடைய ப்ராணங்கள் போன்ற பார்வதி தேவியை ஸேவிக்கின்றேன்.

**नृत्तारंभेषु हस्ताहतमुरजधिमिद्धिंकृतैरत्युदारैः**
**चित्तानन्दं विधत्ते सदसि भगवतः सन्ततं यः स नन्दी ।**
**चण्डीशाद्यास्तथाऽन्ये चतुरगुणगणप्रीणितस्वामिसत्का-**
**रोत्कर्षोद्यत्प्रसादाः प्रमथपरिवृढाः पान्तु सन्तोषिणो नः ॥१२॥**

ந்ருத்தாரம்பேஷு ஹஸ்தாஹதமுரஜயிமித்யிம்க்ருதைரத்யுதாரை:
சித்தானந்தம் வியத்தே ஸதஸி பகவத: ஸந்ததம் ய: ஸ நந்தீ |
சண்டீசாத்யாஸ்தயாऽன்யே சதுரகுணகணப்ரீணிதஸ்வாமிஸத்கா-
ரோத்கர்ஷோத்யத்ப்ரஸாதா: ப்ரமதபரிவ்ருடா: பாந்து ஸந்தோஷிணோ ந: ॥ 12 ॥

**यः** எவர் **भगवतः** பகவானுடைய **नृत्तारंभेषु** ந்ருத்தம் தொடங்கும் பொழுது **सदसि** ஸபையில் **अत्युदारैः** மிகவும் புகழத்தக்க **हस्ता-हत-मुरज-धिमिद्धिंकृतैः** கையால் அடிக்கப்பட்ட மிருதங்கத்தின் திமி திம் என்ற சப்தங்களால் **सन्ततं** எப்பொழுதும் **चित्तानन्दं** பகவானுடைய மனதிற்கு ஆனந்தத்தை **विधत्ते** செய்கின்றாரோ **सः नन्दी** அந்த நந்தியும், **तथा** அப்படியே **चतुर-गुण-गण-प्रीणित-स्वामि-सत्कारो-त्कर्षो-द्यत्प्रसादाः** சாமர்த்தியமான குணக்குவியல்களால் த்ருப்தி செய்யப்பட்ட பகவான் செய்த ஸத்காரத்தினால் உண்டான சந்தோஷமுடையவர்களும் **सन्तोषिणः** எப்பொழுதும் இன்புற்றிருப்பவர்களும் ஆன **अन्ये** மற்ற **चण्डीशाद्याः** சண்டேசர் முதலிய **प्रमथपरिवृढाः** ப்ரமத கணங்களில் சிறந்தவர்கள் **नः** நம்மை **पान्तु** காக்கட்டும்.

கருத்து :—பகவானுடைய சபையில் நர்த்தனம் ஆரம்பமாகும்பொழுது திமிதிம் என்று மத்தளத்தை கையால் தட்டி பரமசிவனை சந்தோஷிக்கச் செய்யும் நந்தியும், தத்தம் உயர்ந்த குணக்குவியல்களால் பரமசிவனை த்ருப்தி செய்து அவருடைய அனுக்ரகம் பெற்றவர்களும், எப்போழுதும் ஆனந்தப் படுகிறவர்களும் ஆன சண்டீசன் முதலிய ப்ரமதகணங்களின் தலைவர்களும் நம்மைப்பாலித்து அருளவேண்டும்.

**मुक्तामाणिक्यजालैः परिकलितमहासालमालोकनीयं**
**प्रत्युप्तानर्घरत्नैर्दिशिदिशि भवनैः कल्पितैर्दिक्पतीनाम् ।**
**उद्यानैरद्रिकन्यापरिजनवनितामाननीयैः परीतं**
**हृद्यं हृद्यस्तु नित्यं मम भुवनपतेर्धाम सोमार्धमौलेः ॥ १३ ॥**

முக்தாமாணிக்யஜாலை: பரிகலிதமஹாஸாலமாலோகனீயம்
ப்ரத்யுப்தானர்வரத்னைர்திஶிதிஶி பவனை: கல்பிதைர்திக்பதீனாம் |
உத்யானைரத்ரிகன்யாபரிஜனவனிதாமானனீயை: பரீதம்
ஹ்ருத்யம் ஹ்ருத்யஸ்து நித்யம் மம புவனபதேர்தாம ஸோமார்த
மௌலே: ‖ 13 ‖

**मुक्ता-माणिक्य-जालैः** முத்துக்கள், மாணிக்கங்கள் இவைகளின் கூட்டங்களால் **परिकलित-महासालम्** கட்டிய பெரிய கோட்டை மதிலை உடையதும் **आलोकनीयं** பார்க்கத் தக்கதும், **प्रत्युप्ता-नर्घ-रत्नैः** விலை மதிக்கமுடியாத இரத்தினங்கள் இழைத்தவைகளும், **दिशि दिशि** ஒவ்வொரு திக்கிலும் **कल्पितैः** கட்டப்பட்டவைகளும், ஆன **दिक्पतीनां** திக்பாலர்களுடைய **भवनैः** வீடுகளாலும், **अद्रिकन्या-परिजन-वनिता-माननीयैः** பார்வதியின் வேலைக்காரப் பெண்களால் அன்போடு வளர்க்கப்பட்டதும் **उद्यानैः** தோட்டங்களாலும் **परीतं** சூழப்பட்டதும் ஆன **हृद्यं** அழகிய **भुवनपतेः** உலகத்திற்கே பதியாகிய **सोमार्धमौलेः** அர்த்த சந்திரனைத் தலையில் அணிந்த பரமசிவனுடைய **धाम** இருப்பிடம் **नित्यं** எப்பொழுதும் **मम** என்னுடைய **हृदि** உள்ளத்தில் **अस्तु** இருக்கட்டும்.

கருத்து:—முத்துக்களும், மாணிக்கங்களும் இழைத்த கோட்டைச் சுவர்களாலும், உயர்ந்த இரத்தினங்கள் இழைத்து ஒவ்வொரு திக்கிலும் கட்டிய திக்பாலர்களின் வீடுகளாலும், பார்வதியின் தாதிகள் உலவும் அழகிய தோட்டங்களாலும் சூழப்பட்டு, அழகுவாய்ந்து பார்க்கத் தக்கதாய் விளங்கும் உலகநாதனுகிய பரமசிவனின் இருப்பிடம் என்றும் எனது உள்ளத்தில் விளங்கட்டும்.

स्तम्भैर्जम्भारिरत्नप्रवरविरचितैः संभृतोपान्तभागं
शुम्भत्सोपानमार्गं शुचिमणिनिचयैः गुम्भितानल्पशिल्पम् ।
कुम्भैस्सम्पूर्णशोभं शिरसि सुघटितैः शातकुम्भैरपाङ्कैः
शम्भोः संभावनीयं सकलमुनिजनैः स्वस्तिदं स्यात्सदो नः ॥१४॥

ஸ்தம்பை⁴ர்ஜம்பா⁴ரிரத்னப்ரவரவிரசிதை꞉ஸம்ப்⁴ருதோபாந்தபா⁴க³ம்
ஶும்ப⁴த்ஸோபானமார்க³ம் ஶுசிமணிநிசயை꞉ கு³ம்பி⁴தானல்ப-ஶில்பம் ।
கும்பை⁴ஸ்ஸம்பூர்ணஶோப⁴ம் ஶிரஸி ஸுக⁴டிதை꞉ ஶாதகும்பை⁴-ரபாங்கை³꞉
ஶம்போ⁴꞉ ஸம்பா⁴வனீயம் ஸகலமுனிஜனை꞉ ஸ்வஸ்தித³ம் ஸ்யாத்-ஸதோ³ ந꞉ ॥ 14 ॥

जम्भारि-रत्न-प्रवर विरचितैः சிறந்த இந்திர நீலக்கற்களால் செய்யப்பட்ட स्तम्भैः தூண்களால் संभृतो-पान्त-भागं சூழப்பட்ட சுற்று ப்ரதேசத்தை உடையதும் शुचिमणिनिचयैः வெள்ளை இரத்தனங்களின் கூட்டங்களால் शुम्भत्सोपानमार्गं விளங்கும் படிக்கட்டை உடையதும் गुम्फितानल्पशिल्पम् சேர்க்கப்பட்ட மேன்மை பொருந்திய சித்திரக் கலைகளை உடையதும், शिरसि மேல்பக்கத்தில் सुघटितैः நன்ருக அமைக்கப்பட்டவைகளும் अपङ्कैः அழுக்கற்றவைகளும் ஆன शातकुम्भैः தங்கமயமான कुम्भैः குடங்களால் संपूर्णशोभं காந்தி நிறைந்ததும் सकल-मुनिजनैः எல்லா மஹர்ஷிகளாலும் संभावनीयं கௌரவிக்கத் தக்கதுமான शम्भोः பரமசிவனுடைய सदः சபை नः

நமக்கு **स्वस्तिदं** க்ஷேமத்தைக் கொடுப்பதாக **स्यात्** இருக்க வேண்டும்.

கருத்து :—இந்திர நீலக்கல்லாலான தூண்களால் ஓரங்களில் தாங்கப் பட்டதும், வெள்ளை இரத்தினங்கள் இழைத்து ஒளிரும் படிக்கட்டை உடையதும், மேல் உச்சியில் தங்கக்குடங்கள் அமைந்ததும், மாமுனிவர்களும் வந்து வீற்றிருக்கும் பரமசிவன் சபை நமக்கு க்ஷேமத்தை அளிக்க வேண்டும்.

**न्यस्तो मध्ये सभायाः परिसरविलसत्पादपीठाभिरामो**
**हृद्यः पादैश्चतुर्भिः कनकमणिमयैरुच्चकैरुज्ज्वलात्मा ।**
**वासोरत्नेन केनाप्यधिकमृदुतरेणास्तृतो विस्तृतश्रीः**
**पीठः पीडाभरं नः शमयतु शिवयोः स्वैरसंवासयोग्यः ॥ १५॥**

ந்யஸ்தோ மத்யே ஸபாயா: பரிஸரவிலஸத்பாதபீடாபிராமோ
ஹ்ருத்ய: பாதைஶ்சதுர்பி: கனகமணிமயைருச்சகைருஜ்ஜ்வலாத்மா
வாஸோரத்னேன கேனாப்யதிகம்ருதுதரேணாஸ்த்ருதோ விஸ்த்ருத ஸ்ரீ:
பீட: பீடாபரம் ந: ஶமயது ஶிவயோ: ஸ்வைரஸம்வாஸயோக்ய:

**सभायाः** ஸபையினுடைய **मध्ये** நடுவில் **न्यस्तः** போடப் பட்டதும், **परिसर-विलसत्-पादपीठा-भिरामः** அருகில் விளங்குகின்ற பாதம் வைத்துக்கொள்ளும் பீடத்தில் அழகாயும், **हृद्यः** கவர்ச்சி வாய்ந்ததும் **उज्ज्वलैः** உயர்ந்தவைகளும், **कनकमणिमयैः** தங்கம், இரத்தினங்கள் இவைகளால் ஆனவைகளும் ஆன **चतुर्भिः** நான்கு **पादैः** கால்களால் **उज्ज्वलात्मा** துலங்குகின்றதும், **अधिकमृदुतरेण** மிகவும் மெல்லிய **केनापि** சொல்ல இயலாத மேன்மை கொண்டவொரு **वासोरत्नेन** சிறந்த வஸ்திரத்தினால் **आस्तृतः** மூடப்பட்டதும் **विस्तृतश्रीः** பரவிய ஒளியை உடையதும், **शिवयोः** பார்வதீ பரமேச்வரர்களுக்கு **स्वैर-संवास-योग्यः** தனிமையில் இஷ்

டப்படி இருப்பதற்கு ஏற்றதும் ஆன **पीठः** பீடம் **नः** நம்முடைய **पीडाभरं** துன்பத்தின் பாரத்தை **शमयतु** ஒடுக்கட்டும்.

கருத்து:—அருகில் கால்வைத்துக் கொள்ளும் பீடத்தோடு கூடியதும், இரத்தினம் இழைத்த நாலு தங்கக் கால்களால் தாங்கியதும், மேலே மெல்லிய உயர்ந்த வஸ்திரம் விரித்ததும், பார்வதீ பரமேச்வரர்களுக்குத் தனிமையில் இருக்க ஏற்றதும் ஆன பரமசிவன் சபைக்கு நடுவே போடப்பட்ட பீடம் நமது துன்பத் தொகுதியை ஒடுக்கவேண்டும்.

**आसीनस्याधिपीठं त्रिजगदधिपतेरङ्घ्रिपीठानुषक्तौ**
**पाथोजाभोगभाजौ परिमृदुलतलोल्लासिपद्मादिरेखौ ।**
**पातां पादावुभौ तौ नमदमरकिरीटोल्लसच्चारुहीर-**
**श्रेणीशोणायमानोन्नतनखदशकोद्भासमानौ समानौ ॥ १६ ॥**

ஆஸீனஸ்யாதிபீடம் த்ரிஜகததிபதேரங்க்ரிபீடானுஷக்தௌ
பாதோஜாபோகபாஜௌ பரிம்ருதுலதலோல்லாஸிபத்மாதி-
ரேகௌ ।
பாதாம் பாதாவுபௌ தௌ நமதமரகிரீடோல்லஸச்சாருஹீர
ச்ரேணீசோணாயமானோன்னதநகதசகோத்பாஸமானௌ
ஸமானௌ ॥ 16 ॥

**अधिपीठं** பீடத்தில் **आसीनस्य** உட்கார்ந்தவரான **त्रिजगदधिपतेः** மூன்று உலகங்களுக்கும் அதிபதியாகிய பரமசிவனுடைய, **अङ्घ्रिपीठानुषक्तौ** கால்கள் வைத்துக்கொள்ளும் பீடத்தில் அமைந்திருப்பவைகளும் **पाथोजा-भोग-भाजौ** தாமரைகளின் உருவத்தை தரிப்பவைகளும் **परिमृदुल-तलो-ल्लासि-पद्मादि-रेखौ** மிகவும் மிருதுவான உள்ளங்காலில் விளங்கும் தாமரை முதலிய கோடுகளை உடையவைகளும் **नमदमर-किरीटो-ल्लस-चारु-हीर-श्रेणी-शोणायमानो-न्नत-नख-दशको-द्भासमानौ** வணங்கும் தேவர்களுடைய கிரீடங்களில் விளங்கும் அழகிய இரத்தினங்களின் வரிசைகளால் சிவந்த உயர்ந்த பத்து நகங்களோடு பிரகாசிப்பவைகளும் **समानौ** ஒன்றுக்

2

கொன்று சமானமானவைகளும் ஆன **तौ** அந்த புகழ்பெற்ற **उभौ** இரண்டு **पादौ** கால்கள் **पातां** காப்பாற்றட்டும்.

கருத்து :—தாமரை போன்றவைகளும், மெல்லிய உள்ளங் காலில் தாமரை முதலிய ரேகைகளமைந்தவைகளும், பணியும் தேவர்களின் கிரீடங்களில் பதித்த இரத்தினங்களின் ஒளியால் சிவந்த பத்து நகங்களோடு கூடியவைகளும், ஒன்றுக்கொன்று ஒத்தவைகளும் ஆன பாதபீடத்தில் வைத்த, சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கும் பரமசிவனுடைய பாதங்கள் நம்மைக் காப்பாற்றட்டும்.

**यन्नादो वेदवाचां निगदति निखिलं लक्षणं पक्षिकेतोः**
**लक्ष्मीसंभोगसौख्यं विरचयति ययोश्चापरो रूपभेदः ।**
**शंभोस्संभावनीये पदकमलसमासङ्गतस्तुङ्गशोभे**
**माङ्गल्यं नः समग्रं सकलसुखकरे नूपुरे पूरयेताम् ॥ १७ ॥**

யன்னாதோ வேதவாசாம் நிகததி நிகிலம் லக்ஷணம் பக்ஷிகேதோஃ
லக்ஷ்மீஸம்போகஸௌக்யம் விரசயதி யயோஶ்சாபரோ ரூபபேதஃ ।
ஶம்போஸ்ஸம்பாவனீயே பதகமலஸமாஸங்கதஸ்துங்கஶோபே
மாங்கல்யம் நஃ ஸமக்ரம் ஸகலஸுககரே நூபுரே பூரயேதாம் ॥ 17

**यन्नादः** எவைகளுடைய சப்தம் **वेदवाचां** வேதவாக்குகளுடைய **निखिलं** எல்லா **लक्षणं** லக்ஷணத்தையும் **निगदति** சொல்லுகின்றதோ, **ययोः** எவைகளுடைய **अपरः** மற்றொரு **रूपभेदः** ரூப விசேஷம் **पक्षिकेतोः** கருடனைக் கொடியாகக் கொண்ட மஹாவிஷ்ணுவிற்கு **लक्ष्मी-संभोग-सौख्यं** லக்ஷ்மியோடு சேருவதால் உண்டான சௌக்கியத்தை **विरचयति** செய்கின்றதோ, **संभावनीये** எல்லோராலும் கௌரவிக்கத்தக்கதுகளும் **शम्भोः** பரமசிவனுடைய **पद-कमल-समासङ्गतः** தாமரைபோன்றகால்களின் சேர்க்கையால் **तुङ्गशोभे** உயர்ந்த சோபையை உடையவைகளும் **सकल-सुख-करे** எல்லோருக்

கும் இன்பமூட்டுகின்றவைகளும் ஆன **नूपुरे** கால் சலங்கைகள் **नः** நமக்கு **समग्रं** பூர்ணமான **माङ्गल्यं** மங்களத்தை **पूरयेताम्** பூர்த்தி செய்யட்டும்.

கருத்து:—(ஆதிசேஷன் பரமசிவனின் கால் சலங்கைகளாக இருக்கிறார். பதஞ்ஜலிமுனி ஆதிசேஷனுடைய அவதாரம். அந்தப் பதஞ்ஜலி மஹரிஷியே வேதங்களுக்கு இலக்கணம் கூறும் வ்யாகரணத்திற்கு பாஷ்யம் செய்திருக்கிறார். இவ்விஷயங்களை அடிப்படையாக வைத்துக்கொண்டு இந்த ச்லோகத்தை பரமாசார்யர் இயற்றியுள்ளார்.)

எவைகளின் சப்தம் வேதங்களின் இலக்கணத்தைக் கூறுகின்றதோ, மகாவிஷ்ணுவின் படுக்கையாக இருந்து கொண்டு எவைகள் அவருக்கு லக்ஷ்மியின் சேர்க்கையால் உண்டாகும் சௌக்கியத்தை உண்டாக்குகின்றனவோ, பரமசிவனின் பாதகமலங்களோடு சேருவதால் எவைகள் அதிக ஒளி பெற்று விளங்குகின்றனவோ, எல்லோருக்கும் பூஜிக்கத் தக்கதும், எல்லா சுகத்தை கொடுப்பவைகளுமான அந்தப் பாத கமலங்களில் அணிந்த சலங்கைகள் நமக்கு மங்களத்தை உண்டாக்கவேண்டும்.

**अङ्गे शृङ्गारयोनेः सपदि शलभतां नेत्रवह्नौ प्रयाते**
**शत्रोरुद्धृत्य तस्मादिषुधियुगमधोन्यस्तमग्रे किमेतत् ।**
**शङ्कामित्थं नतानाममरपरिषदामन्तरङ्कूरयत्त-**
**त्संघातं चारु जङ्घायुगमखिलपतेरंहसां संहरेन्नः ॥ १८ ॥**

அங்கே ஶ்ருங்காரயோனேஃ ஸபதி ஶலபதாம் நேத்ரவஹ்னௌ ப்ரயாதே
ஶத்ரோருத்ருத்ய தஸ்மாதிஷுதியுகமதோந்யஸ்தமக்ரே கிமேதத் |
ஶங்காமித்தம் நதானாமமரபரிஷதாமந்தரங்கூரயத்தத்-
ஸங்காதம் சாரு ஜங்காயுகமகிலபதேரம்ஹஸாம் ஸம்ஹரேன்னஃ

**शृङ्गारयोनेः** மன்மதனுடைய **अङ्गे** சரீரம் **नेत्रवह्नौ** கண் நெருப்பில் **शलभतां** விட்டில்பூச்சியின் தன்மையை **सपदि**

உடனே **प्रयाते** அடைந்தபொழுது **तस्मात्** அந்த **शत्रोः** சத்ருவினிடமிருந்து **एतत्** இந்த **इषुधियुगं** இரண்டு அம்புறுத் தூணிகளை **उद्धृत्य** எடுத்து **अग्रे** எதிரில் **अधः** கீழே **न्यस्तं किं** வைக்கப் பட்டதா என்ன? **इत्थं** இம்மாதிரி **नतानां** வணங்கிய **अमरपरिषदां** தேவர்களின் கூட்டங்களின் **अन्तः** மனதில் **शङ्कां** சந்தேகத்தை **अङ्कुरयत्** உண்டாக்குகின்ற **चारु** அழகிய, **अखिलपतेः** எல்லாவற்றிற்கும் பதியாகிய பரமசிவனுடைய **जङ्घायुगं** இரண்டு ஜங்கைகளும் **नः** நம்முடைய **अंहसां** பாபங்களுடைய **सङ्घात** கூட்டத்தை **संहरेत्** அழிக்கவேண்டும்.

கருத்து :—கண்ணிலிருந்தெழுந்த அக்னியில் மன்மதன் விட்டிற்பூச்சிபோல் நொடிப்பொழுதில் நீறியபொழுது அவனுடைய இரண்டு அம்புறுத்தூணிகள் தனியாக எடுக்கப் பட்டு கீழே வைக்கப்பட்டிருக்கின்றனவோ என்று காலில் விழுந்து பணிந்த தேவர்களெல்லாம் சந்தேகமுறக்கூடிய அழகுவாய்ந்த, பரமசிவனுடைய ஜங்கைகள் நமது தீச்செயல்களின் குவியலை அழிக்கவேண்டும்.

**जानुद्वन्द्वेन मीनध्वजनृवरसमुद्गोपमानेन साकं**
**राजन्तौ राजरम्भाकरिकरकनकस्तम्भसंभावनीयौ ।**
**ऊरू गौरीकरांभोरुहसरससमामर्दनानन्दभाजौ**
**चारू दूरीक्रियास्तां दुरितमुपचितं जन्मजन्मान्तरे नः ॥ १९ ॥**

ஜாநுத்வந்த்வேன மீனத்வஜந்ருவரஸமுத்கோபமானேன ஸாகம்
ராஜந்தௌ ராஜரம்பாகரிகரகனகஸ்தம்பஸம்பாவநீயௌ ।
ஊரு கௌரீகராம்போருஹஸரஸஸமாமர்தநாநந்தபாஜௌ
சாரு தூரீக்ரியாஸ்தாம் துரிதமுபசிதம் ஜன்மஜன்மாந்தரே நஃ ॥

**मीनध्वज-नृवर-समुद्गो-पमानेन** மச்சத்தைக் கொடியாக கொண்ட மதனராஜனுடைய தாம்பூலப் பெட்டிக்கு ஒப்பான **जानुद्वन्द्वेन** இரண்டு முழங்கால்களோடு **साकं** கூட **राजन्तौ** விளங்குவதும் **राज-रम्भा-करिकर-कनकस्तंभ-संभावनीयौ**

இராஜவாழை, யானையின் துதிக்கை, தங்கத் தூண் இவைகளால் கௌரவிக்கத் தகுந்தவைகளும் (அதாவது இவைகளுடன் ஒப்பிடுங்கால் அவைகளைக்காட்டிலும் மேன்மை பொருந்தியதுகளும்) **गौरी-करां-भोरुह-सरस-समामर्दना-नन्द-भाजौ** பார்வதியினுடைய தாமரை போன்ற கைகளால் ரசமாயிருக்கும்படி பிடித்துவிடுவதினால் உண்டான இன்பத்தை அடைந்தவைகளுமாகிய **चारू ऊरू** அழகிய தொடைகள் **नः** நம்முடைய **जन्म** பிறப்பையும் **जन्मान्तरे** மற்றுமுள்ள பிறப்புக்களில் **उपचितं** சேமித்த **दुरितं** பாபத்தையும் **दूरीक्रियास्तां** - அகற்றவேண்டும்

கருத்து:—மன்மத மகாராஜனின் தாம்பூலப் பேழைக் கொத்த முழங்கால்களோடு கூடியதும், ராஜவாழை, யானையின் துதிக்கை, தங்கத்தூண் இவைகளுக்கு ஒப்பாயும், பார்வதியின் மலர்போன்ற கரங்களால் மெதுவாகப் பிடித்து விடுவதால் இன்பமுற்று இருப்பவைகளாயும் இருக்கின்ற பரமசிவனின் அழகிய தொடைகள் ஜன்மத்தையும் இதற்கு முன் ஜன்மங்களில் நான் செய்து வளர்த்த பாபத்தையும் அகற்றவேண்டும்.

**आमुक्तानर्घरत्नप्रकरकरपरिष्वक्तकल्याणकाञ्ची-**
**दाम्ना बद्धेन दुग्धद्युतिनिचयमुषा चीनपट्टाम्बरेण ।**
**संवीते शैलकन्यासुचरितपरिपाकायमाणे नितम्बे**
**नित्यं नर्नर्तु चित्तं मम निखिलजगत्स्वामिनः सोममौलेः ॥२०॥**

ஆமுக்தாநர்க்ஷ்ரத்னப்ரகரகரபரிஷ்வக்தகல்யாணகாஞ்சி-
தாம்நா பத்தேன துக்தத்யுதிநிசயமுஷா சீனபட்டாம்பரேண
ஸம்வீதே சைலகன்யாஸுசரிதபரிபாகாயமாணே நிதம்பே
நித்யம் நர்நர்த்து சித்தம் மம நிகில்ஜகத்ஸ்வாமினஃ ஸோமமௌளேஃ

**आमुक्ता- नर्घ - रत्न - प्रकर - कर - परिष्वक्त-कल्याण-काञ्चीदाम्ना** இழைத்த விலையற்ற இரத்தினங்களின் கூட்டத்தின்

கிரணங்களால் சூழப்பட்ட மங்களமான தங்க ஒட்டியானத்தால் **बद्धेन** கட்டப்பட்டதும் **दुग्ध-द्युति-निचय-मुषा** பாலின் ஒளிக்கூட்டத்தைக் கவருகின்றதுமான **चीन-पट्टाम्बरेण** சீன தேசத்துப் பட்டு வஸ்திரத்தினுல் **संवीते** மூடப்பட்டதும், **शैलकन्या-सुचरित-परिपाकायमाणे** பார்வதியின் புண்ணியங்களின் பலம்போன்றவைகளுமான **निखिल-जगत्स्वामिनः** அகில அண்டகோடிகளுக்கும் யஜமானனுகிய **सोममौलेः** சந்திரனை தலை அணியாகக்கொண்ட பரமசிவனுடைய **नितम्बे** இடுப்பில் **मम** என்னுடைய **चित्तं** மனது **नित्यं** எப்பொழுதும் **नर्नर्तु** நர்த்தனம் செய்யட்டும்.

கருத்து :— இரத்தினங்கள் இழைத்துக் கிரணங்கள் சூழ்ந்த தங்க ஒட்டியான மணிந்ததும், பால்போன்ற மெல்லிய சீனப்பட்டால் மறைக்கப்பட்டதும், பார்வதியின் புண்யப்பயன் போன்றதுமான பரமசிவனுடைய இடுப்பில் எனது மனம் களியுற்றிருக்கட்டும்.

**संध्याकालानुरज्यत्कनकरसरुचा कालधौतेन गाढं**
**व्यानद्धः स्निग्धमुग्धः सरसमुदरबन्धेन वीतोपमेन ।**
**उद्दीप्तैः स्वप्रकाशैरुपचितमहिमा मन्मथारेरुदारो**
**मध्यो मिथ्यार्थसध्र्यङ्मम दिशतु सदा संगतिं मङ्गलानाम् ॥**

ஸந்த்யாகாலானுரஜ்யத்கனகரஸருசா காலதௌதேன கா஢ம்
வ்யானத்த: ஸ்நிக்தமுக்த: ஸரஸமுதரபந்தேன வீதோபமேன
உத்தீப்தை: ஸ்வப்ரகாசைருபசிதமஹிமா மன்மதாரேருதாரோ
மத்யோ மித்யார்தஸத்ர்யங்மம திசது ஸதா ஸங்கதிம்
மங்களாநாம் ‖ 21 ‖

**सन्ध्याकाला-नुरज्यत्-कनकरस-रुचा** அந்திப்பொழுதால் சிவந்த உருக்கிய தங்கத்தின் காந்தியை உடையதும், **कालधौतेन** தங்கத்தால் உண்டாக்கப் பட்டதும், **वीतोपमेन** உபமானமில்லாததுமான **उदरबन्धेन** வயிற்றில் கட்டிக்கொள்

ளும் பட்டையினுல் **सरसं** அழகாக இருக்கும்படி **गाढं** வெகு நெருக்கமாய் **व्यानद्धः** கட்டப்பட்டதும், **स्निग्धमुग्धः** வழ வழப்பாயும் அழகாயும் இருக்கின்றதும் **उद्दीप्तैः** உயர்ந்தோங்கி விளங்கும் **स्वप्रकाशैः** தன்னொளிகளால் **उपचितमहिमा** வளர்ந்த மேன்மையை உடையதுமான **मन्मथारेः** மன்மதனின் பகை வணுகிய பரமசிவனுடைய **मिथ्यार्थसभ्रयङ्** பொய்யெனக் கருதக்கூடியதும், **उदारः** பெருந் தன்மை வாய்ந்ததுமான **मध्यः** இடை **मम** எனக்கு **मङ्गलानां** மங்களங்களுடைய **संगतिं** சேர்க்கையை **सदा** எப்பொழுதும் **दिशतु** கொடுக்கட்டும்.

கருத்து :—அந்தியின் ஒளி கலந்த உருக்கிய தங்கம் போன்ற நிறமுடையதும், ஒப்பற்றதுமான தங்கப் பட்டையை அணிந்துகொண்டதும், ஓங்கி வளர்ந்த தனது ஒளிகளால் துலங்குவதும், பொய்யெனக் கருதக் கூடியதுமான பரமசிவனுடைய இடை எனக்கு மங்களங்களை நல்கவேண்டும்.

**नाभीचक्रालवालात् नवनवसुषमादोहदश्रीपरीतात्**
**उद्गच्छन्ती पुरस्तादुदरपथमतिक्रम्य वक्षः प्रयान्ती ।**
**श्यामा कामागमार्थप्रकथनलिपिवद्भासते या निकामं**
**सा मा सोमार्धमौलेः सुखयतु सततं रोमवल्लीमतल्ली ॥ २२ ॥**

நாபீசக்ராலவாலாத் நவநவஸுஷமா தோஹத ஶ்ரீபரீதாத்
உத்கச்சந்தீ புரஸ்தாதுதரபதமதிக்ரம்ய வக்ஷ: ப்ரயாந்தீ |
ஶ்யாமா காமாகமார்தப்ரகதனலிபிவத் பாஸதே யா நிகாமம்
ஸா மா ஸோமார்தமௌளே: ஸுகயது ஸததம் ரோமவல்லீமதல்லீ ||

. **नवनव-सुषमा-दोहद-श्री-परीतात्** புதிது புதிதான காந்தியாகின்ற எருவின் சம்பத்து நிறைந்த **नाभीचक्रालवालात्** நாபியாகின்ற பாத்தியிலிருந்து **पुरस्तात्** முன் பக்கத்தில் **उद्गच्छन्ती** வளர்ந்து வருகின்றதும், **उदरपथं** வயிறுகிற மார்க்கத்தை

अतिक्रम्य கடந்து वक्षः மார்பை प्रयान्ती செல்லுகின்றதும், श्यामा கறுப்பானதும் ஆன या எந்தரோமாவளீ कामागमा-र्थ-प्रकथन-लिपिवत् காம சாஸ்திரத்தின் கருத்தை விளக்கும் எழுத்துப்போல் भासते விளங்குகின்றதோ सोमार्धमौलेः பாதி சந்திரனை சிரஸின் அலங்காரமாக உடைய பரமேச்வரனுடைய सा அந்த रोमवल्ली-मतल्ली சிறந்த ரோமாவளி मां என்னை सततं எப்பொழுதும் निकामं மிகவும் सुखयतु சுகமடையச் செய்யட்டும்.

கருத்து :—பரமசிவனுடைய, நாபியாகிற பாத்தியிலிருந்து புதிது புதிதான காந்தியாகின்ற எருவினால் வளர்க்கப்பட்டு கறுத்த ரோமாவளி என்றகொடி, வளர்ந்து வயிற்றின் வழியாகப் போய் மார்பை அடைந்து மன்மத சாஸ்திரத்தின் அர்த்தத்தை விளக்கும் எழுத்துப்போல் விளங்குகின்றது. அந்த ரோமாவளி என்னை இன்புறச்செய்ய வேண்டும்.

आश्लेषेष्वद्रिजायाः कठिनकुचतटीलिप्तकाश्मीरपङ्क-
व्यासङ्गादुद्यदर्कद्युतिभिरुपचितस्पर्धमुद्दामहृद्यम् ।
दक्षारातेरूढप्रतिनवमणिमालावलीभासमानं
वक्षो विक्षोभिताघं सततनतिजुषां रक्षतादक्षतं नः ॥ २३ ॥

ஆச்லேஷேஷ்வத்ரிஜாயா: கடினகுசதடீலிப்தகாச்மீரபங்க-
வ்யாஸங்காதுத்யதர்கத்யுதிபிருபசிதஸ்பர்தமுத்தாமஹ்ருத்யம்
தக்ஷாராதேரூடப்ரதினவமணிமாலாவலீபாஸமானம்
வக்ஷோ விக்ஷோபிதாகம் ஸததநதிஜுஷாம் ரக்ஷதாதக்ஷதம் ந: ॥ 23

अद्रिजायाः மலைமகளாகிய பார்வதியினுடைய आश्लेषेषु ஆலிங்கனங்களில் कठिन-कुचतटी-लिप्त-काश्मीरपङ्क-व्यासङ्गात् கடினமான ஸ்தன ப்ரதேசங்களில் பூசிய குங்குமப்பூவால் ஆன சேற்றின் சேர்க்கையால் उद्यदर्क-द्युतिभिः உதிக்கின்ற சூர்யனுடைய காந்திகளோடு उपचितस्पर्धं சண்டை செய்

கின்றதும் उद्दामहृद्यम् மிகவும் அழகியதும் उदूढ प्रतिनव-मणि मालावली-भासमानम् அணிந்து கொண்ட புதிய இரத்தின மாலைகளின் வரிசைகளால் விளங்குகின்றதும், सतत-नति-जुषां எப்பொழுதும் நமஸ்காரம் செய்கிறவர்களுடைய विक्षोभिताघं பாபத்தை நாசம் செய்கிறதுமான दक्षारातेः தக்ஷனின் பகைவனான பரமசிவனுடைய वक्षः மார்பு नः நம்மை अक्षतं குறைவின்றி रक्षतात् காக்கவேண்டும்

கருத்து:—பார்வதியைத் தழுவும் தருணத்தில் தேவியின் மார்பில் அணிந்த குங்குமப்பூவின் சேர்க்கையால் இளம் கதிரவன் போன்றதும், இரத்தினமாலை அணிந்து துலங்குவதும், தன் திருவடியில் வணங்கியவர்களுடைய பாபத்தை அகற்றுவதும், அழகியதுமான பரமசிவனின் மார்பு நம்மை குறைவின்றிக் காக்கவேண்டும்.

वामाङ्के विस्फुरन्त्याः करतलविलसच्चारुरक्तोत्पलायाः
कान्ताया वामवक्षोरुहभरशिखरोन्मर्दनव्यग्रमेकम् ।
अन्यांस्त्रीनप्युदारान् वरपरशुमृगालंकृतीनिन्दुमौलेः
बाहूनाबद्धहेमाङ्गदमणिकटकानन्तरालोकयामः ॥ २४ ॥

வாமாங்கே விஸ்பு²ரந்த்யா꞉ கரதலவிலஸச்சாருரக்தோத்பலாயா꞉
காந்தாயா வாமவக்ஷோருஹப⁴ரஶிக²ரோன்மர்த³னவ்யக்³ரமேகம் |
அன்யாம்ஸ்த்ரீனப்யுதா³ரான் வரபரஶு²ம்ருகா³லங்க்ருதீநிந்து³-
மௌளே꞉
பா³ஹூனாப³த்³த⁴ஹேமாங்க³த³மணிகடகாநந்தராலோகயாம꞉ || 24

वामाङ्के இடது பக்கத்தில் विस्फुरन्त्याः விளங்குகின்றவளும் करतल-विलस-च्चारु-रक्तोत्पलायाः கையில் விளங்கும் அழகிய சிவப்பு அல்லிப்பூவை உடையவளும் ஆன कान्तायाः மனைவியின் वाम-वक्षोरुह-भर-शिखरो-न्मर्दन-व्यग्र இடது கொங்கையின் மேல் பக்கத்தை மர்த்தனம் செய்வதில் ஈடுபட்ட एकं ஓர் கையையும் वर-परशु-मृगा-लकृतीन् வரம், பரசு, மான் இவைக

ளால் அலங்கரிக்கப்பட்டதுகளும், **उदारान्** கொடை என்னும் குணமுடையவைகளும் **आवद्ध-हेमाङ्गद-मणिकटकान्** தங்கத் தோள்வளைகளையும், இரத்தின வளைகளையும் அணிந்து கொண்டிருப்பவைகளும் ஆன **इन्दुमौलेः** பிறைசூடிய பரம சிவனின் **अन्यान्** மற்ற **त्रीन् वाहून् अपि** மூன்று கைகளையும் **अन्तः** உள்ளத்தில் **आलोकयामः** பார்க்கிறோம்.

கருத்து:—இடது பக்கத்தில் விளங்குபவளும், கையில் அழகிய சிவப்பு ஆம்பல் பூவை உடையவளுமான பார்வதியின் கொங்கையின் மேற்பக்கத்தை மர்த்தனம் செய்வதில் ஈடுபட்ட ஒரு கையையும், வரம், பரசு, மான் இவைகளை ஏந்தியதுகளும், தங்கம், இரத்தினம் இவைகளாலான வளைகளை அணிந்தவைளுமான பரமசிவனுடைய மற்ற மூன்று கைகளையும் உள்ளத்தில் எப்பொழுதும் காணுவோம்.

**संभ्रान्तायाः शिवायाः पतिविलयभिया सर्वलोकोपतापात्**
**संविग्नस्यापि विष्णोः सरभसमुभयोर्वारणप्रेरणाभ्याम् ।**
**मध्ये त्रैशङ्कवीयामनुभवति दशां यत्र हालाहलोष्मा**
**सोऽयं सर्वापदां नः शमयतु निचयं नीलकण्ठस्य कण्ठः ॥ २५॥**

ஸம்ப்ராந்தாயா: ஶிவாயா: பதிவிலயபியா ஸர்வலோகோபதாபாத்
ஸம்விக்நஸ்யாபி விஷ்ணோ: ஸரபஸமுபயோர்வாரணப்ரேரணாப்யாம் ।
மத்யே த்ரைஶங்கவீயாமனுபவதி தஶாம் யத்ர ஹாலாஹலோஷ்மா
ஸோऽயம் ஸர்வாபதாம் ந: ஶமயது நிசயம் நீலகண்டஸ்ய கண்ட: ॥

**पतिविलयभिया** பர்த்தாவிற்கு நாசம் ஏற்படுமோ என்ற பயத்தால் **संभ्रान्तायाः** பரபரப்புற்ற **शिवायाः** பார்வதியும், **सर्वलोकोपतापात्** எல்லா உலகங்களும் எரிந்துவிடுவதினால் **संविग्नस्य** கவலையுற்ற **विष्णोश्च अपि** விஷ்ணுவும் (ஆன) **उभयोः** இரண்டு பேர்களுடைய **सरभसं** ஆத்திரத்தோடு **वारणप्रेरणाभ्यां** தடுப்பதாலும் தூண்டுவதாலும் **मध्ये** இடையில் **त्रैशङ्कवीयां**

த்ரிசங்குவினுடைய दशां நிலையை यत्र எந்த கழுத்தில் हालाहलोष्मा ஹாலா ஹல விஷாக்னி अनुभवति அனுபவிக்கின்றதோ सोऽयं அந்த नीलकण्ठस्य கருப்பான கழுத்தை உடைய பரமசிவனுடைய कण्ठः கழுத்து नः நம்முடைய सर्वापदां எல்லா ஆபத்துக்களுடைய निचयं கூட்டத்தை शमयतु அழிக்க வேண்டும்.

கருத்து:-பாற்கடலில்நின்று ஹாலாஹலம் என்றவிஷம் கிளம்பி உலகை எரிக்கத் தொடங்கியது. அப்பொழுது பகவான் அதை விழுங்க, பார்வதி தேவி விஷம் வயிற்றில் சென்றால் நாதனுக்குக் கெடுதல் வந்துவிடுமோ என்று அஞ்சி, அதை வயிற்றில் இறங்காதபடி தடுத்து வெளியில் தள்ள முயற்சித்தாள். அப்பொழுது மஹாவிஷ்ணு விஷம் வெளியில் வந்தால் உலகம் அழிந்துவிடுமோ என்ற பயத்தால் உள்ளே தள்ளிவிட்டார். இவ்விதம் பார்வதியும் விஷ்ணுவும் வெளியேயும் உள்ளேயுமாய்த் தள்ளுவதால் நடுவில் த்ரிசங்குவைப்போல் நிற்கும் விஷத்தோடுகூடிய நீலகண்டருடைய கழுத்து நமது ஆபத்துக்களின் கூட்டத்தை ஒழிக்க வேண்டும்.

हृद्यैरद्रीन्द्रकन्यामृदुदशनपदैर्मुद्रितो विद्रुमश्री-
रुद्योतन्त्या नितान्तं धवलधवलया मिश्रितो दन्तकान्त्या ।
मुक्तामाणिक्यजालव्यतिकरसदृशा तेजसा भासमानः
सद्योजातस्य दद्यादधरमणिरसौ संपदां संचयं नः ॥ २६ ॥

ஹ்ருத்³யைரத்³ரீந்த்³ரகன்யாம்ருது³த³ஶநபதை³ர்முத்³ரிதோ வித்³ருமஶ்ரீ
ருத்³யோதந்த்யா நிதாந்தம் த⁴வளத⁴வளயா மிஶ்ரிதோ த³ந்தகாந்த்யா
முக்தாமாணிக்யஜாலவ்யதிகரஸத்³ருஶா தேஜஸா பா⁴ஸமான:
ஸத்³யோஜாதஸ்ய த³த்³யாத³த⁴ரமணிரஸௌ ஸம்பதா³ம் ஸஞ்சயம் ந:

हृद्यैः மனதைக் கவரும் வனப்பு வாய்ந்த अद्रीन्द्रकन्या-मृदु-दशन-पदैः பர்வத ராஜன் மகளாகிய பார்வதிதேவி மெது

வாய்ப் பற்களால் கடிப்பதால் **मुद्रितः** அடையாளம் செய்யப் பட்டதும், **विद्रुमश्रीः** பவழத்தின் ஒளிவீசுகின்றதும், **नितान्तं** மிகவும் **उद्योतन्त्या** ஒளிருகின்றதும் **धवलधवलया** அதிகம் வெளுப்பானதும் ஆன **दन्तकान्त्या** பற்களின் காந்தியோடு **मिश्रितः** கலந்ததும் **मुक्ता-माणिक्यजाल-व्यतिकर-सदृशा** முத்துக் களும், மாணிக்கங்களும் சேர்ந்ததற் கொப்பான **तेजसा** சோபையினால் **भासमानः** ப்ரகாசிப்பதும் ஆன **सद्योजातस्य** ஸத்யோ-ஜாதம் என்று அழைக்கப்படும் பரமசிவனுடைய **असौ** இந்த **अधरमणिः** சிறந்த கீழ் உதடு **नः** நமக்கு **सम्पदां** சம்பத்துக்க ளுடைய **सञ्चयं** கூட்டத்தை **दद्यात्** கொடுக்கட்டும்.

கருத்து :—பார்வதியின் தந்த க்ஷதங்கள் அமைந்ததும், பவழம்போன்றதும், மிக்க வெண்மையான பற்களின் ஒளியோடு கலந்து முத்தும் மாணிக்கமும் சேர்ந்தாப்போல் துலங்குவதுமான பரமசிவனுடைய அழகிய இதழ் நமக்குச் சம்பத்தின் கூட்டத்தை அளித்தருளவேண்டும்.

**कर्णालंकारनानामणिनिकररुचां संचयैरञ्चितायां**
**वर्ण्यायां स्वर्णपद्मोदरपरिविलसत्कर्णिकासन्निभायाम् ।**
**पद्धत्यां प्राणवायोः प्रणतजनहृदम्भोजवासस्य शंभोः**
**नित्यं नश्चित्तमेतद्विरचयतु सुखेनासिकां नासिकायाम् ॥ २७॥**

கர்ணாலங்காரநாநாமணிநிகரருசாம் ஸஞ்சயைரஞ்சிதாயாம்
வர்ண்யாயாம் ஸ்வர்ணபத்மோதரபரிவிலஸத்கர்ணிகாஸன்னிபா- யாம்
பத்யத்யாம் ப்ராணவாயோ: ப்ரணதஜனஹ்ருதம்போஜவாஸஸ்ய ஶம்போ:
நித்யம் நஶ்சித்தமேதத் விரசயது ஸுகேநாஸிகாம் நாஸிகாயாம்|| 27

**कर्णालङ्कार-नाना-मणि-निकर-रुचां** காதின் அணிகளிலிருக் கும் பல இரத்தினங்களின் கூட்டத்தினுடைய காந்திகளின் **संचयैः** சமூகத்தால் **अञ्चितायां** அடையாளம் செய்யப்பட்ட தும், **वर्ण्यायां** கவிகளால் வர்ணிக்கத்தக்க பெருமை வாய்ந்த

தும், स्वर्ण-पद्मोदर-परिविलसत्-कर्णिका-सन्निभायां தங்கத் தாமரையின் உள்ளே, வனப்போடு விளங்கும் கர்ணிகைக்கு ஒப்பானதும் प्राणवायोः ப்ராணவாயுவின் पद्धत्यां வழியானதும் ஆகிய प्रणत-जन-हृदम्भोज-वासस्य வணங்கிய ஜனங்களுடைய உள்ளத்தாமரையில் வசிக்கும் शंभोः பரமேச்வரனுடைய नासिकायां மூக்கில் नित्यं எப்பொழுதும் नः நம்முடைய एतत् चित्तं இம்மனது सुखेन சுகமாக आसिकां இருத்தலை विरचयतु செய்யட்டும்.

கருத்து:—காதில் அணிந்த அணிகளிலிருக்கும் இரத்தினங்களின் ஒளியோடு கலந்ததும், கவிஞர்கள் வியந்து போற்றுவதும், தங்கத் தாமரைக்குள் துலங்கும் கர்ணிகை போன்றதும், ப்ராணவாயுவின் மார்க்கமாயுமிருக்கின்ற, அடியார்கள் உள்ளத்தில் வாசம்செய்யும் பரமசிவனின் மூக்கில் என்றும் நம்மனது இன்பமாய் பற்றுதலுடன் இருக்கவேண்டும்.

**अत्यन्तं भासमाने रुचिरतररुचां संगमात्सन्मणीनाम्**
**उद्यच्चण्डांशुधामप्रसरनिरसनस्पष्टदृष्टापदाने ।**
**भूयास्तां भूतये नः करिवरजयिनः कर्णपाशावलम्बे**
**भक्तालीभालसज्जज्जनिमरणलिपेः कुण्डले कुण्डले ते ॥ २८ ॥**

அத்யந்தம் ஹாஸமானே ருசிரதரருசாம் ஸங்ஹமாத்ஸன்மணீநாம்
உத்யச்சண்டாம்ஸுதாமப்ரஸரநிரஸனஸ்பஷ்டத்ருஷ்டாபதானே
ஹூயாஸ்தாம் ஹூதயே நஃ கரிவரஜயினஃ கர்ணபாஸாவலம்பே
ஹக்தாலீஹாலஸஜ்ஜஜ்ஜனிமரணலிபேஃ குண்டலே குண்டலே தே ॥

रुचिरतर-रुचां மிகவும் அழகிய காந்தியை உடைய सन्मणीनां உயர்ந்த இரத்தினங்களுடைய सङ्गमात् சேர்க்கையினால் अत्यन्तं அதிகமாக भासमाने துலங்குகின்றதுகளும் उद्यत्-चण्डांशु-धाम-प्रसर-निरसन-स्पष्ट-दृष्ट-अपदाने உதிக்கின்ற சூர்யனுடைய கிரணங்களின் பரவுதலை விலக்குவதினால்

தெளிவாகக் காணப்பட்ட பராக்ரமத்தை உடையதுகளும், **भक्ताली-भाल-सज्ज-जनि-मरण-लिपेः** பக்தர்கள் வரிசையின் நெற்றியில் இருக்கும் ஜனனமரணங்களாகிற சம்சாரத்திற்குள்ள எழுத்துக்கு **कुण्डले** குண்டலங்களானவைகளும் அதாவது ப்ரும்ம லிபியை உபயோகமற்றவைகளாகச் செய்கின்றவைகளும் **करिवरजयिनः** பெரிய யானை வடிவம்கொண்ட அந்தகாசுரனை ஜயித்த பரமசிவனுடைய **कर्णपाशावलम्बे** சிறந்த காதுகளில் தொங்குகின்றவைகளும் ஆகிய **ते** அந்த **कुण्डले** குண்டலங்கள் **नः** நமக்கு **भूतये** ஐச்வர்யத்திற்காக **भूयास्ताम्** ஆகட்டும்.

கருத்து:—மிக்க அழகுவாய்ந்த உயர்தர இரத்தினங்கள் பதிக்கப்பட்டிருப்பதினால் துலங்கிக்கொண்டு ஆதித்தனின் கிரணங்களையும் ஒதுக்கும் திறன் பூண்டதுகளும், அடியாரைக் காப்பாற்றுதல் முதலிய உயர்ந்த செய்கைகளை உடையவைகளும், பக்தர்களுக்கு பிறக்கவும், இறக்கவும், ப்ரம்மாவால் தலையில் எழுதப்பட்ட எழுத்தை குண்டல ரேகை யிட்டு உபயோகமற்ற தாக்குவதும், யானைவடிவம் கொண்டு எதிர்த்துவந்த அந்தகாசுரனை வென்ற பரமசிவனுடைய காதில் தொங்குவதுமான குண்டலங்கள் நமக்கு நன்மையை அருளவேண்டும்.

याभ्यां कालव्यवस्था भवति तनुमतां यो मुखं देवतानां
येषामाहुः स्वरूपं जगति मुनिवरा देवतानां त्रयीं ताम् ।
रुद्राणीवक्त्रपङ्केरुहसततविहारोत्सुकेन्दिन्दिरेभ्यः
तेभ्यस्त्रिभ्यः प्रणामाञ्जलिमुपरचये त्रीक्षणस्येक्षणेभ्यः ॥ २९ ॥

யாப்⁴யாம் காலவ்யவஸ்தா² ப⁴வதி தநுமதாம் யோமுக²ம்தே³வ
தாநாம்
யேஷாமாஹு: ஸ்வரூபம் ஜ³க³தி முனிவரா தே³வதாநாம்த்ரயீம்தாம் ।
ருத்³ராணீவக்த்ரபங்கேருஹஸததவிஹாரோத்ஸுகேந்தி³ந்தி³ரேப்⁴ய:
தேப்⁴யஸ்த்ரிப்⁴ய: ப்ரணாமாஞ்ஜலிமுபரசயே த்ரீக்ஷணஸ்யேக்ஷ-
ணேப்⁴ய: ॥ 29 ॥

**याभ्यां** சூர்யசந்திரரூபமான எவைகளால் **तनुमतां** பிராணிகளுக்கு **काल-व्यवस्था** பகல் இரவு என்ற காலங்களின் நிலை **भवति** உண்டாகின்றதோ, **यः** எது **देवतानां** தேவதைகளுக்கு **मुखं** முகமாக (அக்னியாக) இருக்கின்றதோ, **जगति** உலகில் **मुनिवराः** சிறந்த முனிவர்கள் **येषां** எந்தக் கண்களுடைய **तां** அந்த **त्रयीं** மூன்றை **देवतानां** தேவதைகளுடைய **स्वरूपं** உருவமாக **आहुः** கூறுகிறார்களோ, **रुद्राणी-वक्त्र-पङ्केरुह-सतत-विहारो-त्सुके न्दिन्दिरेभ्यः** பார்வதியின் வதனம் என்னும் தாமரையில் இடைவிடாது உலவுவதில் ஆவல் கொண்ட வண்டுகளாகிய **तेभ्यः** அந்த **त्रीक्षणस्य** முக்கண்ணனாகிய பரமசிவனுடைய **त्रिभ्यः** மூன்று **ईक्षणेभ्यः** கண்களுக்கு **प्रणामाञ्जलिं** கைகூப்பி நமஸ்காரத்தை **उपरचये** செய்கின்றேன்.

கருத்து:—மாந்தர்களுக்கு இரவு, பகல் முதலிய சமயங்களின் வரையறுப்பு வலது இடதாக இருக்கின்ற எந்த இரண்டு கண்களால் ஏற்படுகின்றதோ, எந்த மூன்றாவதான நெற்றிக்கண் அக்னி மயமாக இருந்து கொண்டு தேவதைகளுக்கு ஆஹாரம் அளிக்கின்றதோ, பார்வதியின் தாமரையை ஒத்த முகத்தில் வண்டுகளைப்போல் இடைவிடாமல் களி கூர்ந்து விளையாடும் முக்கண்ணனுடைய சர்வதேவதா ரூபங்களான அந்த மூன்று கண்களையும் கைகூப்பி வணங்குகின்றேன்.

குறிப்பு:—**अग्निमुखा वै देवाः** தேவர்கள் அக்னியை முகமாக உடையவர்கள் என்று வேதம் கூறுகிறது. ஆகவே அக்னியாகிற பரமசிவனது மூன்றாவது நேத்ரம் தேவதைகளுக்கு முகமாய் இங்கு கூறப்பட்டிருக்கிறது.

**वामं वामाङ्कगाया वदनसरसिजे व्यालगद्वल्लभाया**
**व्यानम्रेष्वन्यदन्यत्पुनरलिकभवं वीतनिश्शेषरौक्ष्यम् ।**
**भूयो भूयोऽपि मोदान्निपतदतिदयाशीतलं चूतबाणे**
**दक्षारेरीक्षणानां त्रयमपहरतादाशु तापत्रयं नः ॥ ३० ॥**

வாமம் வாமாங்ககாயா வதனஸரஸிஜே வ்யாலகத் வல்லபாயா
வ்யானம்ரேஷ்வன்யதன்யத்புனரலிகபவம் வீதநிஶ்ஶேஷரௌக்ஷ்யம் |
பூயோ பூயோऽபி மோதான்னிபதததிதயாஶீதலம் சூதபாணே
தக்ஷாரேரீக்ஷணானாம் த்ரயமபஹரதாதாஶு தாபத்ரயம் ந꞉ ‖ 30 ‖

**वामाङ्कगायाः** இடதுமடியில் இருக்கின்ற **वल्लभायाः** பத்தினியாகின்ற பார்வதியினுடைய **वदन-सरसिजे** தாமரை போன்ற முகத்தில் **व्यालगत्** பற்றிக்கொண்டு **वामं** இடது பக்கத்தில் இருப்பதும், **व्यानम्रेषु** திருவடியில் பணிந்தவர்களிடம் (**व्यालगत्** பற்றிக்கொண்டு) **अन्यत्** வலது பக்கத்திலிருப்பதும், **पुनः** மேலும், **मोदात्** சந்தோஷத்தினால் **वीत-निश्शेष-रौक्ष्यम्** சற்றும் கொடுமையில்லாததும் **भूयः भूयः अपि** மேன்மேலும் **चूतबाणे** மாம்பூவை பாணமாகக் கொண்ட மன்மதனிடத்தில் **अतिदयाशीतलं** அதிக தயவினால் குளுமையாய் இருக்கும்படி **निपतत्** விழுகின்றதும் **अलिकभवं** நெற்றியில் இருக்கும் **अन्यत्** மற்றொன்றும் ஆகிய **दक्षारेः** தக்ஷன்பகைவனாகிய பரமசிவனுடைய **ईक्षणानां** கண்களுடைய **त्रयं** மூன்றும் **नः** நம்முடைய **तापत्रयं** ஆத்யாத்மிகம் முதலிய மூன்று தாபத்தையும் **आशु** சீக்கிரமாக **अपहरतात्** போக்கவேண்டும்.

கருத்து :—இடதுமடியில் வீற்றிருக்கும் பார்வதி தேவியின் தாமரைபோன்ற முகத்தில் பற்றிய இடது கண்ணும், திருவடியில் வணங்குவோரிடத்தில் பற்றிய வலதுகண்ணும், முன்பு மன்மதனிடம் கோபம் கொண்டு கொடுமையாய் எரித்தும், பார்வதியை மணம் புரிந்த ஆனந்தத்தால் சற்றும் கொடுமை யின்றி பன்மடங்கு கருணையோடு அடிக்கடி அவன்பால் விழுவதுமான நெற்றிக் கண்ணுமாகிய பரமசிவனுடைய மூன்று நேத்ரங்களும் தாமதமின்றி நம்முடைய மூன்று தாபங்களையும் ஒழித்தருளவேண்டும்.

குறிப்பு:— ஆத்யாத்மிகம். சரீரத்தில் உண்டாகும் தீமை. ஆதிபௌதிகம், மழை, பூமி பிளவு முதலியவை பூதங்களால் உண்டாகும்

துன்பம். ஆதி தைவிகம், க்ரகதோஷங்களால் உண்டாகும் கஷ்டம். இம்மூன்றையும் தாபத்ரயம் என்பார்கள்.

यस्मिन्नर्धेन्दुमुग्धद्युतिनिचयतिरस्कारनिस्तन्द्रकान्तौ
काश्मीरक्षोदसंकल्पितमिव रुचिरं चित्रकं भाति नेत्रम् ।
तस्मिन्नुल्लोलचिल्लीनटवरतरुणीलास्यरङ्गायमाणे
कालारेः फालदेशे विहरतु हृदयं वीतचिन्तान्तरं नः ॥ ३१ ॥

யஸ்மின்னர்த்தேந்து முக்தத்யுதிநிசயதிரஸ்காரநிஸ்தந்த்ரகாந்தௌ
காஶ்மீரக்ஷோதஸங்கல்பிதமிவ ருசிரம் சித்ரகம் பாதி நேத்ரம் |
தஸ்மின்னுல்லோலசில்லீநடவரதருணீலாஸ்யரங்காயமாணே
காலாரே: பாலதேஶே விஹரது ஹ்ருதயம் வீதசிந்தாந்தரம் ந: ‖ 31

**अर्धेन्दु - मुग्ध - द्युति - निचय - तिरस्कार - निस्तन्द्र - कान्तौ** அர்த்த சந்திரனுடைய அழகிய காந்தி சமூகத்தை மறுதளிப்பதில் நோக்கம் கொண்ட ஒளியுடைய **यस्मिन्** எதில் **काश्मीरक्षोद-संकल्पितं** குங்குமப்பூவின் பொடியால் செய்யப்பட்ட **रुचिरं** அழகிய **चित्रकं इव** பொட்டைப்போல் **नेत्रं** நெற்றிக்கண் **भाति** விளங்குகிறதோ, **उल्लोल-चिल्ली-नटवर-तरुणी-लास्य रङ्गायमाणे** அசைகின்ற அழகிய ரேகைகளாகின்ற உயர்ந்த நடனமாதினுடைய நாட்ய மேடைபோன்ற **तस्मिन्** அந்த **कालारेः** காலனைவென்ற பரமசிவனுடைய **फालदेशे** நெற்றியில் **नः** நம்முடைய **हृदयं** மனது **वीतचिन्तान्तरं** மற்ற கவலைகளின்றி **विहरतु** விளையாடட்டும்.

கருத்து:—இளம் சந்திரனைப் பழிக்கும் எழில்வாய்ந்த நெற்றியில் மூன்றாவது கண் குங்குமப்பூவால் ஆன அழகிய பொட்டைப்போல் ப்ரகாசிக்கின்றது. மஹா புருஷலக்ஷணமாக ஸாமுத்ரிக சாஸ்திரத்தில் கூறிய அழகிய ரேகைகளாகிற இளம் நடனப் பெண்கள் நர்த்தனம் செய்யுமிடம்போலும் நெற்றி துலங்குகிறது. பரமசிவனுடைய அந்த நெற்றியில் மற்ற கவலைகள் யாவற்றையும் ஒழித்து என் உள்ளம் எப்பொழுதும் விளையாடட்டும்.

**स्वामिन् गंगामिवाङ्गीकुरु तव शिरसा मामपीत्यर्थयन्तीं**
**धन्यां कन्यां खरांशोः शिरसि वहति किंन्वेष कारुण्यशाली ।**
**इत्थं शंकां जनानां जनयदतिघनं कैशिकं कालमेघ-**
**च्छायं भूयादुदारं त्रिपुरविजयिनः श्रेयसे भूयसे नः ॥ ३२ ॥**

ஸ்வாமின் கங்காமிவாங்கீகுரு தவ ஶிரஸா மாமபீத்யர்த்தயந்தீம்
தன்யாம் கன்யாம் கராம்ஶோ: ஶிரஸி வஹதி கின்வேஷ காரு-
ண்யஶாலீ |
இத்த்தம் ஶங்காம் ஜனானாம் ஜனயததிகனம் கைஶிகம் காலமேக-
ச்சாயம் பூயாதுதாரம் த்ரிபுரவிஜயின: ஶ்ரேயஸே பூயஸே
ந: ‖ 32 ‖

**स्वामिन्** ஸ்வாமியே, **गङ्गां इव** கங்கையைப்போல் **मां अपि** என்னையும் **तव** உம்முடைய **शिरसा** தலையால் **अङ्गीकुरु** ஏற்றுக்கொள்ளும் **इति** என்று **अर्थयन्तीं** வேண்டுகின்ற **धन्यां** பாக்கியம் செய்த **खरांशोः** சூர்யனுடைய **कन्यां** பெண்ணாகிய யமுனையை **कारुण्यशाली** கருணையோடு விளங்கும் **एषः** இந்த சிவபெருமான் **शिरसि** தலையில் **वहति किंनु** வைத்திருக்கின்றாரா என்ன? **इत्थं** இப்படி **जनानां** ஜனங்களுக்கு **शङ्कां** ஸந்தேகத்தை **जनयत्** உண்டாக்குவதும் **कालमेघच्छायं** நீருண்டமேகம்போன்ற காந்தியை உடையதும் **अतिघनं** மிகவும்நெருக்கமாயும் **उदारं** பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றுவதில் தாராளமாயும் இருக்கின்ற **त्रिपुरविजयिनः** த்ரிபுரர்களை வென்ற பரமசிவனுடைய **कैशिकं** கேசங்களின் கூட்டம் **नः** நமக்கு **भूयसे** அதிகமான **श्रेयसे** க்ஷேமத்தின் பொருட்டு **भूयात्** ஆகவேண்டும்.

கருத்து:—அகில அண்டங்களுக்கும் நாதனாகிய சிவபெருமானே, மஹா விஷ்ணுவின் திருவடிகளில் நின்று உண்டான கங்கையைத் தாங்கள் தலையில் வைத்துக் கொண்டாடவில்லையா? அப்படியே தங்களுடைய ஓர் கண்

ஞக இருந்து உலகை விளங்கவைக்கும் கதிரவனுடைய பெண்ணுகிய என்னைத் தாங்கள் ஏன் சிரஸில் வைத்துக் கொண்டு அனுக்ரகம் செய்யக்கூடாது? என்று யமுனை செய்த பிரார்த்தனைக்கு இணங்கி அவளை தன் திருமுடியில் அணிந்துகொண்டிருக்கிறுரோ என்று பார்ப்போர்கள் ஐய முறும்படியும், நீருண்ட மேகம்போல் அடர்ந்து கறுத்திருக்கின்றதும், பக்தர்களின் வேண்டுகோளை நிறைவேற்று வதில் மிக தாராளமாயுமிருக்கின்ற பரமசிவனின் ஜடா பாரம் நமக்கு ஏராளமான நன்மைகளைச் செய்யட்டும்.

शृङ्गाराकल्पयोग्यैः शिखरिवरसुतासत्सखीहस्तलूनैः
सूनैराबद्धमालावलिपरिविलसत्सौरभाकृष्टभृङ्गम् ।
तुङ्गं माणिक्यकान्त्या परिहसितसुरावासशैलेन्द्रशृङ्गं
संघं नः संकटानां विघटयतु सदा कांकटीकं किरीटम् ॥ ३३ ॥

ஶ்ருங்ஙாராகல்பயோக்யை: ஶிகரிவரஸுதாஸத்ஸகீஹஸ்த-லூனை:
ஸூனைராபத்தமாலாவலிபரிவிலஸத்ஸௌரபாக்ருஷ்டப்ருங்-கம் |
துங்கம் மாணிக்யகாந்த்யா பரிஹஸிதஸுராவாஸஶைலேந்த்ர-ஶ்ருங்கம்
ஸங்கம் ந: ஸங்கடானாம் விகடயது ஸதா காங்கடீகம் கிரீடம் ॥ 33

शृङ्गाराकल्पयोग्यैः ச்ருங்கார அலங்காரங்களுக்குத் தகுந்தவைகளும், शिखरिवर-सुता-सत्सखी-हस्त-लूनैः மலைகளுக்கு அரசனுகிய ஹிமவானுடைய பெண்ணுகிய பார்வதியின் அன்பார்ந்த தோழிகளின் கைகளால் பறிக்கப் பட்டவைகளும் ஆன सूनैः மலர்களால் आबद्ध-मालावलि परिविलसत्सौरभा-कृष्ट-भृङ्गं தொடுக்கப்பட்ட மாலைக்கூட்டங்களில் துலங்கும் வாஸனையால் இழுக்கப்பட்ட வண்டினங்களோடு கூடியதும், तुङ्गं மிக உயர்ந்ததும், माणिक्य-कान्त्या கிரீடத்தில்

இழைத்த இரத்தினங்களின் ஒளியால் **परिहसित-सुरावास-शैलेन्द्र-शृङ्गं** தேவர்களின் இருப்பிடமாகிய மேருமலையின் சிகரத்தைப் பரிகாசம் செய்வதும், **काञ्चीकं** உலோகத்தால் ஆனதுமான **किरीटं** தலைக்கு அணியான கிரீடம் **नः** நம்முடைய **संकटानां** வருத்தங்களுடைய **संघं** கூட்டத்தை **सदा** எப்பொழுதும் **विघटयतु** போக்கட்டும்.

கருத்து:—பார்வதியின் உற்ற தோழிகள் தன் கைகளாலேயே நந்தவனம் முதலிய தோட்டங்களிலிருந்து பறித்துத் தொடுத்த அழகிய சிருங்கார ரசத்திற்கு உவந்த மாலைகளின் வாஸனையால் கட்டுண்டு மயங்கிச் சுற்றி வரும் வண்டுகளோடு கூடியதும், உயரமானதும், தக்க இடத்தில் இழைத்த இரத்தினங்களின் ஒளியால் மேருமலையின் உச்சியையும் பரிகாசம் செய்வதுபோல் விளங்குவதும், தன்னைப்பணிந்த அடியார்களுக்கு இன்பமூட்டுவதும், உலோகத்தால் ஆனதுமான சிவபெருமானுடைய கிரீடம் நம்முடைய துன்பக் கூட்டத்தை எப்பொழுதும் அகற்றவேண்டும்.

**वक्राकारः कलङ्की जडतनुरहमप्यङ्घ्रिसेवानुभावात्**
**उत्तंसत्वं प्रयातः सुलभतरघृणास्यन्दिनश्चन्द्रमौलेः ।**
**तत्सेवन्तां जनौघाः शिवमिति निजयाऽवस्थयैव ब्रुवाणं**
**वन्दे देवस्य शम्भोर्मुकुटसुघटितं मुग्धपीयूषभानुम् ॥ ३४ ॥**

வக்ராகார: கலங்கி ஜடதனுரஹமப்யங்க்ரிஸேவானுபாவாத்
உத்தம்ஸத்வம் ப்ரயாத: ஸுலபதரக்ருணாஸ்யந்தினஶ்சந்த்ர-
மௌளே: ।
தத்ஸேவந்தாம் ஜனௌகா: ஶிவமிதி நிஜயாவஸ்தயைவ ப்ருவா-
ணம்
வந்தே தேவஸ்ய ஶம்போர்முகுடஸுகடிதம் முக்தபீயூஷபானும்

**वक्राकारः** வளைவான உருவமுடையவனும், **कलङ्की** களங்கத்தை உடையவனும் (பாபச் செய்கையை உடை

யவனும்) **जडतनुः** அறிவற்றவனும் (ஜல மயமான சரீரத்தை உடையவனும்) ஆகிய **अहमपि** நானும் **सुलभतर-घृणा-स्यन्दिनः** மிகவும் எளிதில் பெருகும் கருணையை உடைய **चन्द्रमौलेः** பரமசிவனுடைய **अंघ्रिसेवानुभावात्** திருவடிகளைச் சேவித்த தின் ப்ரபாவத்தால் **उत्तंसत्वं** அவருக்குத் தலைக்கு அலங் காரமாக இருக்கும் தன்மையை **प्रयातः** அடைந்து விட்டேன். **तत्** ஆகையால் **जनौघाः** ஜனக் கூட்டங்களே! **शिवं** பரமசிவனை **सेवन्तां** ஸேவியுங்கள் **इति** என்று **निजया** தன்னுடையதான **अवस्थया एव** நிலையினாலேயே **ब्रुवाणं** சொல்லுகின்றவனும் **देवस्य** தேவனாகிய **शम्भोः** பரமசிவனு டைய **मुकुट-सुघटितं** கிரீடத்தில் நன்றாய் அமைக்கப் பட்ட வனும் ஆகிய **मुग्ध-पीयूष-भानुं** அழகிய-அமிருத மயமான கிரணங்களை உடைய இளம் சந்திரனை **वन्दे** வணங்குகிறேன்.

கருத்து:—பாபங்களுக்கு இருப்பிடமாய் அறிவே இல்லாத வளைந்த உடம்பு உடைய நான்கூட எளிதில் கருணையைப் பெருக்கும் பரமசிவன் மலரடிகளை வணங்கி ஸேவித்து அவருக்குத் தலைக்கு அலங்காரமாக ஆகிவிட் டேன். ஜனங்களே! நீங்கள் ஏன் துன்புற வேண்டும்? 'பரமசிவனை ஸேவித்து அழியாத ஆனந்த மடையுங்கள்' என்று தன் அனுபவத்தையே ஆதாரமாய்க் கொண்டு எல்லோருக்கும் உபதேசம் செய்வதைப் போல் தோற்று கிறான் சந்திரன். சிவபெருமான் கிரீடத்தில் சேர்ந்திருக் கின்ற அமிருத கிரணனான அந்த இளம் சந்திரனை நான் வணங்குகிறேன்.

குறிப்பு:—**वक्राकारः, कलङ्की, जडतनुः** இப்பதங்கள் இந்த ச்லோகத்தில் சிலேஷையாக இரண்டு அர்த்தத்தோடு உபயோ கிக்கப் பட்டிருக்கின்றன. இளம் சந்திரன் ஆகையால் வளைவாக இருக்கிறான். அதைக் கவி, உடம்பு வளைவானவன் என்ற அர்த்தம் ஏற்படும்படி அமைத்திருக்கிறார். அப்படியே **कलङ्कः** என்றால்

சந்திரன் நடுவில் தோன்றும் கறுப்பான மறு என்று இங்கு அர்த்தம். பாபம் என்று வேறு அர்த்தமும் அதிலிருந்து ஏற்படுகிறது. ஆகவே, கலங்கம் உடைய சந்திரன், பாபி என்று இரண்டு அர்த்தம் தோன்றும்படியும் இங்கு பதம் உபயோகப்பட்டிருக்கிறது. அவ்விதமே **जडतनुः** என்ற சொல்லும் ஜலமயன், அறிவற்றவன் என்று இரண்டு அர்த்தங்களை விளக்குகிறது. ஸம்ஸ்கிருதத்தில் **ल** காரத்திற்கும் **ड** காரத்திற்கும் வேற்றுமை இல்லை என்று கருதுவது வழக்கம். ஆகவே **जडतनुः** என்பது **जलतनुः** என்றும் ஆகிவிடலாம். சந்திரனை ஜலமயன் என்று சாதாரணமாய்க் கருதுகின்றனர். இங்கு அர்த்தப் பொருத்தத்திற்காக அறிவற்றவன் என்று குறிக்கப் பட்டிருக்கிறது.

**कान्त्या संफुल्लमल्लीकुसुमधवलया व्याप्य विश्वं विराजन्**
**वृत्ताकारो वितन्वन् मुहुरपि च परां निर्वृतिं पादभाजाम् ।**
**सानन्दं नन्दिदोष्णा मणिकटकवता वाह्यमानः पुरारेः**
**श्वेतच्छत्राख्यशीतद्युतिरपहरतादापदस्तापदा नः ॥ ३५ ॥**

காந்த்யா ஸம்ஃபுல்லமல்லீகுஸுமதவளயா வ்யாப்ய விஶ்வம் விராஜன்
வ்ருத்தாகாரோ விதன்வன் முஹுரபிச பராம் நிர்வ்ருதிம் பாதபாஜாம் |
ஸானந்தம் நந்திதோஷ்ணா மணிகடகவதா வாஹ்யமான: புராரே:
ஶ்வேதச்சத்ராக்யஶீதத்யுதிரபஹரதாதாபதஸ்தாபதா ந: ‖ 35 ‖

**संफुल्ल-मल्लीकुसुम-धवलया** மலர்ந்த மல்லிகை மலர்போல் வெண்மையான **कान्त्या** ஒளியால் **विश्वं** உலகயனைத்தையும் **व्याप्य** வ்யாபித்து **विराजन्** விசேஷமாய்த் துலங்குவதும், **वृत्ताकारः** வட்டமான உருவம் உடையதும் **पादभाजां** பரம சிவன் கால்களை அண்டினோர்களுக்கு **मुहुः** அடிக்கடி **परां** மேலான **निर्वृतिं अपि** மோக்ஷத்தைக்கூட **वितन्वन् च** செய்வதும், **सानन्दं** ஸந்தோஷத்தோடு **मणिकटकवता** இரத்தினம் இழைத்த வளைகளணிந்த **नन्दिदोष्णा** நந்திகேச்வரனுடைய கையால் **वाह्यमानः** பிடித்துக் கொள்ளப்பட்டதுமான

**पुरारेः** பரமசிவனுடைய **श्वेतच्छत्राख्यशीतद्युतिः** வெண்பட்டால் ஆன குடையாகிய சந்திரன் **तापदाः** தாபத்தைக் கொடுத்து துன்புறுத்துகின்ற **नः** நம்முடைய **आपदः** ஆபத்துக்களை **अपहरतात्** போக்கவேண்டும்.

கருத்து:—புதிதாய் மலர்ந்த மல்லிகை மலர்போல் கண்ணைக் கவரும் வெண்மை வாய்ந்து தன்னொளியால் உலகத்தை முழுவதுமே துலங்கச் செய்வதும், வட்டமானதும், பரமசிவனுக்கு நிழல் கொடுப்பதால் அவருடைய மலரடிகளை அண்டினோர்களுக்கு பரமானந்த ரூபமான மோக்ஷத்தைக் கூடக் கொடுப்பதும், இரத்தின மிழைத்த வளைகள் பூண்டு ஒளிரும் நந்தியின் கையால் உத்ஸாகத்தோடு தாங்கிப் பிடிக்கப்பட்டதும் ஆன பரமசிவனுடைய வெண்பட்டால் ஆன குடையாக அமைந்த சந்திரன் நம்மை எப்பொழுதும் வாட்டிக் கொண்டிருக்கும் கொடிய ஆபத்துக்களை விலக்கி அருளவேண்டும்.

**दिव्याकल्पोज्ज्वलानां शिवगिरिसुतयोः पार्श्वयोराश्रितानां**
**रुद्राणीसत्सखीनां मदतरलकटाक्षाञ्चलैरञ्चितानाम् ।**
**उद्वेल्लद्बाहुवल्लीविलसनसमये चामरान्दोलनीनाम्**
**उद्भूतः कङ्कणालीवलयकलकलो वारयेदापदो नः ॥ ३६ ॥**

திவ்யாகல்போஜ்ஜ்வலானாம் ஶிவகிரிஸுதயோ: பார்ஶ்வயோ-
ராஶ்ரிதானாம்
ருத்ராணி ஸத்ஸகீனாம் மததரளகடாக்ஷாஞ்சலைரஞ்சிதானாம் |
உத்வேல்லத்பாஹுவல்லீவிலஸனஸமயே சாமராந்தோளனீனாம்
உத்பூத: கங்கணாளீவலயகலகலோ வாரயேதாபதோ ந: || 36 ||

**दिव्य-आकल्प-उज्ज्वलानां** தேவலோகத்திற்கு ஏற்ற ஆபரணங்களால் விளங்குகிறவர்களும் **शिवगिरि-सुतयोः** பரமசிவன் பார்வதி இருவர்களுடையவும் **पार्श्वयोः** இரண்டுபக்கங்களிலும்

**आश्रितानां** இருக்கின்றவர்களும் **मदतरलकटाक्षाञ्चलैः** ஆனந்த மதத்தால் திளைத்த கடைக்கண் பார்வைகளோடு **अञ्चितानां** கூடியவர்களும் **रुद्राणी-सत्सखीनां** பார்வதியின் சிறந்த தோழிகளுமான **चामरान्दोलनीनां** சாமரம் வீசுகின்றவர்களுடைய **उद्वेलत्-बाहुवल्ली-विलसन-समये** மேலும் கீழுமாய் அசையும் கொடி போன்ற கைகளுடைய அழகிய விலாஸம் ஏற்படும் சமயத்தில் **उद्भूतः** உண்டாகும் **कङ्कणाली-वलय-कलकलः** கங்கணக் கூட்டம், வளைகள் இவைகளுடைய கல கலவென்ற சப்தம் **नः** நம்முடைய **आपदः** ஆபத்துக்களை **वारयेत्** அகற்றவேண்டும்.

கருத்து:—தேவர்களுக்கேற்ற அணிகள் அணிந்து பார்வதீ பரமேச்வரர்களின் பக்கத்தில் நிற்பதால் உண்டான ஆனந்த மதத்தால் திளைத்த கடைக் கண்களை உடையவர்களும், சாமரத்தைக் கையில் ஏந்தி வீசுகிறவர்களுமான பார்வதீ தேவியின் தோழிகளுடைய சாமரம்வீசும்பொழுது மேலுங் கீழுமாய் அழகாய் அசையும் கைகளில் இருக்கும் கங்கணங்கள், வளைகள் இவைகளுடைய இனிய ஒலி நம்மை ஆபத்துகளின் நின்று காக்கவேண்டும்.

**स्वर्गौकस्सुन्दरीणां सुललितवपुषां स्वामिसेवापराणां**
**वल्गद्भूषाणि वक्त्राम्बुजपरिविगलन्मुग्धगीतामृतानि ।**
**नित्यं नृत्तान्युपासे भुजविधृतिपदन्यासभावावलोक-**
**प्रत्युद्यत्प्रीतिमाद्यत्प्रमथनटनटीदत्तसंभावनानि ॥ ३७ ॥**

ஸ்வர்கௌகஸ்ஸுந்தரீணாம் ஸுலலிதவபுஷாம் ஸ்வாமிஸேவாபராணாம்
வல்கத்பூஷாணி வக்த்ராம்புஜபரிவிகலன்முக்தகீதாம்ருதானி ।
நித்யம் ந்ருத்தான்யுபாஸே புஜவித்ருதிபதன்யாஸபாவாவலோக-
ப்ரத்யுத்யத்ப்ரீதிமாத்யத்ப்ரமதநடநடீதத்தஸம்பாவனானி ॥ 37 ॥

**सुललितवपुषां** மிக அழகான சரீரத்தை உடையவர்களும் **स्वामिसेवापराणां** எல்லோருக்கும் யஜமானனாகிய பரமசிவனை ஸேவைசெய்வதில் ஆவல் கொண்டவர்களும் **स्वर्गौकस्सुन्दरीणां** தேவலோகத்தில் வாஸம் செய்யும் அப்ஸரஸ்ஸுகளுடைய **वल्गद्भूषाणि** அசையும் அலங்காரங்களை உடையவர்களும் **वक्त्राम्बुज-परिविगलन्-मुग्धगीतामृतानि** முகமாகும் தாமரைகளினின்று இனிய பாட்டாகிற அமிர்தத்தைப் பெருக்குகிறவர்களும் **भुज-विधुति पदन्यास-भावा-वलोक-प्रत्युद्यत्- प्रीति-माद्यत्-प्रमथ-नट-नटी-दत्त-संभावनानि** கைகளின் அசைதல்கள், கால் வைத்தல், ச்ருங்காரம் முதலிய பாவங்கள், இவைகளைப் பார்ப்பதால் உண்டாகும் சந்தோஷத்தினால் மதங்கொண்ட ப்ரமத கணத்தைச் சார்ந்த நடர்கள் நடிகள் இவர்களால் கொடுக்கப்பட்ட கௌரவத்தை உடையவைகளும் ஆன **नृत्तानि** நர்த்தனங்களை **नित्यम्** எப்பொழுதும் **उपासे** சேவிக்கின்றேன்.

கருத்து:—அழகிய மேனியை உடைய அப்ஸரஸ்த்ரீகள் பரமசிவனை ஸேவிப்பதற்கு ஆவல் கொண்டவர்களாய், அலங்காரங்கள் அசைந்து ஒலித்துக்கொண்டும, மலர்ந்த தாமரையினின்று பெருகும் தேன்போல் இனிமையான பாட்டைப் பாடிக்கொண்டும் நர்த்தனம் செய்கிறார்கள். அதனிடையே ஹஸ்தாக்ஷேபம், பாதன்யாஸம், பாவங்கள் இவைகளைக் கண்டு களிப்புற்றுத் தாங்காமல் மதங்கொண்டு தன்னை மறந்து ப்ரமத கணங்களே ஸாதுகாரம் செய்கின்றன. அந்த நர்த்தனங்களை நான் ஸேவிக்கின்றேன்.

**स्थानप्राप्त्या स्वराणां किमपि विशदतां व्यञ्जयन्मञ्जुवीणा-**
**स्वानावच्छिन्नतालक्रममृतमिवास्वाद्यमानं शिवाभ्याम् ।**
**नानारागातिहृद्यं नवरसमधुरस्तोत्रजातानुविद्धं**
**गानं वीणामहर्षेः कलमतिललितं कर्णपूरायतां नः ॥ ३८ ॥**

ஸ்தானப்ராப்த்யா ஸ்வராணும் கிமபி விசததாம் வ்யஞ்ஜயன் மஞ்ஜுவீணு-
ஸ்வாநுவச்சின்னதாலக்ரமமம்ருதமிவாஸ்வாத்யமானம் சிவாப்-
யாம் |
நாநாராகாதிஹ்ருத்யம் நவரஸமதுரஸ்தோத்ரஜாதாநுவித்தம்
கானம் வீணமஹர்ஷேः கலமதிலலிதம் கர்ணபூராயதாம் நः ॥ 38 ॥

**स्थानप्राप्त्या** ஸ்வரஸ்தானம் என்று கூறப்படும் அந்தந்த ஸ்தானங்களை அடைந்திருப்பதால் **स्वराणां** நிஷாதம் ரிஷபம் முதலிய ஸ்வரங்களுக்கு **विशदतां** தெளிவாக இருக்கும் தன்மையை **किमपि** சொல்ல முடியாதபடி அழகாக **व्यञ्जयन्** வெளிக்காட்டிக் கொண்டும் **मञ्जुवीणा-स्वाना वच्छिन्न-ताल-क्रमं** இனிய வீணையின் நாதத்தோடு சேர்ந்து இழையும் தாளக்ரமத்தை உடையதும் **शिवाभ्यां** பார்வதீ பரமேச்வரர்களால் **अमृतं इव** அமுதத்தைப்போல் **आस्वाद्यमानं** அனுபவிக்கப் படுகின்றதும். **नाना-रागाति-हृद्यं** பற்பல ராகங்களால் மனதைக் கவரக்கூடியதும் **नवरस-मधुर-स्तोत्र जातानुविद्धं** ஒன்பது ரஸங்களால் இனிமை நிறைந்த ஸ்தோத்திரங்களோடு இசைந்ததும் **अतिललितं** மிக எளிமை வாய்ந்ததும் **कलं** சொல்லொணு இனிமை வாய்ந்ததும் ஆன **वीणामहर्षेः** வீணை தாங்கி எப்பொழுதும் பாடிக்கொண்டு இருக்கும் மஹரிஷியான நாரதருடைய **गानं** பாட்டு **नः** நமது **कर्णपूरायतां** காதுகளை நிரப்பி இன்புறச்செய்யட்டும்.

கருத்து:—ஸ்வரங்களை அதனதன் ஸ்தானங்களின் நின்று வழுவாமல் பாடுவதால் தேவர்களும் இது வரையில் அறியாத ஓர் தெளிவை ஸ்வரங்களுக்கு விளக்கிக்கொண்டும், இனிய வீணநாதத்தோடு வேறுபடாமல் கலந்து ஒழுகி வரும் தாளங்களை உடையதும், பார்வதீ பரமேச்வரர்கள் அமுதம்போல் ஆனந்தமாய்ப் பருகுவதும், பற்பல ராகங்கள் கலந்திருப்பதால் மிக மனோகரமாயிருப்பதும், ச்ருங்காரம், ஹாஸ்யம் முதலிய ஒன்பது ரஸங்கள்கொண்ட

ஸ்தோத்திரங்களோடு இணைந்ததும், எளிமைக்கு இருப்பிடம் போன்றதும், சொல்ல இயலாத இனிமை வாய்ந்தது மான நாரத முனிவரின் பாட்டு நம் காதிற்கு இன்பத்தை ஊட்டவேண்டும்.

**चेतो जातप्रमोदं सपदि विदधती प्राणिनां वाणिनीनां**
**पाणिद्वन्द्वाग्रजाग्रत्सुललितरणितस्वर्णतालानुकूला ।**
**स्वीयारावेण पाथोधररवपटुना नादयन्ती मयूरीं**
**मायूरी मन्दभावं मणिमुरजभवा मार्जना मार्जयेन्नः ॥ ३९ ॥**

சேதோ ஜாதப்ரமோதம் ஸபதி விதததீ ப்ராணினாம் வாணினீனாம்
பாணித்வந்த்வாக்ரஜாக்ரத்ஸுலலிதரணிதஸ்வர்ணதாலானுகூலா
ஸ்வீயாராவேண பாதோதரரவபடுனா நாதயந்தீ மயூரீம்
மாயூரீ மந்தபாவம் மணிமுரஜபவா மார்ஜனா மார்ஜயேன்னஃ ॥ 39

**प्राणिनां** ப்ராணிகளுடைய **चेतः** மனதை **सपदि** உடனே **जातप्रमोदं** சந்தோஷத்தோடு கூடினதாக **विदधती** செய்துகொண்டும் **वाणिनीनां** நர்த்தகிகளுடைய **पाणिद्वन्द्वा-ग्र-जाग्रत्-सुललित-रणित-स्वर्ण-तालानुकूला** கைகளின் நுனியில் விளங்குவதும், மிக அழகானதும், அசைகின்றதுமான தங்கத்தால் செய்த தாளவாத்யத்திற்கு ஒத்ததும், **पाथोधर-रव-पटुना** மேகத்தின் முழக்கம்போல் கம்பீரமான **स्वीयारावेण** தனது சப்தத்தால் **मयूरीं** பெண்மயிலை **नादयन्ती** அகவச்செய்கின்றதுமான **मायूरी** மயிலின் நர்த்தனத்திற்கு ஒத்த **मणिमुरजभवा** இரத்தினமிழைத்த ம்ருதங்கத்தில் நின்று உண்டான **मार्जना** ம்ருதங்கத்தின் வாசிப்பு **नः** நம்முடைய **मन्दभावं** சோம்பலை **मार्जयेत्** அகற்றவேண்டும்.

கருத்து—தன்னைக்கேட்கும் பிராணிகளுக்கு உடனேயே இன்பத்தை கொடுப்பதும், நர்த்தகிகளின் கையில் துலங்கும் தங்கத்தால் ஆன தாளமிடும் வாத்தியத்திற்கு இசைந்ததும், மேகத்தின் குடுகுடு என்ற சப்தத்திற்கு நிகரான

தனது ஓசையால் மயிலை அகவச்செய்கின்றதும், மயிலின் நடனத்திற்கு ஏற்றதும் ஆன பசுபதியின் சபையில் வாசிக்கும் இரத்தினம் இழைத்த ம்ருதங்கத்தின் இனிய ஓசை நமது சோம்பலை அகற்றவேண்டும்.

देवेभ्यो दानवेभ्यः पितृमुनिपरिषत्सिद्धविद्याधरेभ्यः
साध्येभ्यश्चारणेभ्यो मनुजपशुपतज्जातिकीटादिकेभ्यः ।
श्रीकैलासप्ररूढास्तृणविटपिमुखाश्चापि ये सन्ति तेभ्यः
सर्वेभ्यो निर्विचारं नतिमुपरचये शर्वपादाश्रयेभ्यः ॥ ४० ॥

தேவேப்யோ தானவேப்ய: பித்ருமுனிபரிஷத்ஸித்தவித்யாதரேப்ய:
ஸாத்யேப்யஸ்சாரணேப்யோ மனுஜபசுபதஜ்ஜாதிகீடாதிகேப்ய: ।
ஸ்ரீகைலாஸப்ரரூடாஸ்த்ருணவிடபிமுகாஸ்சாபி யே ஸந்தி தேப்ய:
ஸர்வேப்யோ நிர்விசாரம் நதிமுபரசயே ஸர்வபாதாஸ்ரயேப்ய:

**देवेभ्यः** தேவர்களுக்கும் **दानवेभ्यः** அசுரர்களுக்கும் **पितृ-मुनि-परिषत्-सिद्ध-विद्याधरेभ्यः** பித்ருக்கள், மஹரிஷிகள் இவர்களுடைய ஸபை, ஸித்தாள் வித்யாதரர்கள் இவர்களுக்கும் **साध्येभ्यः** ஸாத்யர்களுக்கும் **चारणेभ्यः** சாரணர்களுக்கும் **मनुज-पशु-पतज्जाति-कीटादिकेभ्यः** மனிதர்கள், மிருகங்கள், பறவை இனத்தைச் சேர்ந்தவைகள், புழு முதலியவைகளுக்கும், **श्रीकैलास-प्ररूढाः** ஸ்ரீ கைலாஸத்தில் முளைத்த **तृण-विटपि-मुखाः** புல் மரங்கள் முதலிய **ये च** எவைகள் **सन्ति** இருக்கின்றனவோ **शर्वपादाश्रयेभ्यः** சிவன் மலரடியைபற்றி இருக்கின்ற **तेभ्यः** அந்த **सर्वेभ्यः अपि** எல்லாவற்றிற்கும் **निर्विचारं** வேறு எண்ணங்கள் இல்லாமல் **नतिं** நமஸ்காரத்தை **उपरचये** செய்கின்றேன்.

கருத்து:—உலகில் பிறந்ததற்கு சிவனை வணங்கி வழிபடுவதே சிறந்த பலமாகும். த்யானத்தாலோ சரீரத்தாலோ எவ்விதமாகிலும் அவரை அணுகியவர்களே பெரி

யோர்கள். எத்தனையோ யாகங்களையும், தவங்களையும் செய்து தேவர் முதலிய பிறப்பு எடுத்தோர்களும் அந்தப் பரமசிவனைத் தான் த்யானம் செய்து தர்சித்து இன்புறுகிறார்கள். அந்த சிவபெருமான் அத்தகைய தனது அடியாருக்கும் அடியானாக விளங்குகிறார். ஆகவே பரமசிவன் கருணைக்குப் பாத்திரமாகிய சிவத்யானம் செய்கின்ற இந்திரன் முதலிய தேவர்களுக்கும், பலி முதலிய அசுரர்களுக்கும், பித்ருக்களுக்கும், ஸனகாதி மஹரிஷிகளுக்கும், ஸித்தர்கள், ஸாத்யாள், வித்யாதரர்கள், சாரணாள் முதலிய தேவயோனியில் பிறந்தவர்களுக்கும், மனிதர்கள், நாற்கால் பிராணிகள், பறவைகள், புழுக்கள் முதலியவைகளுக்கும், கைலாயத்தில் முளைத்து சிவபெருமான் திருவடி படும் பாக்கியம் கொண்ட புற்களுக்கும், அவர் உலவும் ஸமயங்களில் அவருக்கு நிழல் கொடுக்கும் பேறுபெற்ற மரங்களுக்கும், மற்றும் கைலாஸத்தில் உண்டான பொருள்களுக்கும் என் மனதை ஒருமுகமாய் வைத்துக்கொண்டு வேறு கவலை இல்லாமல் நமஸ்காரம் செய்கிறேன்.

**ध्यायन्नित्थं प्रभाते प्रतिदिवसमिदं स्तोत्ररत्नं पठेद्यः**
**किं वा ब्रूमस्तदीयं सुचरितमथवा कीर्तयामः समासात् ।**
**सम्पज्जातं समग्रं सदसि बहुमतिं सर्वलोकप्रियत्वं**
**संप्राप्यायुश्शतान्ते पदमयति परब्रह्मणो मन्मथारेः ॥ ४१ ॥**

*த்யாயன்னித்தம் ப்ரபாதே ப்ரதிதிவஸமிதம் ஸ்தோத்ரரத்னம் படேத்ய:*
*கிம் வா ப்ரூமஸ்ததீயம் ஸுசரிதமதவா கீர்த்தயாம: ஸமாஸாத் |*
*ஸம்பஜ்ஜாதம் ஸமக்ரம் ஸதஸி பஹுமதிம் ஸர்வலோகப்ரியத்வம்*
*ஸம்ப்ராப்யாயுஶ்ஶதாந்தே பதமயதி பரப்ரஹ்மணோ மன்மதாரே:*

**प्रतिदिवसं** ஒவ்வொருநாளும் **प्रभाते** விடியற்காலையில் **इत्थं** இம்மாதிரி **ध्यायन्** த்யானம் செய்துகொண்டு **यः** எவன்

इदं இந்த स्तोत्ररत्नं சிறந்த ஸ்துதியை पठेत् படிப்பானோ तदीयं அவனுடைய सुचरितं புண்யத்தை किं वा என்னவென்று ब्रूमः கூறுவோம். अथवा இல்லாவிடில் समासात् சுருக்கமாக कीर्तयामः சொல்லுகிறோம். समग्रं பூர்ணமான संपज्जातं சம்பத்துக்களின் கூட்டத்தையும் सदसि பெரிய வித்வான்கள் நிறைந்த சபையில் बहुमतिं வெகுமதியையும் सर्वलोकप्रियत्वं உலகிலுள்ள எல்லோருக்கும்பிரியமாகஇருக்கும் தன்மையையும் सम्प्राप्य அடைந்து आयुश्शतान्ते நூறு வயதிற்குப் பிறகு परब्रह्मण: பரப்ரம்மரூபமான मन्मथारेः மன்மதனை வென்ற பரமசிவனுடைய पदं ஸ்தானத்தை अयति அடைகிறான்.

கருத்து :-பரமசிவனுடைய மஹிமையை எடுத்து விளக்குவதால் சொல்ல முடியாத மாஹாத்மியம் நிறைந்த இந்த ஸ்தோத்திரத்தை பக்தியோடு எவன் அதிகாலையில் பாராயணம் செய்கின்றானோ அவனுடைய புண்ய விசேஷத்தை உரைக்க யாரால் தான் முடியும். ஆகிலும் நாம் சுருக்கமாக வேண்டுமானால் இங்கு குறிப்பிடலாம். எல்லா விதமான சம்பத்துக்களையும், அறிந்த பெரியோர்கள் நிறைந்த ஸபையில் வெகுமானத்தையும், உலகத்தோர் அனைவரும் அன்போடு பழகும் உத்தம குணத்தையும் அடைந்து, நூறு வருஷகாலம் இன்புற்று வாழ்ந்து பிறகு பரப்ரம்மரூபியாயும், மாயைக்கும் அப்பால் இருப்பவரும், மோக்ஷஸ்வரூபியாயும் இருக்கும் ஸதாசிவனுடைய நிலையை அடைகிறான்.

श्री शिवपादादिकेशान्तवर्णनस्तोत्रम् समाप्तम्

॥ ஸ்ரீ சிவபாதாதிகேஶாந்தவர்ணன ஸ்தோத்ரம் முற்றிற்று ॥

॥ श्रीः ॥

# ॥ श्री शिवकेशादिपादान्तवर्णनस्तोत्रम् ॥

## ஸ்ரீ சிவகேசாதிபாதாந்த வர்ணன ஸ்தோத்ரம்

---

देयासुर्मूर्ध्नि राजत्सरससुरसरित्पारपर्यन्तनिर्य-
त्प्रांशुस्तम्बाः पिशङ्गास्तुलितपरिणतारक्तशालीलता वः ।
दुर्वारापत्तिगर्तश्रितनिखिलजनोत्तारणे रज्जुभूताः
घोराघोर्वीरुहालीदहनशिखिशिखाः शर्म शार्वाः कपर्दाः ॥ १ ॥

தேயாஸுர்மூர்த்நி ராஜத்ஸரஸஸுரஸரித்பாரபர்யந்தநிர்யத்
ப்ராம்ஶுஸ்தம்பா: பிஶங்காஸ்துலிதபரிணதாரக்தஶாலீலதா வ: ।
துர்வாராபத்திகர்தஶ்ரிதநிகிலஜநோத்தாரணே ரஜ்ஜுபூதா:
கோராகோர்வீருஹாலீதஹநஶிகிஶிகா: ஶர்ம ஶார்வா:
கபர்தா: ॥ 1 ॥

मूर्ध्नि தலையில் राजत्-सरस-सुरसरित्-पार-पर्यन्त-निर्यत्-प्रांशु-स्तम्बाः பிரகாசிக்கின்ற ப்ரவாஹத்தோடு கூடிய தேவகங்கையின் கரையோரங்களில் முளைத்துத் துலங்குகின்ற உயரமான புற்களைப் போன்றவைகளும், पिशङ्गाः மஞ்சளானவைகளும் तुलित-परिणता-रक्तशाली-लताः பழுத்துச் சிறிது சிவந்த நெற்பயிர்போன்றவைகளும், दुर्वारा-पत्ति-गर्त-श्रित-निखिल-जनो-त्तारणे தடுக்க முடியாத ஆபத்தாகின்ற குழியில் விழுந்திருக்கும் எல்லா ஜனங்களையும் கரையேற்றுவதில் रज्जुभूताः கயிறுனவைகளும் घोरा-घो-र्वीरुहाली-दहन-शिखि-शिखाः கொடிய பாபங்களாகிற மரக்கூட்டங்களை எரிப்பதில் அக்னி ஜ்வாலைகளாயுமிருக்கின்ற शार्वाः பரமசிவனுடைய कपर्दाः ஜடைகள் वः உங்களுக்கு शर्म க்ஷேமத்தை देयासुः கொடுக்கட்டும்.

கருத்து:—கங்கை ப்ரவாஹம் கரைபுரண்டு ஓடும்பொழுது அதன் இருகரையோரங்களில் முளைத்த புல்போல் காக்ஷி அளிக்கின்றவைகளும், மஞ்சள்நிறம் பூண்டு பழுத்துச் சிறிது சிவப்போடிப் பாதி மடிந்து கிடக்கும் நெற்பயிர் போன்றவைகளும், தாளாத் துயரம் என்ற படுகுழியில்விழுந்து மேல் ஏற வழிதெரியாமல் துன்புறும் மாந்தர்களைக் கரையேற்றுவதற்கு உகந்த கயிறுபோன்றவைகளும், பாபமென்னும் விஷவிருக்ஷங்களை எரித்துச் சாம்பல் ஆக்குவதற்கு அக்னிசிகை போன்றவைகளுமான பரமசிவன் தலையில் விளங்கும் ஜடைகள் நமக்கு க்ஷேமத்தை கொடுக்கவேண்டும்.

குறிப்பு—பகிரதன் தவம் செய்து பரமசிவனை நேரில் பூமியில் விழும் கங்கையைத் தாங்கும்படி பிரார்த்தித்ததும், கங்காதேவி பரமசிவனையும் அடித்துக்கொண்டு போய்விடலாம் என்று கர்வம்கொண்டு வானுலகத்தினின்று இறங்கியதும், சிவபெருமான் ஜடையில் கட்டுண்டு கிடந்ததும் புராணங்களைக்கேட்டு உணர்ந்தவர்கள் அறிந்த விஷயம். இந்த ஸ்தோத்திரம் இயற்றிய பரமாசார்யர் தலையை வர்ணிப்பதற்குத் தொடங்கியபொழுது அவர் தலையில் இருக்கும் ஜடையையும், அதில் கட்டுண்டு கிடக்கும் கங்கையையும், அவ்விரண்டுகளின் சேர்க்கையின் வனப்பையும் இந்த ச்லோகத்தில் எடுத்துக் காட்டுகிறார்.

कुर्वन्निर्वाणमार्गप्रगमपरिलसद्रूप्यसोपानशङ्कां
शक्रारीणां पुराणां त्रयविजयकृतस्पष्टरेखायमाणम् ।
अव्यादव्याजमुच्चैरलिकहिमधराधित्यकान्तस्त्रिधोद्य-
ज्जाह्नव्याभं मृडानीकमितुरुडुपरुक्पाण्डरं वस्त्रिपुण्ड्रम् ॥ २ ॥

குர்வந்நிர்வாணமார்கப்ரகமபரிலஸத்ரூப்யஸோபானஶங்காம்
ஶக்ராரிணாம் புராணாம் த்ரயவிஜயக்ருதஸ்பஷ்டரேகாயமாணம் |
அவ்யாதவ்யாஜமுச்சைரலிகஹிமதராதித்யகாந்தஸ்த்ரிதோத்யஜ்
ஜாஹ்நவ்யாபம் ம்ருடாநீகமிதுருடுபருக்பாண்டரம் வஸ்த்ரிபுண்
ட்ரம் ‖ 2 ‖

**निर्वाण-मार्ग - प्रगम-परिलसत् - रूप्य-सोपान-शङ्कां** மோக்ஷ மார்க்கத்தில் போவதற்கு அழகிய வெள்ளிப் படிக் கட்டோ என்ற ஸந்தேகத்தை **कुर्वत्** செய்துகொண்டும் **शक्रारीणां** தேவேந்திரனுடைய விரோதிகளாகின்ற **पुराणां त्रय-विजय-कृत-स्पष्ट-रेखायमाणं** புரர்கள் என்ற மூன்று அசுரர் களை வென்றதைக் காட்டுவதற்குபோல் செய்த மூன்று கோடுகள் போன்றதும் **उच्चैः** உயர்ந்த **अलिक-हिमधरा-धित्यकान्त-स्त्रिधोद्यत्-जाह्नव्याभं** நெற்றியாகிற ஹிமவானுடைய தாழ்வரையில் மூன்றாகக் கிளம்பும் கங்கையைப்போன்ற தும் ஆன **मृडानीकमितुः** உலகை காத்தருளும் பார்வதியின் பர்த்தாவாகிய பரமசிவனுடைய **उडुपरुक्पाण्डरं** நக்ஷத்திர நாயகனாகிய சந்திரன் போல் வெளுத்த **त्रिपुण्ड्रं** மூன்று பட்டையாகிய நெற்றியில் அணிந்த விபூதி **वः** உங்களை **अव्याजं** கபடமின்றி **अव्यात्** காத்து அருளட்டும்.

கருத்து:—பரமசிவன் நெற்றியில் மூன்று பட்டைகளால் அணிந்த திருநீறு, மோக்ஷமார்க்கத்தில் செல்லுகிறவர் களுக்கு எளிதாய் ஏறுவதற்கு கட்டிய வெள்ளிப் படிக் கட்டு போலும், தேவர்களின் பகைவர்களாகிய புரர்கள் என்ற மூன்று அசுரர்களை வென்றதற்கு அடையாளமாகிய மூன்றுகோடுகள் போலும், நெற்றி யென்னும் ஹிமவானில் நின்று மூன்றாகப் பெருகும் கங்கைபோலவும், துலங்குகிறது. சந்திரன் போல் வெளுப்பான அந்த த்ரிபுண்ட்ரம் எங்களைக் கபடமின்றி எப்பொழுதும் இன்புறச் செய்யவேண்டும்.

क्रुद्ध्यद्गौरीप्रसादानतिसमयपदाङ्गुष्ठसंक्रान्तलाक्षा-
बिन्दुस्पर्धि स्मरारेः स्फटिकमणिदृषन्मग्नमाणिक्यशोभम् ।
मूर्ध्न्युद्यद्दिव्यसिन्धोः पतितशफरिकाकारि वो मास्तकं स्तात्
अस्तोकापत्तिकृत्त्यै हुतवहकणिकामोक्षरूक्षं सदाक्षि ॥ ३ ॥

க்ருத்யத்கௌரீப்ரஸாதாநதிஸமயபதாங்குஷ்டஸங்க்ராந்த-லாக்ஷா-
பிந்துஸ்பர்தி ஸ்மராரே: ஸ்படிகமணித்ருஷந்மக்நமாணிக்ய-ஶோபம் |
மூர்த்ந்யுத்யத்திவ்யஸிந்தோ: பதிதஶபரிகாகாரி வோ மாஸ்தகம் ஸ்தாத்
அஸ்தோகாபத்திக்ருத்யை ஹுதவஹகணிகாமோக்ஷரூக்ஷம் ஸதாக்ஷி ‖ 3 ‖

**क्रुद्ध्यत्-गौरी-प्रसादा-नति-समय-पदाङ्गुष्ठ-संक्रान्त-लाक्षा-बिन्दु-स्पर्धि** ப்ரணய கோபம் கொண்ட பார்வதியை ஸமாதானம் செய்வதற்காகக் காலில் விழுந்து வணங்கிய பொழுது கால் கட்டை விரலில் நின்று பற்றிக்கொண்ட செம்பஞ்சுக் குழம்பின் துளியோடு சண்டை இடுவதாயும், **स्फटिक-मणि-दृषत्-मग्न-माणिक्य-शोभम्** நெற்றியாகிற ஸ்படிகக் கல்லில் பதித்த மாணிக்கத்தின் ஒளி வாய்ந்ததும் **मूर्ध्न्युद्यद्-दिव्य-सिन्धोः** தலையில் துலங்கும் தேவகங்கையினின்று **पतित-शफरिका-कारि** விழுந்த பெண்மீன்போன்ற வடிவம் கொண்டதும் **हुतवह-कणिका-मोक्ष-रूक्षं** அக்னித் துளிகளை வெளிக் கக்குவதால் க்ரூரமாயும், **स्मरारेः** மன்மதனை வென்ற பரமசிவனுடைய **मास्तकं** தலையில் இருக்கின்றதும் ஆன **अक्षि** கண் **सदा** எப்பொழுதும் **वः** உங்களுடைய **अस्तोका-पत्ति-कृत्यै** அதிகமான ஆபத்தை அழிப்பதற்கு **स्तात्** இருக்கட்டும்;

கருத்து:—ப்ரணயகலஹத்தால் கோபித்த பார்வதியைச் சமாதானம் செய்வதற்காக தேவியின் திருவடிகளில் தனது நெற்றி இடிக்கும்படி பணிந்து தவறுதலை மன்னிக்கும்படி கேட்டபொழுது தேவியின் கால் கட்டை விரலில் இருந்து ஒட்டிக்கொண்ட செம்பஞ்சுக் குழம்பு போன்றதும், நெற்றியாகிற ஸ்படிகக் கல்லில் புதைத்த மாணிக்கம் போன்றதும், தலையிலிருக்கும் தேவகங்கையிலிருந்து துள்ளிக்குதித்துத் தவறிவந்த பெண் மீனோ என்று

வியக்கத்தக்கதும், எப்பொழுதும் நெருப்புத் துளியை கக்கு வதால் பயங்கரமாயுமிருக்கின்ற சிவபெருமானுடைய நெற்றிக்கண் உங்களுடைய அதிகமான ஆபத்தை அகற்ற உதவவேண்டும்.

भूत्यै दृग्भूतयोः स्याद्यदहिमहिमरुग्बिम्बयोः स्निग्धवर्णो
दैत्यौघध्वंसशंसी स्फुट इव परिवेषोऽवशेषो विभाति ।
सर्गस्थित्यन्तवृत्तिर्मयि समुपगतेऽतीव निर्वृत्तगर्वं
शर्वाणीभर्तुरुच्चैर्युगलमथ दधद्विभ्रमं तद्भ्रुवोर्वः ॥ ४ ॥

ஹூத்யை த்ருக் ஹூதயோ: ஸ்யாத்யதஹிமஹிமருக் பிம்ப-
யோ: ஸ்நிக்தவர்ணோ
தைத்யௌகத்வம்ஸஶம்ஸீ ஸ்ஃபுட இவ பரிவேஷோऽவ-
ஶேஷோ விபாதி |
ஸர்கஸ்திதித்யந்தவ்ருத்திர்மயி ஸமுபகதேऽதீவ நிர்வ்ருத்தகர்வம்
ஶர்வாணீபர்துருச்சைர்யுகளமத தததத்விப்ரமம் தத்ப்ருவோர்
வ: ॥ 4 ॥

**यत्** எது **दृग्भूतयोः** கண்ணுக இருக்கின்ற **अहिम-हिम-रुग्बिम्बयोः** சூர்ய சந்திரர்கள் பிம்பங்களுடைய, **स्निग्धवर्णः** வழவழப்பாய் மனதைக் கவரும் நிறமுடையதும், **दैत्यौघ-ध्वंस-शंसी** அசுரக்கூட்டங்களுடைய நாசத்தை குறிக்கின்றதும் ஆன **अवशेषः** பாக்கியுள்ள **परिवेषः इव** பரிவேஷத்தைப் போல் (சுற்றியிருக்கும் வட்டத்தைப்போல்) **स्फुटः** தெளிவானதாக **विभाति** துலங்குகிறதோ **सर्गस्थित्यन्तवृत्तिः** ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற மூன்று செய்கைகளை உடையதும் **समुपगते** நீயே தஞ்சம் என்றடைந்த **मयि** என்னிடத்தில் **अतीव** மிகவும் **निर्वृत्तगर्वं** கர்வமற்றதும் **अथ** மேலும் **विभ्रमं** அழகிய பற்பல விலாஸங்களை **दधत्** தரிக்கின்றதுமான **शर्वाणी-भर्तुः** பார்வதியின் நாயகனுகிய பரமசிவனுடைய **तत्** அந்த **उच्चैः** அழகால் உயர்வுற்ற **भ्रुवोः** புருவங்களுடைய **युगलं**

இரண்டும் **वः** உங்களுக்கு **भूत्यै** க்ஷேமத்தின்பொருட்டு **स्यात्** இருக்கட்டும்.

கருத்து:—சந்திரனும், சூர்யனும் பகவானுடைய கண்கள் என்று ஆகமங்களும், புராணங்களும் கூறுகின்றன. அவ்விருவர்களும் சிவபெருமான் கண்ணாக ஆனபொழுது தனித்திருக்கும் அவர்களுடைய பரிவேஷம் (சுற்றிலுமிருக்கும் வட்டம்) புருவங்களாகத் தோன்றுகின்றன. அவ்விதம் தனித்துக் காணப்படுவது இயற்கைக்கு மாறானதால் அது வோர் அபசகுனமாகக் கருதுவதுண்டு. ஆகவே அசுரர்களுக்கு கேடுகாலம் நெருங்கிவந்ததின் அறிகுறியாக எந்தப் புருவங்கள் தோன்றுகின்றனவோ, எவை ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற செய்கைகளைச் செய்துகொண்டிருக்கின்றனவோ, அசுரர்களிடத்தில் கட்டிலடங்கா கர்வம் கொண்டிருந்தபோதிலும் நீயே சரணம் என்று திருவடியில் வீழ்ந்து கிடக்கும் ஏழையாகிய என்னிடத்தில் சற்றும் கர்வம் இல்லாததும், அழகிய விலாஸங்கள் பொருந்தியதுமாகிய அந்த பரமசிவனின் இரண்டு புருவங்கள் ஐச்வர்யத்தை அளிக்கட்டும்.

**युग्मे रुक्माब्जपिङ्गे ग्रह इव पिहिते द्राग्ययोः प्राग्दुहित्रा**
**शैलस्य ध्वान्तनीलाम्बररचितबृहत्कञ्चुकोऽभूत्प्रपञ्चः ।**
**ते त्रैनेत्रे पवित्रे त्रिदशवरघटामित्रजैत्रोग्रशस्त्रे**
**नेत्रे नेत्रे भवेतां द्रुतमिह भवतामिन्द्रियाश्वान्नियन्तुम् ॥ ५ ॥**

யுக்மே ருக்மாப்ஜபிங்கே க்ரஹ இவ பிஹிதே த்ராக்யயோः ப்ராக் துஹித்ரா
ஶைலஸ்ய த்வாந்தநீலாம்பரரசிதப்ருஹத்கஞ்சுகோऽபூத் ப்ரபஞ்சः ।
தே த்ரைநேத்ரே பவித்ரே த்ரிதஶவரகடாமித்ரஜைத்ரோக்ர ஶஸ்த்ரே
நேத்ரே நேத்ரே பவேதாம் த்ருதமிஹ பவதாமிந்த்ரியாஶ்வாந்நியந்தும் ॥ 5 ॥

**प्राक्** முன்பு **शैलस्य** மலைகளில் சிறந்த ஹிமவானுடைய **दुहित्रा** பெண்ணாகிய பார்வதியால் **रुक्माब्ज-पिङ्गे** தங்கத் தாமரைபோல் மஞ்சளாகிய **ययोः** எந்தக் கண்களுடைய **युग्मे** இரண்டு **पिहिते** மூடப்பட்டபொழுது **प्रपञ्चः** உலகம் **ग्रहे इव** க்ரகணத்தில் போல் **ध्वान्त-नीलाम्बर-रचित-बृहत्कञ्चुकः** இருளாகிற கறுப்பு வஸ்திரத்தால் செய்த பெரிய கஞ்சுகத்தை உடையதாக **द्राक्** உடனே **अभूत्** ஆனதோ **त्रिदशवर-घटा-मित्र-जैत्रो-ग्र-शस्त्रे** சிறந்த தேவக்கூட்டத்திற்கு எதிரிகளான அசுரர்களை ஜயிப்பதற்கு உக்ரமான ஆயுதங்களாயும், **त्रैनेत्रे** பரமசிவனுடையதாயும் **पवित्रे** பரிசுத்தங்களாயுமிருக்கின்ற **ते नेत्रे** அந்தக் கண்கள் **इह** இங்கு **द्रुतं** சீக்கிரம் **भवतां** உங்களுடைய **इन्द्रियाश्वान्** இந்திரியங்களாகிற குதிரைகளை **नियन्तुं** அடக்குவதற்கு **नेत्रे** ஸாரதிகளாக **भवेतां** ஆகட்டும்.

கருத்து:—பரமசிவன் கண்கள் ஸூர்ய சந்திர வடிவமானதால் பார்வதி ஒரு சமயம் அவருடைய கண்ணைப் பொத்தியபொழுது உலகத்லத, க்ரகணம் பூர்ணமாய் ஏற்பட்ட ஸமயத்தில் போல் இருள் கவிந்து மூடிக்கொண்டுவிட்டது. அசுரர்களை வெல்வதற்குச் சிறந்த ஆயுதமான அந்தப் பரமசிவன் கண்கள் எனது இந்திரயங்களாகிற குதிரைகளை அடக்குவதில் ஸாரதிகளாக ஆகட்டும்.

குறிப்பு:—பரமசிவன் வலதுகண் திறந்தால் பகலும் மூடினல் இரவும் ஏற்படுகிறது என்று புராணங்களில் காண்கிறது. அவ்விதமே க்ரகணங்கள் கூட பார்வதி சிவன் கண்களை மூடுவதாலேயே உண்டாகின்றன என்று பெரியோர்கள் கூறுகிறார்கள்.

चण्डीवक्त्रार्पणेच्छोस्तदनु भगवतः पाण्डुरुक्पाण्डुगण्ड-
प्रोद्यत्कण्डूं विनेतुं वितनुत इव ये रत्नकोणैर्विघृष्टिम् ।
चण्डार्चिर्मण्डलाभे सततनतजनध्वान्तखण्डातिशौण्डे
चाण्डीशे ते श्रिये स्तामधिकमवनताखण्डले कुण्डले ते ॥ ६ ॥

சண்டீவக்த்ரார்பணேச்சோஸ்ததநு பகவத꞉ பாண்டுருக்பாண்-
டுகண்ட-
ப்ரோத்யத்கண்டூம் விநேதும் விதநுத இவ யே ரத்நகோணைர்-
விக்ருஷ்டிம் |
சண்டார்சிர்மண்டலாபே ஸததநதஜநத்வாந்தகண்டாதி-
சௌண்டே
சாண்டீசே தே ஶ்ரியே ஸ்தாமதிகமவநதாகண்டலே குண்டலே
வ꞉ ‖ 6 ‖

**चण्डी-वक्त्रा-र्पणेच्छोः** சண்டீதேவியின் முகத்தில் சும்ப னம் செய்ய விரும்பிய **भगवतः** பகவானுகிய பரமசிவனு டைய **पाण्डुरुक्-पाण्डु-गण्ड-प्रोद्यत्-कण्डूं** குண்டல காந்தி பட்டு வெளுத்த கன்னத்தில் உண்டாகும் தினவை **विनेतुम् इव** போக்குவதற்குப்போல் **ये** எந்தக் குண்டலங்கள் **तदनु** அதன் பக்கங்களில் **रत्नकोणैः** இரத்தினமிழைத்த ஓரங்க ளால் **विघृष्टिं** உரசுவதை **वितनुतः** செய்கின்றனவோ; **चण्डार्चि-र्मण्डलाभे** சூர்யமண்டலத்தின் ஒளி பொருந்தியவைக ளும், **सतत-नत-जन-ध्वान्त-खण्डा-तिशौण्डे** எப்பொழுதும் தனது மலரடிகளில் பணிந்த ஜனங்களுடைய உள்ளத்தில் உண் டான இருளை அழிப்பதில் மிகத் தேர்ச்சிபெற்றவைகளும், **अवनता-खण्डले** தேவேந்திரனுல் வணங்கப்பட்டதுமான **चाण्डीशे** பரமசிவனுடையதான **ते** அந்த **कुण्डले** குண்டலங் கள் **वः** உங்களுக்கு **अधिकं** அதிகமாக **श्रिये** சம்பத்தின் பொருட்டு **स्तां** இருக்கட்டும்.

கருத்து:—பரமசிவன் காதில் இரத்தினமிழைத்து சூர்ய மண்டலம்போல் ஒளி வீசிக்கொண்டு தொங்கும் எந்த குண் டலங்கள், தனது ஒளியால் அவர் கன்னங்களை வெண்மை யாகத் துலங்கச் செய்துகிறதுகளோ; சிவன் சண்டீச்வரியின் இதழைப் பருக ஆவலோடு அசைந்து அணுகியபொழுது கன்னத்தில் இருக்கும் தினவை அகற்றுவதற்குபோல் எவை கள் உராயுகின்றனவோ; தன் திருமலரடி பணிந்து ஸேவிப் போர் உள்ளத்தின் இருளை அகற்றுவதில் திறன்பூண்டவை

களும், தேவேந்திரன் பணிவதுமான சண்டீசுவரனுடைய அந்த குண்டலங்கள் உங்களுக்கு அதிகமான சம்பத்தை கொடுப்பவைகளாய் இருக்கட்டும்.

**खट्वाङ्गोदग्रपाणेः स्फुटविकटपुटो वक्त्ररन्ध्रप्रवेश-**
**प्रेप्सूदञ्चत्फणोरुश्वसदतिधवलाहीन्द्रशङ्कां दधानः ।**
**युष्माकं कम्रवक्त्राम्बुरुहपरिलसत्कर्णिकाकारशोभः**
**शश्वत्त्राणाय भूयादलमतिविमलोत्तुङ्गकोणः स घोणः ॥ ७ ॥**

கட்வாங்கோதக்ரபாணே: ஸ்புடவிகடபுடோ வக்த்ரரந்த்ர-ப்ரவேஶ-
ப்ரேப்ஸூதஞ்சத்பணோருஶ்வஸததிதவளாஹீந்த்ரஶங்காம் தயான: ।
யுஷ்மாகம் கம்ரவக்த்ராம்புருஹபரிலஸத்கர்ணிகாகாரஶோப:
ஶஶ்வத் த்ராணாய பூயாதலமதிவிமலோத்துங்ககோண: ஸ கோண: ॥ 7 ॥

**स्फुट-विकट-पुटः** தெளிவாய் உயர்ந்த சுற்றுப்ரதேசத்தை உடையதும், **वक्त्ररन्ध्र-प्रवेश-प्रेप्सूदञ्चत्-फणो-रुश्वसदति-धवला-हीन्द्र-शङ्कां** வாயாகிற த்வாரத்திற்குள் நுழைய விருப்பங் கொண்டு, படமெடுத்து பெருமூச்சுவிடும் மிக வெள்ளையான பெரிய பாம்போ என்ற ஸந்தேகத்தை **दधानः** செய்துகொண்டும் **कम्र - वक्त्रा - म्बुरुह-परिलसत् - कर्णिका - कार - शोभः** அழகிய தாமரையின் நடுவில் விளங்கும் கர்ணிகைபோன்ற காந்தியுடையதும், **अति-विमलो-त्तुङ्ग-कोणः** மிகவும் பரிசுத்தமாய் உயர்ந்த நுனியை உடையதுமான -**खट्वाङ्गोदग्रपाणेः** கட்வாங்கம் என்ற ஆயுதத்தைத் தாங்கிய கையை உடைய பரமசிவனுடைய **सः** அந்த **घोणः** மூக்கு **युष्माकं** உங்களுடைய **त्राणाय** காப்பாற்றுவதற்காக **शश्वत्** எப்பொழுதும் **अलं भूयात्** திறமையோடுகூடியதாக இருக்கட்டும்.

கருத்து:—கையில் கட்வாங்கம் தாங்கி நிற்கும் பரமசிவனுடைய முகத்தில் விளங்கும் மூக்கு உயர்ந்திருப்பதால், வாய் என்னும் பிலத்வாரத்தில் ப்ரவேசிக்க விருப்பம் கொண்டு படமெடுத்துச் சீறும் பாம்போ வென்ற ஸந்தேகத்தை உண்டாக்குவதும், மேலும் முகமாகிற செந்தாமரைக் கிடையில் ஒளிரும் கர்ணிகார புஷ்பத்தின் வடிவம் கொண்டதும், நுனியில் சற்று மேல்தூக்கி முகத்திற்குக் கவர்ச்சி யளிப்பதுமாகத் துலங்கும் அந்த மூக்கு உங்களை எப்பொழுதும் காக்கவேண்டும்.

குறிப்பு—கட்வாங்கம் நுனியில் மண்டையோட்டையுடை ஓர் தடி

क्रुद्ध्यत्यद्धा ययोः स्वां तनुमतिलसतोर्बिम्बितां लक्षयन्ती
भर्त्रे स्पर्धातिनिघ्ना मुहुरितरवधूशङ्कया शैलकन्या ।
युष्मांस्तौ शश्वदुच्चैरबहुलदशमीशर्वरीशातिशुभ्रौ
अव्यास्तां दिव्यसिन्धोः कमितुरवनमल्लोकपालौ कपोलौ ॥ ८ ॥

க்ருத்₄யத்யத்₃தா₄ யயோ: ஸ்வாம் தனுமதிலஸதோர்பி₃ம்பி₃தாம் லக்ஷயந்தீ
ப₄ர்த்ரே ஸ்பர்தா₄திநிக்₄நா முஹுரிதரவதூ₄-ஶங்கயா ஶைல-கன்யா ।
யுஷ்மாம்ஸ்தௌ ஶஶ்வது₃ச்சைரப₃ஹுலத₃ஶமீஶர்வரீஶாதி-ஶுப்₄ரௌ
அவ்யாஸ்தாம் தி₃வ்யஸிந்தோ₄: கமிதுரவனமல்லோகபாலௌ கபோலௌ ॥ 8 ॥

**अतिलसतोः** மிகவும் ப்ரகாசிக்கின்ற **ययोः** எந்த கபோலங்களில் **बिम्बितां** ப்ரதிபலித்த **स्वां तनुं** தன் சரீரத்தை **लक्षयन्ती** பார்த்துக்கொண்டு **इतरवधूशङ्कया** வேறு ஸ்த்ரீ என்ற ஸந்தேகத்தினால் **शैलकन्या** மலைமகளாகிய பார்வதீ **स्पर्धातिनिघ्ना** அசூயை கவிந்தவளாக **भर्त्रे** பர்த்தாவினிடத்தில் **मुहुः** அடிக்கடி **क्रुद्ध्यति** கோபித்துக்கொள்ளுகிறுளோ, **अद्धा** ஆச்சரியம். **अबहुल-दशमी-शर्वरीशा-तिशुभ्रौ** சுக்லபக்ஷத்து தசமியில் உள்ள சந்திரனைப்போல் மிகவும் வெளுப்பானவை

களும் **अवनमल्लोकपालौ** வணங்கும் விஷ்ணு முதலிய லோக பாலர்களை உடையவைகளும் ஆன **दिव्यसिन्धोः** தேவ கங்கைக்கு **कमितुः** பர்த்தாவாகிய பரமசிவனுடைய **तौ** அழகாயிருப்பதால் புகழ்பெற்ற **कपोलौ** கன்னங்கள் **शश्वत्** எப்பொழுதும் **युष्मान्** உங்களை **उच्चैः** உயர்ந்த நிலையில் இருக்கும்படி **अव्यास्तां** காப்பாற்றவேண்டும்.

கருத்து:—அலம்பித் துடைத்து விளங்கும் ஸ்படிகக் கல் போன்ற சிவபெருமான் கன்னங்களில் பார்வதி அன்னை தனது நிழலையே கண்டு வேறு ஸ்த்ரீ இருப்பதாய் நினைத்து பர்த்தாவினிடம், சக்களத்தியிடம் உள்ள பொறாமையால் அதிகமாய் கோபிக்க நேருகிறது. அத்தகைய சுக்லபக்ஷ தசமி சந்திரன்போல் துலங்குவதும், இந்திரன், விஷ்ணு முதலிய லோகபாலர்கள் வணங்குவதுமான கங்கா தேவியினிடம் அன்புகொண்ட பரமசிவனுடைய கன்னங்கள் நம்மைக் காத்து இரக்ஷிக்கவேண்டும்.

**यो भासा भात्युपान्तस्थित इव निभृतं कौस्तुभो द्रष्टुमिच्छन्**
**सोत्थस्नेहान्नितान्तं गलगतगरलं पत्युरुच्चैः पशूनाम् ।**
**प्रोद्यत्प्रेम्णा यमार्द्रा पिबति गिरिसुता सम्पदः सातिरेका**
**लोकाः शोणीकृतान्ता यदधरमहसा सोऽधरो वो विधत्ताम् ॥**

யோ ஹாஸா ஹாத்யுபாந்தஸ்யித இவ நிஹ்ருதம் கௌஸ்துஹோ த்ரஷ்டுமிச்ஹன்
ஸோத்ய்ஸ்நேஹாந்நிதாந்தம் கலகதகரளம் பத்யுருச்சைஃ பஶூநாம் |
ப்ரோத்யத்ப்ரேம்ணு யமார்த்ரா பிவதி கிரிஸுதா ஸம்பதஃ ஸாதிரேகா
லோகாஃ ஶோணீக்ருதாந்தா யதயரமஹஸா ஸோऽயரோ வோ வியத்தாம் ‖ 9 ‖

**नितान्तं** அதிகமான **सोत्थस्नेहात्** பாலாழியிலிருந்து உடன் பிறந்த நட்பினுல் **पशूनां पत्युः** பசுபதியாகிய பரமசிவ

னுடைய **गल-गत-गरलं** கழுத்திலிருக்கும் காலகூட விஷத்தை **द्रष्टुं** பார்ப்பதற்கு **इच्छन्** விரும்பிக்கொண்டு **निभृतं** தனிமையில் **उपान्तस्थितः** அருகில் இருக்கும் **कौस्तुभः इव** கௌஸ்துபரத்தினம்போல் **यः** எந்த உதடு **भासा** ஒளியினால் **भाति** ப்ரகாசிக்கின்றதோ **प्रोद्यत्प्रेम्णा** பொங்கி எழும் உவகையால் **आर्द्रा** நனைந்த **गिरिसुता** பார்வதி **यं** எந்த உதட்டை **पिबति** பானம் செய்கிறாளோ, **यदधरमहसा** எந்த உதட்டின் ஒளியால் **लोकाः** உலகங்கள் யாவும் **शोणीकृतान्ताः** சிவப்பாகச் செய்யப்பட்டவைகளாக இருக்கின்றனவோ **सः** அந்த **अधरः** உதடு **वः** உங்களுக்கு **सातिरेकाः** உலகத்திலிருக்கும் சம்பத்துக்களிலும் மேன்மை தங்கிய **सम्पदः** சம்பத்துக்களை **उच्चैः** அதிகமாக **विधत्तां** செய்யட்டும்.

கருத்து:—பரமசிவனுடைய கழுத்திற்கு சற்று உயரத்தில் இருக்கும் உதடு பாலாழியில் உடன் பிறந்த காலகூட விஷத்தைக் கண்டு இன்புற விரும்பி கௌஸ்துபம்தான் வந்துவிட்டதோ என்று பார்ப்போர்களை நினைக்கச் செய்கிறது. உவகைப் பெருக்கால் மெய் மறந்து பார்வதி தேவி இந்த உதட்டையே பருகுகிறாள். இது தனது பரவிய ஒளியால் உலகனைத்தையும் சிவப்பாகச் செய்கிறது. இத்தகைய பெருமை வாய்ந்த சிவபெருமானுடைய கீழ் உதடு நயக்கு எல்லாவற்றிலும் மேம்பட்ட சம்பத்துக்களை அளிக்க வேண்டும்.

**अत्यर्थं राजते या वदनशशधरादुद्गलच्चारुवाणी-**
**पीयूषाम्भःप्रवाहप्रसरपरिलसत्फेनबिन्द्वावलीव ।**
**देयात्सा दन्तपङ्क्तिश्चिरमिह दनुदायाददौवारिकस्य**
**द्युत्या दीप्तेन्दुकुन्दच्छविरमलतरप्रोन्नताग्रा मुदं वः ॥ १० ॥**

அத்யர்த்தம் ராஜதே யா வதனஶஶதராதுத்கலச்சாருவாணீ-
பீயூஷாம்ப:ப்ரவாஹப்ரஸரபரிலஸத்பேனபிந்த்வாவலீவ ।

தேயாத் ஸா தந்தபங்க்திஶ்சிரமிஹ தநுதாயாததௌவாரிகஸ்ய
த்யுத்யா தீப்தேந்துகுந்தச்சவிரமலதரப்ரோன்னதாக்ரா முதம்
வஃ ॥ 10 ॥

**या** எந்த பல்வரிசை **वदनशशधरात्** முகமாகிய சந்திர னிடமிருந்து **उद्गलत्-चारु-वाणी-पीयूषा-म्भःप्रवाह-प्रसर-परिलसत्--फेनबिन्द्वावली इव** வெளிவரும் அழகிய வார்த்தைகளாகிற அமிருதத்தின் ப்ரவாஹத்தில் விளங்கும் நுரைத்துளி களின் வரிசைபோல் **अत्यर्थं** அதிகமாய் **राजते** ப்ரகாசிக் கின்றதோ **द्युत्या** ஒளியால் **दीप्तेन्दु-कुन्द-च्छविः** ப்ரகாசிக்கும் சந்திரன், குந்தமலர் இவைகளின் காந்தியை உடையதும் **अमलतर-प्रोन्नता ग्रा** சற்றும் அழுக்கில்லாமல், கூரிய நுனியை உடையதுமாகிய **दनु-दायाद-दौवारिकस्य** தனுவின் வம்சத்தில் பிறந்த பாணாசுரனுடைய வாயிற் காப்பான் ஆகிய பரமசிவ னுடைய **सा** பக்தர்களின் உள்ளத்தின் இருளை அகற்றுவ தால் புகழ்பெற்ற **दन्तपंक्तिः** பற்களின் வரிசை **इह** இவ்வுல கிலேயே **चिरं** வெகுகாலம் அழிவற்ற **मुद** சந்தோஷத்தை **वः** உங்களுக்கு **देयात्** கொடுக்கவேண்டும்.

கருத்து:—எந்தப் பல்வரிசை, முகமென்னும் சந்திரனில் நின்று பெருகும் அழகிய மொழி என்னும் அமிருதப் பெருக்கின் நுரைபோல் தோற்றுகிறதோ; பூர்ண சந்திரன், குந்தமலர் இவைகளுக்கொப்பான சோபை உடையதும், வெளுத்துச் சுத்தமாய்க் கூரிய நுனியுடையதுமான, பாணா சுரன் வாயில்காப்போனும், பக்தர்கள் வேண்டுகோளை நிறைவேற்றுபவருமான பரமசிவனுடைய அப்பல்வரிசை உங்களுக்கு ஆனந்தத்தை கொடுக்கவேண்டும்.

**न्यक्कुर्वन्नुर्वराभृन्निभघनसमयोद्घुष्टमेघौघघोषं**
**स्फूर्जद्वार्ध्युत्थितोरुध्वनितमपि परब्रह्मभूतो गभीरः ।**
**सुव्यक्तोऽव्यक्तमूर्तेः प्रकटितकरणः प्राणनाथस्य सत्याः**
**प्रीत्या वःसंविदध्यात्फलविकलमलं जन्म नाथस्य नादः ॥ ११॥**

ந்யக்குர்வன்னுர்வராப்ரந்நிபகனஸமயோத்குஷ்டமேகௌககோஷம்
ஸ்ஃபூர்ஜத்வார்த்யுத்திதோருத்வனிதமபி பரப்ரஹ்மபூதோ கபீர: |
ஸுவ்யக்தோऽவ்யக்தமூர்தே: ப்ரகடிதகரண: ப்ராணநாதஸ்ய ஸத்யா:
ப்ரீத்யா வ: ஸம்விதத்யாத்பலவிகலமலம் ஜன்மநாதஸ்ய நாத: ‖

**उर्वराभ्र-न्निभ-घन-समयो-द्घुष्ट-मेघौघ-घोषं** மலைபோன்ற மழைகாலத்திய மேகக் கூட்டங்களின் சப்தத்தையும், **स्फूर्जत्-वार्ध्युत्थितोरु-ध्वनितं अपि** கொந்தளிக்கும் ஸமுத்திரத்தின் னின்று கிளம்பிய பெரிய சப்தத்தையும். **न्यक्कुर्वन्** அடக்கிக் கொண்டும் **परब्रह्मभूतः** ஓம்கார ரூபமாய் நாத வடிவத்தோடு விளங்கும் பரப்ரம்மரூபமாயும் **गभीरः** காம்பீர்யம் பொருந்தியதும், **सुव्यक्तः** மிகத் தெளிவானதும், **प्रकटित-करणः** கேட்போரின் வெளி, உள் புலன்களை விளக்குவதும் ஆன, **अव्यक्तमूर्तेः** அவ்யக்தம் என்று கூறப்படும் மூலப்ரக்ருதியை சரீரமாக உடையவரும் **नाथस्य** உலகனைத்திற்கும் நாதனையும், **सत्याः** பதிவ்ரதா சிரோமணியான ஸதிதேவிக்கு **प्राणनाथस्य** ப்ராணநாதனுமாகிய பரமசிவனுடைய **नादः** சப்தமானது **प्रीत्या** அன்பினால் **वः** உங்களுடைய **फल-विकलं** பயனற்ற **जन्म** ஜனமாவை **अलं** போதுமானதாக **संविदध्यात्** செய்ய வேண்டும்.

கருத்து:—மழை காலத்து மேகக் கூட்டங்கள் கர்ஜித்த லையும், சமுத்திரத்தின் அலைகளின் கொந்தளிப்பின் இரைச்சலையும் கீழடக்கிக் கொண்டும், பரப்ரம்ம வடிவமாயும், கம்பீரமாயும், மிகத் தெளிவானதும், கேட்போரின் மனதிற்கு வெளிச்ச மூட்டுவதுமான, ப்ரக்ருதியைத் தனது சரீரமாய் ஏற்றுக்கொண்டவரும், உலகனைத்திற்கும் நாதனையும், ஸதிதேவியின் ப்ராணநாதனுமாகிய பரமசிவனுடைய நாதம் அன்பினால் உங்களுடைய பயனற்ற இந்த ஜன்மத்தை இத்துடன் போதுமானதாகச் செய்யட்டும்.

भासा यस्य त्रिलोकी लसति परिलसत्फेनबिन्दूर्णवान्त-
र्व्यामग्नेवातिगौरस्तुलितसुरसरिद्वारिपूरप्रसारः ।
पीनात्मा दन्तभाभिर्भृशमहहहकारातिभीमः सदेष्टां
पुष्टां तुष्टिं कृषीष्ट स्फुटमिह भवतामट्टहासोऽष्टमूर्तेः ॥ ११ ॥

ஹாஸா யஸ்ய த்ரிலோகீ லஸதி பரிலஸத்ஃபேநபிந்தூர்ணவாந்தர்-
வ்யாமக்நேவாதிகௌரஸ்துலிதஸுரஸரித்வாரிபூரப்ரஸாரঃ |
பீநாத்மா தந்தபாபிர் ப்ருஶமஹஹஹகாராதிபீமঃ ஸதேஷ்டாம்
புஷ்டாம் துஷ்டிம் க்ருஷீஷ்ட ஸ்ஃபுடமிஹ பவதாமட்டஹாஸோ-
ऽஷ்டமூர்தேঃ ॥ 12 ॥

यस्य எந்த அட்டஹாஸத்தினுடைய भासा காந்தியால் त्रिलोकी மூன்று உலகமும் परिलसत्-फेन-बिन्दूर्णवान्तः விளங்கும் நுரைக்கூட்டத்தை உடைய ஸமுத்திரத்திற்குள் व्यामग्ना इव முழுகியதுபோல் लसति பிரகாசிக்கின்றதோ. अतिगौरः மிக வெளுப்பாயும், तुलित-सुर-सरित्-वारि-पूर-प्रसारः ஸமமாக செய்யப்பட்ட தேவ கங்கையின் ப்ரவாஹத்தின் பரவுதலை உடையதும், दन्तभाभिः பற்களின் ஒளிகளால் पीनात्मा வளர்ந்து பெருத்த உருவம் உடையதும், अहहहकारातिभीमः அஹஹஹாகாரத்தினால் மிகப் பயங்கரமாயும் இருக்கின்ற अष्टमूर्तेः பூமி முதலிய எட்டுசரீரமுடைய பரமசிவனுடைய (सः அந்த) अट्टहासः அட்டஹாஸம் इह இங்கேயே भवतां உங்களுக்கு सदा எம்பொழுதும், इष्टां விரும்பியதும் पुष्टां நிறைந்ததும் ஆன तुष्टिं சந்தோஷத்தை भृशम् மிகவும் स्फुटं நன்றாக कृषीष्ट செய்யட்டும்.

கருத்து:—பஞ்ச பூதங்கள், சந்திரன், சூர்யன், ஆத்மா ஆகிய எட்டு உருவம் கொண்ட பரமசிவனுடைய எந்த அட்டஹாஸத்தில் மூவுலகும் நுரை நிறைந்த ஸமுத்திரத்தில் மூழ்கியதுபோல் இருந்துகொண்டு, ஒளியால் தேவ கங்கைக்கு நிகராகத் தன்னைச் செய்துகொள்கிறதோ; பற்களின் ஒளியால் வளர்ந்து அஹஹஹ என்று சப்திப்ப

தால் பயங்கரமாய் இருக்கும் அந்த அட்டகாஸம் நமக்கு விரும்பியதைக் கொடுத்து சந்தோஷத்தைச் செய்யட்டும்.

**सद्योजाताख्यमाप्यं यदु विमलमुदग्वर्ति यद्वामदेवं**
**नाम्ना हेम्ना सदृक्षं जलदनिभमघोराह्वयं दक्षिणं यत् ।**
**यद्बालार्कप्रभं तत्पुरुषनिगदितं पूर्वमीशानसंज्ञं**
**यद्दिव्यं तानि शम्भोर्भवदभिलषितं पञ्च दद्युर्मुखानि ॥ १३ ॥**

ஸத்யோஜாதாக்யமாப்யம் யது விமலமுதக் வர்த்தி யத்வாம-தேவம்
நாம்னா ஹேம்னா ஸத்ருக்ஷம் ஜலதநிபமகோராஹ்வயம் தக்ஷிணம் யத் |
யத்பாலார்க்கப்ரபம் தத்புருஷநிகதிதம் பூர்வமீசானஸம்ஜ்ஞம்
யத்திவ்யம் தானி சம்போர்பவதபிலஷிதம் பஞ்ச தத்யுர்முகானி

**यत् उ** பரமசிவனுடைய எந்த முகம், **विमलं** அழுக்கற்றதும் **आप्यं** மேற்கு நோக்கியதும் **सद्योजाताख्यं** ஸத்யோஜாதம் என்று பெயருள்ளதாயும் இருக்கிறதோ, **यत्** யாதொரு முகம் **उदग्वर्ति** வடக்கு நோக்கி, **नाम्ना** பெயரால் **वामदेवं** வாமதேவம் என்றும் **हेम्ना** தங்கத்தோடு **सदृक्षं** ஸமமாயும் இருக்கிறதோ, **यत्** யாதொரு முகம் **जलदनिभं** மேகத்திற்கு நிகரானதும் **अघोराह्वयं** அகோரம் என்று பெயரை உடையதும் **दक्षिणं** தெற்கு நோக்கியதாகவும் இருக்கின்றதோ, **यत्** எந்த முகம் **बालार्क-प्रभं** இளம் கதிரவனுடைய காந்தியை உடையதாகவும் **तत्पुरुष-निगदितं** தத்புருஷன் என்ற பெயரால் குறிக்கப்பட்டதும், **पूर्वं** கிழக்கைநோக்கியதுமாக இருக்கிறதோ **यत्** எந்த வதனம் **दिव्यं** தேவ லோகத்தை நோக்கி இருந்துகொண்டு **ईशानसंज्ञं** ஈசானன் என்று பெயர் பூண்டதாக இருக்கிறதோ **शम्भोः** பரமசிவனுடைய **तानि** அந்த **पञ्च** ஐந்து **मुखानि** முகங்கள் **भवदभिलषितं** உங்களுடைய விருப்பத்தை **दद्युः** கொடுக்கட்டும்.

கருத்து.—பரமசிவனுக்குப் ஸத்யோஜாதம், வாம தேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் என்ற ஐந்து முகங்கள் முறையே மேற்கு, வடக்கு, தெற்கு, கிழக்கு, மேல் என்று ஐந்து திக்குகளைப் பார்த்து இருக்கின்றன. அதில் ஸத்யோஜாதம் வெளுப்பாயும், வாம தேவம் தங்க நிறமாயும், அகோரம் மேகத்திற்கு நிகராயும், தத்புருஷம் இளம் கதிரவன் போன்றதாயும், ஈசானம் நெருப்பு போன்றதாயும் இருப்பதாக புராணங்கள் கூறுகின்றன. பரமசிவனுடைய அந்த முகங்கள் உங்களுடைய விருப் பத்தை பூர்த்திசெய்யட்டும்.

**आत्मप्रेम्णा भवान्या स्वयमिव रचिताः सादरं सांवनन्या**
**मष्या तिस्रः सुनीलाञ्जननिभगररेखाः समाभान्ति यस्याम् ।**
**आकल्पानल्पभासा भृशरुचिरतरा कम्बुकल्पाम्बिकायाः**
**पत्युः सात्यन्तमन्तर्विलसतु सततं मन्थरा कन्धरा वः ॥ १४ ॥**

ஆத்மப்ரேம்ணா ஹவான்யா ஸ்வயமிவ ரசிதாஃ ஸாதரம் ஸாம்வ-
னன்யா
மஷ்யா திஸ்ரஃ ஸுநீலாஞ்ஜனநிபகரரேகாஃ ஸமாஹாந்தி யஸ்யாம்
ஆகல்பானல்பஹாஸா ப்ருசருசிரதரா கம்புகல்பாம்பிகாயாஃ
பத்யுஃ ஸாத்யந்தமந்தர்விலஸது ஸததம் மந்தரா கந்தரா வஃ ‖ 14 ‖

**भवान्या** பார்வதியினால் **आत्मप्रेम्णा** தன்னிடத்தில் உள்ள ப்ரியத்தினால் (சுயநலத்தை விரும்பியதால்) **सादरं** ஆதர வோடு **सांवनन्या** மயக்கும் திறனுடைய **मष्या** மையினால் **स्वयं** தானாக **रचिता इव** செய்யப்பட்டவைபோல் **तिस्रः** மூன்று **सुनीलाञ्जन-निभ-गररेखाः** மிகக் கறுப்பான அஞ்ஜனத்திற்கு நிகரான கழுத்துக்கோடுகள் **यस्यां** எந்தக் கழுத்தில் **समाभान्ति** விளங்குகின்றனவோ **आकल्पा-नल्प-भासा** அலங்காரங்களின் அதிகமான காந்தியால் **भृश-रुचिरतरा** மிகவும் அழகானதும் **कम्बुकल्पा** சங்குபோன்றதும் **मन्थरा** அழகால் நிறைந்தது

மான **अम्बिकायाः पत्युः** பார்வதி தேவியின் பர்த்தாவாகிய சிவனுடைய **सा** அந்த **कन्धरा** கழுத்து **सततं** எப்பொழுதும் **वः** உங்களுடைய **अन्तः** உள்ளத்தில் **अत्यन्तं** மிகவும் **विलसतु** துலங்கட்டும்.

கருத்து:—தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து பாற்கடலைக் கடைந்தபொழுது காலகூடம் என்னும்விஷம்வெளிக்கிளம்பி உலகையே அழிக்கத் தொடங்கியது. அப்பொழுது சிவபெருமான், விஷ்ணுமுதலிய தேவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி அதை உட்கொள்ளத் தொடங்கினர். பார்வதிதேவி தன் பர்த்தாவிற்கு ஏதாகிலும் திங்கு நேரிட்டு விடுமோ என்று அஞ்சி பரமசிவன்கழுத்தில் ஸாம்வனனீ என்ற கறுப்புமையால் செய்த கோடுகளோ என்று சந்தேகிக்கும்படி சிவன் கழுத்தில் மூன்று ரேகைகள் துலங்குகின்றன. அணிந்த ஆயிரக்கணக்கான ஆபரணங்களின் ஒளியால் மிக்க அழகுவாய்ந்ததும், சங்குபோல் துலங்குவதும் எழில் நிரம்பியதுமான பார்வதி நாதனுகிய சிவபெருமானின் அந்தக் கழுத்து உங்கள் உள்ளத்தில் ப்ரகாசிக்க வேண்டும்.

**वक्त्रेन्दोर्दन्तलक्ष्याश्चिरमधरमहाकौस्तुभस्याप्युपान्ते**
**सोत्थानां प्रार्थयन्त्यः स्थितिमचलभुवे वारयन्त्यै निवेशम् ।**
**प्रायुङ्क्तेवाशिषो यः प्रतिपदममृतत्वे स्थितः कालशत्रोः**
**कालं कुर्वन् गलं वो हृदयमलमयं क्षालयेत्कालकूटः ॥ १५ ॥**

வக்த்ரேந்தோர்தந்தலக்ஷ்யாஸ்சிரமதரமஹாகௌஸ்துபஸ்யாப்யு-
பாந்தே
ஸோத்தானாம் ப்ரார்த்தயந்த்ய: ஸ்திதிமசலபுவே வாரயந்த்யை
நிவேஶம் |
ப்ராயுங்க்தேவாஶிஷோய:ப்ரதிபதமம்ருதத்வேஸ்திதஃகாலஶத்ரோ:
காலம் குர்வன் கலம் வோ ஹ்ருதயமலமயம் க்ஷாலயேத் காலகூட:

**सोत्थानां** உடன்பிறந்த **वक्त्रेन्दोः** முக சந்திரனுக்கும் **दन्त-लक्ष्म्याः** பற்களின் ஒளியாகிய லக்ஷ்மிக்கும், **अधर-महा-**

**कौस्तुभस्यापि** கிழுதடு ஆகிற பெரிய கௌஸ்துப மணிக்கும் **उपान्ते** அருகில் **स्थितिं** இருத்தலை **चिरं** வெகுகாலம் **प्रार्थयन्** விரும்பிக்கொண்டு, **निवेशं** தனக்கு இருப்பிடத்தை **वारयन्त्यै** தடுக்கின்ற **अचल-भुवे** மலையின் பெண்ணுகிய பார்வதிக்கு **यः** எந்த காலகூடம் **प्रतिपदं** அடிக்கடி **अमृतत्वे** அமிருத நிலையில் **स्थितः** இருந்துகொண்டு **आशिषः** ஆசிர்வாதத்தை **प्रायुङ्क्तेव** ப்ரயோகம் செய்ததுபோலும்; **कालशत्रोः** யமனை வென்ற பரமசிவனுடைய **गलं** கழுத்தை **कालं** கறுப்பாக **कुर्वन्** செய்துகொண்டும் இருக்கிறதோ **अयं** இந்த **कालकूटः** காலகூடம் என்னும் விஷம் **वः** உங்களுடைய **हृदयमलं** உள்ளத்தின் அழுக்கை **क्षालयेत्** அலம்பி அகற்றட்டும்.

கருத்து.—பகவான் காலகூடத்தை உட்கொள்ளும்பொழுது பர்த்தாவிற்கு கெடுதி நேர்ந்துவிடுமே என்று அஞ்சி பார்வதி தேவி காலகூடத்திற்கு சிவன் உடம்பில் இடமளிக்காமல் தடுத்துக்கொண் டிருந்தாள். ஆனால் காலகூடம் தன்னுடன் பிறந்த பரமசிவன் முகசந்திரனோடும், பற்களின் ஒளியாகிற லக்ஷ்மியோடும், இதழ் என்னும் கௌஸ்துபத்தோடும் சேர்ந்து வாழ விரும்பி தான் அமிருதத்திற்கு ஒப்பானநிலையை ஏற்றுக்கொண்டது. (அதாவது அமிர்தம் அழிவற்றதாக்குகின்றது எல்லோரையும்) பார்வதிக்கு நித்ய ஸௌமாங்கல்யத்தையும் ஆசிர்வதித்தது. பரமசிவன் கழுத்தை கறுப்பாகச்செய்த அந்த காலகூடம் உங்களுடைய உள்ளத்தின் அழுக்கை அகற்றவேண்டும்.

प्रौढप्रेमाकुलाया दृढतरपरिरम्भेषु पर्वेन्दुमुख्याः
पार्वत्याश्चारुचामीकरवलयपदैरङ्कितं कान्तिशालि ।
रङ्गन्नागाङ्गदाढ्यं सततमविहितं कर्म निर्मूलयेत् तत्
दोर्मूलं निर्मलं यद्धृदि दुरितमपास्यार्जितं धूर्जटेर्वः ॥ १६ ॥

ப்ரௌடப்ரேமாகுலாயா த்ருடதரபரிரம்பேஷு பர்வேந்து-
முக்யா:
பார்வத்யாஶ்சாருசாமீகரவலயபதைரங்கிதம் காந்திஶாலி |
ரங்கந்நாகாங்கதாட்யம் ஸததமவிஹிதம் கர்ம நிர்மூலயேத் தத்
தோர்மூலம் நிர்மலம் யத் ஹ்ருதி துரிதமபாஸ்யார்ஜிதம் தூர்ஜ-
டேர்வ: ‖ 16 ‖

**प्रौढ-प्रेमा-कुलायाः** அதிகமான அன்பு நிறைந்தவளான **पर्वेन्दु-मुख्याः** பூர்ணிமா சந்திரன்போன்ற முகத்தை உடைய **पार्वत्याः** பார்வதியினுடைய **दृढतर-परिरम्भेषु** இறுகத்தழுவும் சமயத்தில் **चारु-चामीकर-वलय-पदैः** அழகிய தங்கவளை களின் அடையாளங்களால் **अङ्कितं** அடையாளம் செய்யப் பட்டதும், **कान्ति-शालि** காந்தியால் துலங்குவதும் **रङ्गन्ना-गाङ्गदाढ्यं** ஒளிருகின்ற நாகங்களால் செய்த தோள்வளைகள் நிரம்பியதும் ஆன **धूर्जटेः** பரமசிவனுடைய **निर्मलं** பரிசுத்த மான **दोर्मूलं** கைகளின் அடிப்பக்கம் **वः** உங்களுடைய **हृदि** உள்ளத்தில் **आर्जितं** வெகு நாட்களாக சேர்த்துவைத்த **यत्** எந்த **दुरितं** பாபமிருக்கின்றதோ **तत्** அதை **अपास्य** அகற்றி **अविहितं** நிஷித்தமான **कर्म** கர்மாவை (நிஷித்தகர்மாவைச் செய்ததால் உண்டான பாபத்தை) **सततं** எப்பொழுதும் **निर्मूलयेत्** அழிக்கவேண்டும்.

கருத்து.—உவகைப் பெருக்கால் பொங்கி எழும் ஆர் வத்தோடு பார்வதிதேவி இறுகத் தழுவும் தருணத்தில், தேவி கையில் அணிந்த தங்கவளைகள் அழுந்தி அடையா ளம் செய்ததும், காந்தி நிரம்பியதும், ஒளிரும் நாகங்க ளால் செய்த தோள்வளைகள் நிரம்பியதும், பரிசுத்தமானது மான பரமசிவன் கைகளின் அடிப்பக்கம், உங்கள் மனதி லிருக்கும் காமக்ரோதாதிகளை விலக்கி நிஷித்தகர்மாவை அனுஷ்டித்ததினுல் உண்டாகிய பாபத்தையும் வேரறுக்க வேண்டும்.

कण्ठाश्लेषार्थमाप्ता दिव इव कमितुः स्वर्गसिन्धोः प्रवाहाः
क्रान्त्यै संसारसिन्धोः स्फटिकमणिमहासंक्रमाकारदीर्घाः ।
तिर्यग्विष्कंभभूतास्त्रिभुवनवसतेः भिन्नदैत्येभदेहाः
वाहा वस्ता हरस्य द्रुतमिह निवहानंहसां संहरन्तु ॥ १७ ॥

*கண்டாச்லேஷார்த்தமாப்தா திவ இவ கமிதுஃ ஸ்வர்கஸிந்த்யோஃ ப்ரவாஹாஃ*
*க்ராந்த்யை ஸம்ஸாரஸிந்த்யோஃ ஸ்படிகமணிமஹாஸம்க்ரமாகார-தீர்காஃ ।*
*திர்யக்விஷ்கம்பபூதாஸ்த்ரிபுவனவஸதேர் பின்னதைத்யேப-தேஹாஃ*
*வாஹா வஸ்தா ஹரஸ்ய த்ருதமிஹ நிவஹாநம்ஹஸாம் ஸம்ஹரந்து*

**कमितुः** ஆசைநாயகனுகிய **दिवः** ஸ்வர்கலோகத்தினுடைய **कण्ठाश्लेषार्थं** கழுத்தைத் தழுவிக்கொள்வதற்காக **आप्ताः** பரப்பப்பட்ட **स्वर्गसिन्धोः**, தேவகங்கையினுடைய **प्रवाहा इव** ப்ரவாஹங்கள் போன்றவைகளும் **संसारसिन्धोः** ஸம்ஸாரமென்னும் மஹா ஸமுத்திரத்தினுடைய **क्रान्त्यै** தாண்டுதலுக்காகக் கட்டிய **स्फटिक-मणि-महा-संक्रमाकार-दीर्घाः** ஸ்படிகத்தால்கட்டிய பெரிய பாலம் போல் நீளமாயும் **त्रिभुवन-वसतेः** மூன்று உலகமாகிய வீட்டிற்கு **तिर्यग्विष्कंभ-भूताः** குறுக்கே போடப்பட்ட விட்டங்களாக இருப்பவைகளும் **भिन्न-दैत्येभदेहाः** யானைவடிவம் கொண்ட அந்தகாசுரனுடைய தேஹத்தை பிளந்தவைகளும் ஆன **हरस्य** பணிந்தோர் பிணியை அகற்றும் பரமசிவனுடைய **ताः** கேட்போர் விருப்பங்களை அள்ளிக்கொடுப்பதால் புகழ்பெற்ற அந்த **वाहाः** கைகள் **इह** இப்பொழுது **द्रुतं** சீக்கிரமாக **वः** உங்களுடைய **अंहसां** பாபங்களுடைய **निवहान्** கூட்டங்களை **संहरन्तु** ஒழிக்கட்டும்.

கருத்து.—பரமசிவன் தாண்டவம் செய்யும்பொழுது ஆகாயத்தில் விரித்த நீண்ட நான்கு கைகள், தேவகங்கை

தனது ஆசை நாயகனாகிய தேவலோகத்தைக் கழுத்தில் தழுவிக் கொள்வதற்கு ஆர்வத்தோடு நீட்டிய ப்ரவாஹங்களாகிற கைகள் போலவும், ஸம்ஸாரம் என்ற கடக்க முடியாத ஸமுத்திரத்தைக் கடக்க ஸ்படிகத்தால் கட்டிய பாலம்போல் நீளமாகவும், மூன்று உலகமாகும் வீட்டிற்குக் குறுக்கே இடப்பட்ட விட்டங்கள் போலவும் துலங்குகின்றன. அந்தகாஸுரனை வென்ற பரமசிவனுடைய அந்த நான்கு கைகளும் உங்களுடைய தீவினைகளை அழித்தருளட்டும்.

குறிப்பு.—தேவகங்கை ஆகாயத்தில் பெருகுவதால் ஆகாயத்தை கங்கையின் நாயகனாக் கவிகள் வர்ணிப்பது வழக்கம்.

वक्षो दक्षद्विषोऽलं स्मरभरविनमद्दक्षजाक्षीणवक्षो-
जान्तर्निक्षिप्तशुम्भन्मलयजमिलितोद्भासिभस्मोक्षितं यत् ।
क्षिप्रं तद्रूक्षचक्षुःश्रुतिगणफणरत्नौघभाभीक्ष्णशोभं
युष्माकं शश्वदेनः स्फटिकमणिशिलामण्डलाभं क्षिणोतु ॥ १८ ॥

வக்ஷோ தக்ஷத்விஷோऽலம் ஸ்மரபரவினமத் தக்ஷஜாக்ஷீணவக்ஷோ-
ஜாந்தர்நிக்ஷிப்தசும்பன்மலயஜமிலிதோத்பாஸிபஸ்மோக்ஷிதம் யத் ।
க்ஷிப்ரம் தத்ரூக்ஷசக்ஷுஃச்ருதிகணபணரத்னௌகபாபீக்ஷ்ண சோபம்
யுஷ்மாகம் சச்வதேநஃ ஸ்படிகமணிசிலாமண்டலாபம் க்ஷிணோது ॥ 18 ॥

**स्मर-भर-विनमत्-दक्षजा अक्षीण-वक्षोजान्तः-निक्षिप्त-शुंभन्-मलयज-मिलितो-द्भासि** உவகைப் பெருக்கால் வணங்கிய பார்வதி தேவியின் பெருத்த கொங்கைகளுக் கிடையே பூசப்பட்டு துலங்கும் சந்தனம் ஒட்டிக் கொண்டதால் ஒளி வீசுகின்றதும் **भस्मोक्षितं** திருநீறு பூசப்பட்டதும் ஆன **दक्ष-द्विषः** தக்ஷன் பகைவனான பரமசிவனுடைய **यत्** எந்த **वक्षः** மார்பு **रूक्ष-चक्षुः-श्रुतिगण-फण-रत्नौघभा-अभीक्ष्ण-शोभं** க்ரூரமான ஆபரணங்களாகிற பாம்புக் கூட்டங்களின் படங்

களிலிருக்கும் இரத்தினக் கூட்டங்களால் இரட்டிப்பான காந்தியுடையதும் **शश्वत्** எப்பொழுதும் **स्फटिकमणिशिला-मण्डलाभं** ஸ்படிகக் கற்களின் கூட்டத்தினுடைய காந்தியுடையதும் ஆன **तत्** அந்த மார்பு **युष्माकं** உங்களுடைய **एनः** பாபத்தை **क्षिप्रं** சீக்கிரம் **अलं** போதுமளவு **क्षिणोतु** அழிக்கட்டும்.

கருத்து.—உவகைப் பெருக்கோடு சற்று வணங்கிய பார்வதி அன்னையின் சந்தன மணிந்த கொங்கைகளைத் தழுவியதால் ஒட்டிக்கொண்ட சந்தனத்தை உடையதும், திருநீறு பூசியதும், அணியாயிருக்கும் பாம்புகளின் படங்களில் ஒளிரும் இரத்தினங்களின் கிரணங்களால் இரண்டு மடங்கு சோபிப்பதும், ஸ்படிகக் கற்களின் குவியல் போன்றதுமான சிவபெருமானுடைய மார்பு உங்களுடைய பாபத்தை அழித்து அருளட்டும்.

**मुक्तामुक्ते विचित्राकुलवलिलहरीजालशालिन्यवाञ्च-**
**न्नाभ्यावर्ते विलोलद्भुजगवरयुते कालशत्रोर्विशाले ।**
**युष्मच्चित्तत्रिधामा प्रतिनवरुचिरे मन्दिरे कान्तिलक्ष्म्याः**
**शेतां शीतांशुगौरे चिरतरमुदरक्षीरसिन्धौ सलीलम् ॥ १९ ॥**

முக்தாமுக்தே விசித்ராகுலவலிலஹரீ ஜாலஶாலின்யவாஞ்சன்-
நாப்யாவர்தே விலோலத்புஜகவரயுதே காலஶத்ரோர்
விஶாலே |
யுஷ்மச்சித்தத்ரிதாமா ப்ரதிநவருசிரே மந்திரே காந்திலக்ஷ்ம்யா:
ஶேதாம் ஶீதாம்ஶுகௌரே சிரதரமுதரக்ஷீரஸிந்தௌ ஸலீலம் ||

**मुक्तामुक्ते** முத்துக்களை உடையதும் **विचित्राकुल-वलि-लहरी-जाल-शालिनि** பற்பல விதமாய் ஆச்சரியம் நிறைந்த மடிப்புக்களின் தொடர்களால் ப்ரகாசிப்பதும் **अवाञ्चन्नाभ्यावर्ते** கீழ்நோக்கி ஆழமாய்ச் செல்லும் நாபியாகிற சுழலை உடையதும் **विलोलत्-भुजगवरयुते** இங்கு மங்குமாய்ச் சுற்றும் சிறந்த

பாம்புகளோடு கூடியதும் **विशाले** விஸ்தாரமானதும் **प्रतिनवरुचिरे** ஒவ்வொரு க்ஷணத்திலும் புதிது புதிதான எழில்கொண்டதும், **कान्तिलक्ष्म्याः** காந்தி என்னும் மஹாலக்ஷ்மிக்கு **मन्दिरे** இருப்பிடமாயும் **शीतांशुगौरे** சந்திரன் போல் வெளுத்ததும் ஆன **कालशत्रोः** யமனை உதைத்த பரமசிவனுடைய **उदर-क्षीरसिन्धौ** வயிறு என்னும் பாற்கடலில் **युष्मच्चित्त-त्रिधामा** உங்கள் மனது என்னும் மஹாவிஷ்ணு **चिरतरं** வெகுநாள் **सलीलं** உத்ஸாஹத்தோடு கூடியதாக **शेतां** படுத்திருக்கட்டும்.

கருத்து.—இந்தச்லோகத்தில் பரமாசார்யர் தான் பார்த்துச் சொல்லும் ஜனங்களுடைய மனதை மஹாவிஷ்ணுவாயும், பரமசிவன் உதரத்தை பாற்கடலாகவும் வர்ணித்துள்ளார். அதனால் சிவபெருமான் உதரத்திற்குக் கூறும் விசேஷணங்கள் பாற்கடலோடும் பொருத்தப் பட்டிருக்கின்றன. ஆகவே அதற்கேற்ற கருத்தை நாம் இங்கு காணவேண்டும்.

பாலாழி, முத்துச் சிப்பிகள் நிறைந்தும், திரை திரையாக தொடர்ந்துவரும் அலைகளோடு கூடியும், ஆழமான சுழல்கள் சூழ்ந்தும், பல பாம்பு முதலிய ஜல ஜந்துக்கள் நிரம்பியும், லக்ஷ்மி தேவிக்கு இருப்பிடமாயும், சந்திரன் உள்ளடங்கி இருப்பதால் அவனுடைய ஒளியால் அதிகம் வெளுத்தும், புதிது புதிதான காந்தியை உடையதாகவுமிருக்கிறது. பரமசிவன் மார்பும் முத்துமாலை அணிந்தும், அழகிய அலைகள் போன்ற மூன்று மடிப்புகள் அமைந்தும், சுழல் போல் ஆழமான நாபியோடு கூடியும், அணியாய் அணிந்த நாகங்கள் நிரம்பியும், ஒளிக்கோர் இருப்பிடமாகவும் சந்திரன்போல் வெண்மையாயும், கணத்திற்கோர் அழகுவாய்ந்ததாயும் சிறப்புற்று விளங்குகிறது. இவ்விதம் பாற்கடல் போன்ற சிவபெருமான் வயிற்றில் உங்கள் மனது மஹா

விஷ்ணுவிற்கு நிகராக இன்புற்று சயனம் செய்து கொண்டிருக்கட்டும்.

குறிப்பு :—மஹாவிஷ்ணு பாற்கடலில் பள்ளி கொள்ளுவதில் த்ருப்தி கொண்டவர். ஆகவே மனதை விஷ்ணுவாய் குறித்ததால் சிவன் வயிறுகிற பாற்கடலில் அது படுத்துக் கொள்ளட்டும் என்று கூறி இருக்கிறது. மனது எப்பொழுதும் அங்கேயே இன்புற்று நிற்கட்டும் என்பது பொருள்.

वैयाघ्री यत्र कृत्तिः स्फुरति हिमगिरेर्विस्तृतोपत्यकान्तः
सान्द्रावश्यायमिश्रा परित इव वृता नीलजीमूतमाला ।
आबद्धाहीन्द्रकाञ्चीगुणमतिपृथुलं शैलजाक्रीडभूमिः
तद्वो निश्श्रेयसे स्याज्जघनमतिघनं बालशीतांशुमौलेः ॥ २० ॥

வையாக்ரீ யத்ர க்ருத்தி: ஸ்ஃபுரதி ஹிமகிரேர்விஸ்த்ருதோபத்ய-காந்த:
ஸாந்த்ராவஸ்யாயமிஸ்ரா பரித இவ வ்ருதா நீலஜீமூதமாலா |
ஆபத்தாஹீந்த்ரகாஞ்சீகுணமதிப்ருதுலம் ஸைலஜாக்ரீட-பூமி:
தத்வோ நிஸ்ரேயஸே ஸ்யாஜ்ஜகனமதிகனம் பாலஸீதாம்ஸுமௌளே: || 20 ||

यत्र எங்கு वैयाघ्री புலியினுடையதான कृत्तिः தோல் हिमगिरेः ஹிமவானுடைய विस्तृतो-पत्यकान्तः விஸ்தாரமான தாழ்வரைகளில் सान्द्रा-वश्याय-मिश्रा நெருக்கமான பனித்திரையோடு கலந்ததும் परितः நான்கு பக்கத்திலும் वृता சூழ்ந்த नीलजीमूत माला इव நீருண்டு கறுத்த மேகத்துடர்போல் स्फुरति ப்ரகாசிக்கின்றதோ, आवद्धाहीन्द्र-काञ्चीगुणं பாம்பாலான ஒட்டியாணத்தை கட்டிக்கொண்டதும், अतिपृथुलं மிகப்பெருத்ததும், शैलजा-क्रीड-भूमिः மலையரசன் மகளாகிய பார்வதீ தேவியின் ச்ருங்கார கேளிகளுக்கு இருப்பிடமாயும் अतिघनं அதிக கனமுடையதுமான वाल-शीतांशु-मौलेः இளம் சந்திரனைத் தலைக்கு அணியாய் அணிந்த பரமசிவனுடைய तत्

பக்தர்களின் இஷ்டங்களை பூர்த்தி செய்வதால் புகழ்பெற்ற அந்த **जघनं** இடுப்பின் பின்பக்கம் **वः** உங்களுக்கு **निःश्रेयसे** மோக்ஷத்திற்காக **स्यात्** இருக்கட்டும்.

கருத்து.—கறுப்பான புலித்தோல் உடுத்தி இமயமலையின் தாழ்வரையில் படர்ந்த நீருண்ட மேகம்போல் விளங்குகிறதும், பாம்பை ஒட்டியாணமாய் கட்டிக்கொண்டதும், பார்வதி தேவியின் ச்ருங்கார கேளிக்கு இருப்பிடமாயும், பெருத்து கனமாயு மிருக்கின்ற இளம்பிறை சூடியின் ஜகனம் உங்களுக்கு மோக்ஷ சுகத்தைத் தந்து அருளட்டும்.

**पुष्टावष्टम्भभूतौ पृथुतरजघनस्यापि नित्यं त्रिलोक्याः**
**सम्यग्वृत्तौ सुरेन्द्रद्विरदवरकरोदारकान्तिं दधानौ ।**
**सारावूरू पुरारेः प्रसभमरिघटाघस्मरौ भस्मशुभ्रौ**
**भक्तैरत्यार्द्रचित्तैरधिकमवनतौ वाञ्छितं वो विधत्ताम् ॥ २१ ॥**

புஷ்டாவஷ்டம்ஹஹூதௌ ப்ருதுதரஜகனஸ்யாபி நித்யம் த்ரிலோக்யா:
ஸம்யக்வ்ருத்தௌ ஸுரேந்த்ரத்விரதவரகரோதாரகாந்திம் தயானௌ |
ஸாராவூரு புராரே: ப்ரஸஹமரிகடாகஸ்மரௌ ஹஸ்மஶுப்ரௌ
ஹக்தைரத்யார்த்ரசித்தைரதிகமவனதௌ வாஞ்சிதம் வோ விதத்தாம் ‖ 21 ‖

**पृथुतर-जघनस्य** மிகப் பெரிதான ஜகனப்ரதேசத்திற்கும் **त्रिलोक्याः अपि** மூன்று உலகத்திற்கும் **नित्यं** என்றும் **पुष्टावष्टम्भभूतौ** பலம் பொருந்தி பெருத்த தாங்குவதற்கேற்ற ஸ்தம்பங்களாய் இருப்பவைகளும் **सम्यग्वृत्तौ** நன்ருய் உருண்டவைகளும் **सुरेन्द्र-द्विरदवर-करोदार-कान्ति** தேவேந்திரனின் சிறந்த யானையாகிய ஐராவதத்தினுடைய துதிக்கைபோல் சோபையை **दधानौ** தரிக்கின்றவைகளும் **सारौ** பலம்

பொருந்தியவைகளும் **प्रसभं** பலாத்காரமாய் **अरिघटा-घस्मरौ** சத்ருக்களின் கூட்டங்களை விழுங்குகின்றவைகளும் **भस्म-शुभ्रौ** விபூதி பூசி வெளுத்தவைகளும் **अत्यार्द्र-चित्तैः** மிகவும் பக்தி மேலீட்டால் அலிந்த மனதை உடைய **भक्तैः** அடியார்களால் **अधिकं** இடைவிடாமல் எப்பொழுதும் **अवनतौ** வணங்கப்பட்டவைகளும் ஆன **पुरारेः** த்ரிபுரர்களின் சத்ருவாகிய பரமசிவனுடைய **ऊरू** துடைகள் **वः** உங்களுக்கு **वाञ्छितं** விருப்பத்தை **विधत्तां** செய்யட்டும்.

கருத்து.—பெருத்து கனமான ஜகனத்தையும், மூவுலகத்தையும் தாங்கும் ஸ்தம்பங்கள் போல் இருக்கின்றவைகளும், ஐராவதத்தின் துதிக்கைகள் போல் உருண்டு பெருத்து நீண்டவைகளும், பலம் பொருந்திக் கொடிய சத்துருக்களையும் வலுவிலேயே விழுங்கும் திறமை பூண்டவைகளும், விபூதி பூசியதனல் வெளுப்பானவைகளும், பக்தி மேலீட்டால் உருகிக் கரைந்த மனமுடைய பக்தர்களால் இடைவிடாது பணியப்படுவதுமான பரமசிவனுடைய துடைகள் உங்களுக்கு விருப்பத்தைக் கொடுக்கட்டும்.

**आनन्दायेन्दुकान्तोपलरचितसमुद्गायिते ये मुनीनां**
**चित्तादर्शं निधातुं विदधति चरणे ताण्डवाकुञ्चनानि ।**
**काञ्चीभोगीन्द्रमूर्ध्ना प्रतिमुहुरुपधानायमाने क्षणं ते**
**कान्ते स्तामन्तकारेर्द्युतिविजितसुधाभानुनी जानुनी वः ॥ २२**

ஆனந்தாயேந்து-காந்தோபலரசிதஸமுத்காயிதே யே முனீனும்
சித்தாதர்ஶம் நிதாதும் விதததி சரணே தாண்டவாகுஞ்சனாநி |
காஞ்சீபோகீந்த்ரமூர்த்னா ப்ரதிமுஹுருபதானாயமானே க்ஷணம் தே
காந்தேஸ்தாமந்தகாரேர்த்யுதிவிஜிதஸுதாபானுனீ ஜானுனீ வ: ||

**ये** எவைகள் **मुनीनां** மாமுனிவர்களுக்கு **चित्तादर्शं** மனது என்னும் கண்ணுடியை **निधातुं** வைப்பதற்கு **इन्दुकान्तोपल-**

रचित-समुद्गायिते சந்திரகாந்தக் கல்லினால் ஆக்கிய பெட்டிகள் போல் இருக்கின்றவைகளும், चरणे கால் ताण्डवाकुञ्चनानि தாண்டவம் செய்யும்பொழுது ஏற்படவேண்டிய பணிவை विदधति செய்யும்பொழுது काञ्ची-भोगीन्द्र-मूर्ध्नां இடுப்பில் கட்டிய சிறந்த பாம்புகளுடைய தலைகளுக்கு क्षणं சற்று நேரம் प्रतिमुहुः அடிக்கடி उपधानायमाने தலைகணைபோல் இருக்கின்றனவோ अन्तकारेः யமனை வென்ற பரமசிவனுடைய कान्ते கவர்ச்சியுடையவைகளும் द्युति-विजित-सुधा-भानुनी அமிருதத்தையும் சூர்யனையும் ஒளியினால் ஜயித்தவைகளான ते அந்த जानुनी முழங்கால்கள் वः உங்களுக்கு आनन्दाय ஆனந்தத்திற்காக स्तां இருக்கட்டும்.

கருத்து.—பரமசிவன் முழங்கால்கள், மாமுனிவர்கள் தங்களது மனங்களைச் செலுத்தி த்யானம் செய்வதால் அவர்களின் மனதை வைத்துப் பூட்டுவதற்கு சந்திரகாந்தக் கல்லினால் ஆக்கிய அழகிய இரண்டு பேழைகள்போல் இருக்கின்றன. தாண்டவம் ஆடுங்கால் காலை வளைக்கும் தருணத்தில் இடுப்பில் ஒட்டியாணம்போல் கட்டப்பட்ட பாம்புகளுடைய தலைகள் நீட்டிக் கொண்டிருப்பதால் முழங்காலில் படுகின்றன. அதைப் பார்த்தால் இடுப்பில் கட்டிய பாம்புகள் சிறிதுநேரம் முழங்காலை தலையணைபோல் வைத்துக் கொள்ளுகின்றன என்று தோற்றுகிறது. தனது ஒளியால் அமுதத்தையும் சூர்யனையும் ஜயித்த பரமசிவனுடைய அத்தகைய முழங்கால்கள் உங்களுக்கு இன்பமூட்டக்கடவது.

मञ्जीरीभूतभोगिप्रवरगणफणामण्डलान्तर्नितान्त-
 व्यादीर्घानर्घरत्नद्युतिकिसलयिते स्तूयमाने द्युसद्भिः ।
विभ्रत्यौ विभ्रमं वः स्फटिकमणिबृहद्दण्डवद्भासिते ये
 जङ्घे शङ्खेन्दुशुभ्रे भृशमिह भवतां मानसे शूलपाणेः ॥ २३ ॥

மஞ்ஜீரீபூதபோகிப்ரவரகணபணாமண்டலாந்தர்நிதாந்த-
வ்யாதீர்கானர்கரத்னத்யுதிகிஸலயிதே ஸ்தூயமானே த்யுஸத்பிஃ |
பிப்ரத்யௌ விப்ரமம் வஃ ஸ்படிகமணிப்ருஹத்தண்டவத்-
பாஸிதே யே
ஜங்கே ஶங்கேந்துஶுப்ரே ப்ருஶமிஹ பவதாம் மானஸே
ஶூலபாணேஃ ॥ 23 ॥

**मञ्जीरीभूत-भोगि-प्रवर-गण-फणा-मण्डलान्त-र्नितान्त-व्यादीर्घा-नर्घ-रत्नद्युति-किसलयिते** சலங்கைகளாக ஆக்கப்பட்ட சிறந்த ஸர்ப்பக் கூட்டங்களின் படங்களின் உள்ளே இருந்து நீளமாய் வீசும் விலைமதிக்க முடியாத இரத்தினங் களின் ஒளிகளால் துளிர் விடுகின்றவைகள் போலவும் **द्युसद्भिः** தேவர்களால் **स्तूयमाने** புகழப்படுகின்றவைகளும் **विभ्रमं** பற்பல விலாஸங்களை **बिभ्रत्यौ** தரிக்கின்றவைகளும் **स्फटिक-मणि बृहद्दण्डवत् भासिते** ஸ்படிகத்தால் செய்யப்பட்ட பெரிய ஸ்தம்பங்கள்போல் விளங்குகின்றவைகளுமாக **ये** எந்த முழங்கால்கள் சோபிக்கின்றனவோ **शङ्खेन्दुशुभ्रे** சங்கு, சந்திரன் இவகளைப்போல் வெளுத்த (**ते** அந்த) **शूलपाणेः** சூலத்தைக் கையில் ஏந்திய பரமசிவனுடைய **जङ्घे** முன்னங் கால்கள் **वः** உங்களுடைய **इह** இந்த **मानसे** மனதில் **भृशं** இடைவிடாமல் அடிக்கடி **भवताम्** இருக்கட்டும்.

கருத்து.—தாண்டவம் செய்யும்பொழுது சலங்கைக ளாய் கட்டிக்கொண்ட பாம்புகளுடைய திறந்த படங்களின் நடுவில் துலங்கும் இரத்தினங்களின் நீண்ட ஒளியால் தளிர் விடுகிறவைகள் போலவும், வானோர்கள் போற்றுவதும், பற்பல விலாஸங்களை உடையனவும், ஸ்படிகக் கல்லால் ஆன பெரிய தண்டங்கள்போல், (தூண்கள்போல்) விளங்குகிறவைகளும், சங்கு சந்திரன்போல் வெளுத்தவை களுமான சூலமேந்திய சிவபெருமானுடைய முன்னங் கால்கள் உங்கள் மனதில் மிகவும் ஒளியோடு ப்ரகாசிக் கட்டும்.

अस्तोकस्तोमशस्त्रैरपचितिममलां भूरिभावोपहारैः
कुर्वद्भिः सर्वदोच्चैः सततमभिवृतौ ब्रह्मविद्देवलाद्यैः ।
सम्यक् संपूज्यमानाविह हृदि सरसीवानिशं युष्मदीये
शर्वस्य क्रीडतां तौ प्रपदवरबृहत्कच्छपावच्छभासौ ॥ २४ ॥

அஸ்தோகஸ்தோமஶஸ்த்ரைரபசிதிமமலாம் பூரிபாவோபஹாரை:
குர்வத்பி: ஸர்வதோச்சை: ஸததமபிவ்ருதௌ ப்ரஹ்மவித்தேவ-
லாத்யை: |
ஸம்யக் ஸம்பூஜ்யமானாவிஹ ஹ்ருதி ஸரஸீவாநிஶம் யுஷ்மதீயே
ஶர்வஸ்ய க்ரீடதாம் தௌ ப்ரபதவரப்ருஹத்கச்சபாவச்சபா-
ஸௌ ‖ 24 ‖

**अस्तोक-स्तोम-शस्त्रैः** அதிகமான ஸ்தோமம், சஸ்திரம் முதலிய ஸ்தோத்திரங்களாலும் **भूरि-भावो-पहारैः** அதிகமான மனவுணர்ச்சிகளாகிற காணிக்கைகளாலும் **सर्वदा** எப்பொழுதும் **उच्चैः** அதிகமாக **अमलां** பரிசுத்தமான **अपचितिं** பூஜையை **कुर्वद्भिः** செய்கின்ற **ब्रह्मविद्देवलाद्यैः** ப்ரம்ம ஞானிகளான தேவலர் முதலியவர்களால் **सततं** எப்பொழுதும் **अभिवृतौ** சூழப்பட்டனவும் **सम्यक्** நன்றாக **संपूज्यमाने** எல்லோராலும் பூஜை செய்யப்படுகின்றவைகளும் **अच्छभासौ** பரிசுத்தமான காந்தியை யுடையவைகளுமான **शर्वस्य** பரம சிவனுடைய **तौ** அந்த **प्रपदवर-बृहत्-कच्छपौ** பாதங்களின்மேல் பக்கங்களாகிற ஆமைகள் **सरसि इव** குளத்தில்போல் **इह** இங்கு **युष्मदीये** உங்களுடையதான **हृदि** உள்ளத்தில் **अनिशम्** எப்பொழுதும் **क्रीडतां** விளையாடட்டும்.

கருத்து.—ஸ்தோமம், சஸ்திரம் என்பது யாகங்களில் கையாளப்படும் இரண்டுவிதமான மந்திர பாகங்கள். அவைகளை உச்சரித்து மனோ பாவங்களை காணிக்கையாய் அர்ப்பணம் செய்து எப்பொழுதும் பூஜையை செய்கின்ற ப்ரம்ம ஞானிகளாகிய தேவலர் முதலிய மாமுனிவர்கள் சூழ்ந்திருப்பதும், உலகத்திலுள்ள எல்லா பெரியோர்களும் நன்றாய்

வழிப்படுவதுமாகிய தூய ஒளியுடைய பரமசிவனுடைய ஆமைகள் போன்ற பாதத்தின் மேல்பாகங்கள் உங்களுடைய குளம் போன்ற மனதில் விளையாடட்டும்.

**याः स्वस्यैकांशपातादतिबहलगलद्रक्तवक्त्रं प्रणुन्न-**
**प्राणं प्राक्रोशयन्प्राङ्निजमचलवरं चालयन्तं दशास्यम् ।**
**पादाङ्गुल्यो दिशन्तु द्रुतमयुगदृशः कल्मषप्लोषकल्याः**
**कल्याणं फुल्लमाल्यप्रकरविलसिता वः प्रणद्धाहिवल्ल्यः ॥ २५ ॥**

யா꞉ ஸ்வஸ்யைகாம்ஶபாதாததிபஹலகலத்ரக்தவக்த்ரம் ப்ரணுன்ன
ப்ராணம் ப்ராக்ரோஶயன் ப்ராங்நிஜமசலவரம் சாலயந்தம் தஶாஸ்யம் |
பாதாங்குல்யோ திஶந்து த்ருதமயுகத்ருஶ꞉கல்மஷப்லோஷகல்யா꞉
கல்யாணம் ஃபுல்லமால்யப்ரகரவிலஸிதா வ꞉ ப்ரணத்தாஹிவல்ய꞉

**याः** எந்தக் கால் விரல்கள் **स्वस्य** தங்களுடைய **एकांशपातात्** ஓர் பாகத்தின் வீழ்ச்சியால் **प्राक्** முன் காலத்தில் **निजं** தன்னுடையதான **अचलवरं** சிறந்த மலையாகிய கைலாஸத்தை **चालयन्तं** அசைக்கின்றவனும் **अतिबहल-गलत्-रक्तवक्त्रं** மிகவும் அதிகமாய்ப் பெருகும் ரக்ததத்தை உடைய வாயை உடையவனும் **प्रणुन्न-प्राणं** நடுங்கும் ப்ராணனை உடையவனும் ஆன **दशास्यं** பத்து முகங்களை உடைய இராவணனை **प्राक्रोशयन्** கதறுமாறு செய்தனவோ ; **प्रणद्धाहिवल्ल्यः** பாம்புகளால் சுற்றப்பட்டவைகளும் **कल्मषप्लोषकल्याः** பாபங்களை எரிப்பதில் திறன்வாய்ந்தவைகளும், **फुल्ल-माल्य-प्रकर-विलसिताः** மலர்ந்த மல்லி மாலைக் கூட்டங்களின் விலாஸங்களை உடையவைகளுமான **ताः** அந்த **अयुगदृशः** ஒற்றை எண்ணிக்கையுடைய கண்களைப் படைத்த முக்கண்ணனுடைய **पादाङ्गुल्यः** கால் விரல்கள் **वः** உங்களுக்கு **द्रुतं** சீக்கிரமாக **कल्याणं** மங்களத்தை **दिशन्तु** கொடுக்கட்டும்.

கருத்து.—முன்னொரு காலத்தில் இராவணன் கைலயங் கிரி தனது தேருக்கு வழி மறித்து நிற்கவே அதைத் தூக்கி வேறு பக்கம் எறிய விருப்பம் கொண்டு மலையின் அடியில் தோளைக் கொடுத்துத் தூக்கினான். அக்காலத்தில் மலை அசைவதைக் கண்டு சிவபெருமான் கவனித்துப் பார்த்தபொழுது இராவணனே அதற்கு நிமித்தம் என்று அறிந்தார். உடனே தனது கால் கட்டை விரலால் மலையை அழுத்தவும் இராவணன் அதனடியில் சிக்குண்டு நசுங்கி பகவானைக் கதறி ஸ்தோத்திரித்தான் என்பது புராணம். தனது மலையை அசைக்கின்றவனும், நசுங்கும் ப்ராணனை உடையவனும், வாயிலிருந்து கக்கிய ரத்தத்தை உடையவனும் ஆன இராவணன் எந்த விரல்களின் ஒரு பாகத்தை அழுத்தமாய் ஊன்றியதால் கதறினானோ, எந்த விரல்கள் பாம்புகள் சுற்றியவையும், பாபங்களை எரித்து அருள்புரிவனவும், மலர்ந்த மல்லி மாலைகள் போலும் இருக்கிறதுகளோ, முக்கண்ணனுடைய அந்த விரல்கள் தாமதமின்றி உங்களுக்கு மங்களங்களைச் செய்யட்டும்.

प्रह्वप्राचीनबर्हिःप्रमुखसुरवरप्रस्फुरन्मौलिसक्त-
ज्यायोरत्नोत्करोत्थैरविरतममला भूरि नीराजिता या ।
प्रोदग्राग्रा प्रदेयात्ततिरिव रुचिरा तारकाणां नितान्तं
नीलग्रीवस्य पादाम्बुरुहविलसिता सा नखाली सुखं वः ॥ २६ ॥

ப்ரஹ்வப்ராசினபர்ஹிஃப்ரமுகஸுரவரப்ரஸ்ஃபுரன்மௌலிஸக்த
ஜ்யாயோரத்னோத்கரோத்தைரவிரதமமலா பூரி நீராஜிதா யா |
ப்ரோதக்ராக்ரா ப்ரதேயாத்ததிரிவ ருசிரா தாரகாணாம் நிதாந்தம்
நீலக்ரீவஸ்ய பாதாம்புருஹவிலஸிதா ஸா நகாலீ ஸுகம் வஃ ||

**या** எது **अमला** பரிசுத்தமாயும் **प्रह्व-प्राचीनबर्हिः-प्रमुख-सुरवर- प्रस्फुरन् - मौलि - सक्त - ज्यायो-रत्नो-त्करोत्थैः** வணங்கிய தேவேந்திரன் முதலிய சிறந்த தேவர்களுடைய தலையில்

வைத்த கிரீடங்களில் ஒளிரும் பெரிய ரத்தினங்களின் கிரணங்களால் **अविरतं** இடைவிடாமல் **भूरि** அடிக்கடி **नीराजिता** ஹாரத்தி எடுக்கப்பட்டதோ; **प्रोदग्रा-ग्रा** மேல் தூக்கிய நுனியை உடையதும் **रुचिरा** அழகிய **तारकाणां** நக்ஷத்திரங்களுடைய **ततिरिव** கூட்டத்தைப்போன்றதும் ஆன **नीलग्रीवस्य** கறுத்த கழுத்தை உடைய பரமசிவனுடைய **पादाम्बुरुह-विलसिता** தாமரை அடிகளில் துலங்கும் **सा** அந்த **नखाली** நகங்களின் வரிசை **वः** உங்களுக்கு **नितान्तं** மிகவும் **सुखं** ஸுகத்தை **प्रदेयात्** கொடுக்கட்டும்.

கருத்து.—தேவேந்திரன் முதலிய தேவர்கள் விழுந்து பணியும்பொழுது தலையிலிருக்கும் கிரீடங்களில் ஒளிரும் இரத்தினங்களின் கிரணங்களால் ஹாரத்தி எடுக்கப்பட்டது போல் தோற்றுவதும், பரிசுத்தமாய்த் துலங்குவதும், பாதத்தின் நுனியில் தலை தூக்கிநிற்பதும், நக்ஷத்திரங்களின் கூட்டத்தைப்போல் எழில்வாய்ந்ததும், தாமரையை ஒத்தபாதங்களில் ப்ரகாசிப்பதுமான நீலகண்டருடைய கால் நகங்களின் வரிசை உங்களுக்கு இன்பத்தை அளிக்கட்டும்.

**सत्याः सत्याननेन्दावपि सविधगते ये विकासं दधाते**
**स्वान्ते स्वां ते लभन्ते श्रियमिह सरसीचामरा ये दधानाः ।**
**लोलं लोलम्बकानां कुलमिव सुधियां सेवते ये सदा स्तां**
**भूत्यै भूत्यैणपाणेर्विमलतररुचस्ते पदाम्भोरुहे वः ॥ २७ ॥**

ஸத்யா꞉ ஸத்யாநநேந்தாவபி ஸவிதகதே யே விகாஸம் தயாதே
ஸ்வாந்தே ஸ்வாம் தே லஹந்தே ஶ்ரியமிஹ ஸரஸீசாமரா யே தயாநா꞉ |
லோலம் லோலம்பகாநாம் குலமிவ ஸுதியாம் ஸேவதே யே ஸதா ஸ்தாம்
ஹூத்யை ஹூத்யைணபாணேர்விமலதரருசஸ்தே பதாம்போருஹே வ꞉ ॥ 27 ॥

ये எந்த பாதகமலங்கள் सत्याः பதிவ்ரதாசிரோமணி யான பார்வதிதேவியின் आननेन्दौ முகம் என்னும் சந்திரன் सविधगते सति अपि அருகில் இருந்தபோதிலும் विकासं மலர்ச் சியை दधाते தரிக்கின்றவோ. ते अमराः அந்த இந்திரன் முதலிய தேவர்கள் सरसि इव குளத்தில்போல் स्वान्ते மனதில் ये எந்தத் தாமரைகளை दधानाः தரித்துக்கொண்டு इह இங்கு स्वां தன்னுடைய श्रियं காந்தியை लभन्ते அடைகிறார்களோ, लोलं சஞ்சலமான लोलम्बकानां வண்டினங்களுடைய कुलम् इव கூட்டத்தைப்போல் सुधियां कुलं புத்திமான்களின் கூட்டம் ये எந்தத் தாமரைகளை सदा எப்பொழுதும் सेवते ஸேவிக் கிறதோ, भूत्या பஸ்மத்தினால் विमलतररुचः மிக வெண்மை யான காந்தியை உடைய एणपाणेः மானைக் கரத்தில் தாங்கிய பரமசிவனுடைய ते அந்த पदाम्भोरुहे பாதகமலங்கள் वः உங்களுக்கு भूत्यै ஐச்வர்யத்தின் பொருட்டு स्तां இருக் கட்டும்.

கருத்து:—இரவில் சந்திரோதய மாவதால் தாமரை மலருவதில்லை என்பது உலகமறிந்தவிஷயம். தாமரைகள் குளத்தில்தான் மலரும் என்பதும், வண்டினங்களே அவை களில் மொய்த்துக்கொள்ளும் என்பதும் அனைவரும் உணர்ந்ததே. சிவபெருமான் திருவடிகளாகும் தாமரை களோ பார்வதி தேவியின் முகமென்னும் பூர்ணசந்திரன் அருகில் இருக்கும்பொழுதும் மலருகிறது. வானோர்கள் இவைகளை உள்ளத்தில் தரித்தபோதிலும் தாமரை ஓடை யில் உள்ள ஒளி குன்றாமல் அங்கும் வீசுகிறது. வண்டினங் களைப்போல் அறிவாளிகளின் தொகுதிகள் இடைவிடாமல் இந்த பாதத்தாமரைகளில் மொய்த்துக்கொள்கின்றன. (அதாவது எப்பொழுதும் இவற்றை மனத்தில் தரிக்கின் றன). வேதத்தின் வேற்றுருவாகிய மானை கையில்தாங்கிய சிவனுடைய திருவடிகள் என்னும் தாமரைகள் உங்களுக்கு ஐச்வர்யத்தை அளிக்கவேண்டும்.

येषां रागादिदोषाक्षतमति यतयो यान्ति मुक्तिं प्रसादात्
ये वा नम्रात्ममूर्तिद्युसदृषिपरिषन्मूर्ध्नि शेषायमाणाः ।
श्रीकण्ठस्यारुणोद्यच्चरणसरसिजप्रोत्थितास्ते भवाख्यात्
पारावाराच्चिरं वो दुरितहतिकृतस्तारयेयुः परागाः ॥ २८ ॥

யேஷாம் ராகாதிதோஷாக்ஷதமதி யதயோ யாந்தி முக்திம் ப்ரஸா
தாத்
யே வா நம்ராத்மமூர்த்தித்யுஸத்ருஷிபரிஷன்மூர்த்நி ஶேஷாயமா
ணாஃ ।
ஶ்ரீகண்டஸ்யாருணோத்யச்சரணஸரஸிஜப்ரோத்திதாஸ்தே பவா
க்யாத்
பாராவாராச்சிரம் வோ துரிதஹதிக்ருதஸ்தாரயேயுஃ பராகாஃ || 28 ·

**येषां** எவைகளுடைய **प्रसादात्** அனுக்ரகத்தால் **रागादि-दोषा-क्षतमति** ராகம், த்வேஷம் முதலிய தோஷங்களால் கெடாத புத்தியோடு **यतयः** இந்திரியங்களை அடக்கிய ஸன்யாஸிகள் **मुक्तिं** மோக்ஷத்தை **यान्ति** அடைகின்றார்களோ **ये वा** எவைகள் **नम्रा-त्ममूर्ति-द्युसत्-ऋषि-परिषत्-मूर्ध्नि** வணங்கிய, அஷ்டமூர்த்தியாகிய தன்னுருவமான தேவர், இருஷிகணங்கள் இவர்களுடைய தலையில் **शेषायमाणाः** ப்ரசாத மாலையாக இருக்கின்றனவோ **श्रीकण्ठस्य** அழகுவாய்ந்த கழுத்தை உடைய பரமசிவனுடைய **अरुणो-द्यच्चरण-सरसिज-प्रोत्थिताः** கால் என்னும் அழகோடு மலரும் செந்தாமரையி னின்று கிளம்பியவைகளும் **दुरित-हतिकृतः** பாபங்களின் அழித்தலைச் செய்கின்றவைகளுமான **ते** அந்த **परागाः** தூளிகள் **भवाख्यात्** ஸம்ஸாரம் என்னும் **पारावारात्** ஸமுத்திரத்தி னின்று **वः** உங்களை **चिरं** வெகுகாலம் **तारयेयुः** கரையேற்றவேண்டும்.

கருத்து:—புலன்களை அடக்கித் துறவறம்பூண்ட மஹான்கள் எந்த பாததூளிகளின் அனுக்ரகத்தால் ராகம் த்வேஷம் முதலிய தோஷங்களால் கெடுக்கப்படாத மனதோடு மோக்ஷத்தை அடைகிறார்களோ, எந்தத் தூளிகள் பரமசிவன்

காலில் வணங்கிய தேவர்களின் தலையில் அலங்காரமாலை போல் சோபிக்கின்றனவோ, மலர்ந்த செந்தாமரைபோன்ற கால்களினின்று உண்டாகிய சிவபெருமானுடைய அந்தப் பாததூளிகள் பாபத்தை ஒழித்து ஸம்ஸாரமென்னும் ஸமுத்திரத்தினின்று உங்களைக் கரையேற்றவேண்டும்.

भूम्ना यस्यास्तसीम्ना भुवनमनुसृतं यत्परं धाम धाम्नां
साम्नामाम्नायतत्त्वं यदपि च परमं यद्गुणातीतमाद्यम् ।
यच्चांहोहन्निरीहं गहनमिति मुहुः प्राहुरुच्चैर्महान्तो
माहेशं तन्महो मे महितमहरहर्मोहरोहं निहन्तु ॥ २९ ॥

ஹூம்னா யஸ்யாஸ்தஸீம்னா ஹுவனமனுஸ்ருதம் யத்பரம் யாம யாம்னும்
ஸாம்னுமாம்னுயதத்வம் யதபி ச பரமம் யத் குணாதீதமாத்யம் ।
யச்சாம்ஹோஹன்னிரீஹம் ஹனமிதிமுஹு: ப்ராஹுருச்சைர் மஹாந்தோ
மாஹேஶம் தன்மஹோ மே மஹிதமஹரஹர்மோஹரோஹம் நிஹந்து

**यस्य** எதனுடைய, **अस्तसीम्ना** எல்லையற்ற **भूम्ना** பெருமையினால் **भुवनं** உலகு **अनुसृतं** வ்யாபிக்கப்பட்டதோ, **यत्** யாதொன்று **साम्नां** சாந்தமான **धाम्नां** தேஜஸ்களுக்கும் **परं** மேலான **धाम** இருப்பிடமாய் இருக்கிறதோ **अपिच** மேலும் **यत्** யாதொன்று **परमं** மேலான **आम्नायतत्त्वं** வேதங்களின் உட்கருத்தா யிருக்கிறதோ **यत्** எது **आद्यं** உலகத்திற்கே ஆதியாயும் **गुणातीतं** ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களைக் கடந்ததாயு மிருக்கிறதோ **यत्** யாதொரு தேஜஸ்ஸை **अंहोहन्** பாபத்தை அழிப்பதாயும் **निरीहं** ஆசையற்றதாயும் **गहनं** அறிய முடியாததாயும் (இருக்கிறது) **इति** என்று **महान्तः** பெரியோர்கள் **मुहुः** அடிக்கடி **उच्चैः** உரக்க **प्राहुः** கூறுகிறார்களோ **महितं** எல்லோர்களாலும் பூஜிக்கப்பட்ட **तत्** அந்த **माहेशं** மஹேச்வரனுடைய **महः** தேஜஸ்ஸு **अहरहः** ஒவ்வொரு

நாளும் **मे** என்னுடைய **मोहरोहं** மோஹத்தின் முளையை **निहन्तु** அறுக்கட்டும்.

கருத்து:—பரமசிவன் மேனி ஒளி உலகம் முழுவது மளாவி சூர்யன் சந்திரன் முதலிய தேஜோ வடிவமாய் நமக்குத் தோன்றுகிறது. அது எல்லா தேஜஸ்ஸுக்கும் மேற்பட்ட தாய் விளங்குகிறது. வேதத்தின் மேலான கருத்தாக இருக்கிறது. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்று முக்குணமுடையவன ப்ரக்ருதியைக் கடந்து அது நிற்கிறது. அதைப்பெரியோர்கள் பாபங்களை அகற்றுவதாயும், ஆசை அற்றதாயும் இருப்பதாய் அடிக்கடி உரக்கக் கூறுகிறார் கள். அனைவரும் பூஜிப்பதான சிவனுடைய அந்த காந்தி தினமும் ஓங்கி வளரும் என்னுடைய மோஹத்தின் முளையை அகற்றவேண்டும்.

**इति श्रीशिवकेशादिपादान्तवर्णनस्तोत्रं समाप्तम्**

ஸ்ரீ சிவகேசாதிபாதாந்த வர்ணன ஸ்தோத்ரம் முற்றிற்று

श्रीः

# ॥ श्री वेदसारशिवस्तोत्रम् ॥

## ஸ்ரீ வேதஸார சிவ ஸ்தோத்ரம்

---

पशूनां पतिं पापनाशं परेशं
गजेन्द्रस्य कृत्तिं वसानं वरेण्यम् ।
जटाजूटमध्ये स्फुरद्गाङ्गवारिं
महादेवमेकं स्मरामि स्मरारिम् ॥ १ ॥

பஶூநாம் பதிம் பாபநாஶம் பரேஶம்
க3ஜேந்த்3ரஸ்ய க்ருத்திம் வஸாநம் வரேண்யம் |
ஜடாஜூடமத்4யே ஸ்பு2ரத்3கா3ங்க3வாரிம்
மஹாதே3வமேகம் ஸ்மராமி ஸ்மராரிம் ॥ 1 ॥

**पशूनां** பசுக்கள் எனக் கருதப்படும் ஜீவன்களுக்கு **पतिं** யஜமானனும், **पापनाशं** பாபத்தை ஒழிப்பவரும், **परेशं** பரமேச்வரனும் **गजेन्द्रस्य** சிறந்த யானையினுடைய **कृत्तिं** தோலை **वसानं** அணிந்துகொண்டவரும், **वरेण्यं** எல்லோராலும் சேவிக்கத்தக்கவரும், **जटाजूटमध्ये** ஜடைக்கூட்டத்திற்கிடையே **स्फुरद्गाङ्गवारिं** விளங்கும் கங்காஜலத்தை உடையவரும் **महादेवं** தேவர்களுக்கும் தேவனும், **एकं** ஒப்பு உயர்வற்றவரும் ஆன **स्मरारिं** மன்மதனை வென்ற சிவனை **स्मरामि** சிந்திக்கின்றேன்.

கருத்து:—ப்ராணிகள் அனைத்துக்கும் பதியாயும், தீவினையை அகற்றும் பரமேச்வரனுயும், சிறந்த யானையின் தோலை தரித்தவனுயும், அனைவராலும் போற்றத் தகுந்தவ

னும், ஜடையின் இடையே ஒளியுடன் கூடிய கங்காஜலத்தை உடையவனும், காமன் பகைவனுமிருக்கும் இணையற்ற தேவாதி தேவனை நான் த்யானம் செய்கிறேன்.

குறிப்பு:—சைவவேதாந்தத்தில் ஜீவன்கள் அனைத்தையும் பசுக்களாகவும், பரமசிவனை அவைகளுக்கு பதியாகவும் கூறப்பட்டுளது. கடவுளின் கருணையில்லாவிடில், அறிவு படைத்திருந்தபோதிலும் ஜீவன்கள் ஒன்றும் செய்யமுடியாது. இடையன் பசுக்களை போல் ஜீவன்களை கட்டி வைப்பதற்கும், அவிழ்த்து விடுவதற்கும் உரிமை அவருக்கே உண்டு; என்பதாலும், அவ்விதம் கூறுவது பொருந்தி இருக்கிறது.

महेशं सुरेशं सुरारातिनाशं
विभुं विश्वनाथं विभूत्यङ्गभूषम् ।
विरूपाक्षमिन्द्वर्कवह्नित्रिणेत्रं
सदानन्दमीडे प्रभुं पञ्चवक्त्रम् ॥ २ ॥

மஹேஶம் ஸுரேஶம் ஸுராராதிநாஶம்
விபும் விஶ்வநாதம் விபூத்யங்கபூஷம் |
விரூபாக்ஷமிந்த்வர்கவஹ்னித்ரிணேத்ரம்
ஸதானந்தமீடே ப்ரபும் பஞ்சவக்த்ரம் ‖ 2 ‖

**महेशं** ஈச்வரன் எனக் கருதப்படும் ப்ரம்மாதிகளுக்கும் ஈச்வரனையும், **सुरेशं** இந்திரன் முதலிய தேவர்களுக்கும் அரசனையும் **सुराराति-नाशं** தேவர்களின் பகைவர்களை வெல்பவராயும், **विभुं** எங்கும் நிறைந்தவரும் **विश्व-नाथं** அனைத்திற்கும் அதிபனையும் **विभूत्यङ्गभूषम्** திருநீறுலான உடம்பின் அணியை உடையவராயும்; **विरूपाक्षं** மிக்க அழகுபொருந்திய கண் படைத்தவராயும், **इन्दु-अर्क-वह्नि-त्रिणेत्रं** சந்திரன், சூரியன், அக்னி இவைகளாகிய மூன்று கண்களை உடையவராயும் **सदानन्दं** எப்பொழுதும் ஆனந்தமாயும், **पञ्चवक्त्रं** ஐந்து முகம் படைத்தவராயுமிருக்கின்ற **प्रभुं** எல்லா சக்தியும் பொருந்திய பரமசிவனை **ईडे** ஸ்தோத்திரம் செய்கிறேன்.

கருத்து :—மஹேச்வரனையும், தேவர்களின் பகைவரை வென்று அவர்களை ஆள்பவரும், உலகனைத்திலும் பரவி அடக்கி ஆட்சிபுரிபவரும், விபூதி அணிந்த அங்கமுடையவரும், சந்திர, சூர்ய, அனலங்களாகிய அழகுவாய்ந்த மூன்று கண்களோடு கூடியவரும், ஆனந்தமே உருக்கொண்டவரும் ஆன ஐந்துமுகம் கொண்ட ப்ரபுவை நான் போற்றுகிறேன்.

குறிப்பு :—**विरूपाक्षम्** எல்லோரிலும் அதிக அழகுவாய்ந்த கண்ணை உடையவர் என்று ஓர் அர்த்தம்; எல்லோரையும் விட வேற்றுருவத்தோடு அமைந்த கண்களை உடையவர் (நெற்றியில் அனல் சொரியும் கண் பரமசிவன் ஒருவருக்கே உரித்தானது) என்று மற்றோர் பொருள். இரண்டும் இங்கு பொருந்தும். வேற்றுமையுடைய கண்ணுள்ளவர் என்ற அர்த்தம் கொண்டால் சந்திர சூர்ய அக்னிகளை மூன்று கண்ணாக உடையவர் என்ற அடுத்த சொல்லின் பொருள் முன்பதத்தின் அர்த்தத்திற்கு உதவியளிப்பதாய் இருக்கும். **इन्द्वर्कवह्नि**– பரமசிவன் உலகவடிவமாய் இருப்பதற்கு சந்திரன் சூர்யன் அக்னி இவர்களை கண்ணாக குறிப்பது ஏற்றது. இம்மூன்றுமே உலக வஸ்துக்களை விளக்குகின்றன.

गिरीशं गणेशं गले नीलवर्णं
गवेन्द्राधिरूढं गुणातीतरूपम् ।
भवं भास्वरं भस्मना भूषिताङ्गं
भवानीकलत्रं भजे पञ्चवक्त्रम् ॥ ३ ॥

கிரீசம் கணேசம் கலே நீலவர்ணம்
கவேந்த்ராதிரூடம் குணாதீதரூபம் |
பவம் பாஸ்வரம் பஸ்மனா பூஷிதாங்கம்
பவானிகலத்ரம் பஜே பஞ்சவக்த்ரம் ॥ 3 ॥

**गिरीशं** மலைக்கு யஜமானனும், **गणेशं** ப்ரமத கணங்களை அடக்கி ஆளுபவரும், **गले** கழுத்தில் **नीलवर्णं** நீலநிறமுள்ளவரும், **गवेन्द्राधिरूढम्** சிறந்த எருதின்மேல் ஏறிக்கொண்டவரும் **गुणातीतरूपम्** ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று

குணங்களைக் கடந்த உருவத்தை உடையவரும், **भवं** உலகத்திற்கு காரணமாயும், **भास्वरं** ப்ரகாசத்தோடு கூடியவரும் **भस्मना** விபூதியால் **भूषिताङ्गम्** அலங்கரித்த உடம்பை உடையவரும், **भवानीकलत्रं** பார்வதியை பத்னியாய் கொண்டவரும் ஆன **पञ्चवक्त्रम्** ஐந்துமுகமுடைய பரமசிவனை **भजे** ஸேவிக்கிறேன்.

கருத்து:—மலையில் இருந்துகொண்டு ப்ரமத கணங்களை ஆள்பவரும், நீலகண்டரும், விருஷபத்தில் ஏறியவரும், ப்ரகிருதிகளுக்கு உட்படாத உருவமுடையவரும், உலகப் பிறவிக்கே மூலகாரணமும், உடம்பு முழுதும் திருநீர் அணிந்துகொண்டு ஒளியோடு விளங்குபவரும் ஆன பார்வதியோடு கூடிய பரமசிவனை ஸேவிக்கின்றேன்.

குறிப்பு:—**गुणातीतरूपम्**—உலகத்திற்கே காரணம் ப்ரகிருதி என்று சாஸ்திரம் கூறுகிறது. அது உயிர் அற்றது. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களால் ஆனது. இதையே மாயை என்றும் கூறுவார்கள். அதற்குட்பட்டவர்கள் துன்பமுற்று வாடுகிறார்கள். அவர்களே ஸம்ஸாரிகள். பகவான் மாயைக்கு புறம்பானவர். அதுபற்றியே கடவுளின் உருவம் அல்லது உண்மைநிலை மாயைக்கு அல்லது குணங்களுக்கு அப்பால் இருக்கிறது என்று இங்கு கூறப்பட்டுள்ளது. **पञ्चवक्त्रम्** ஸத்யோஜாதம் முதலிய ஐந்து முகங்கள் சிவனுக்கு உண்டு என்பது சாஸ்திர புராணங்களில் குறிப்பிட்ட விஷயம்.

**शिवाकान्त शंभो शशांकार्धमौले**
**महेशान शूलिन् जटाजूटधारिन् ।**
**त्वमेको जगद्व्यापको विश्वरूपः**
**प्रसीद प्रसीद प्रभो पूर्णरूप ॥ ४ ॥**

ஶிவாகாந்த ஶம்ஹோ ஶஶாங்கார்தமௌளே
மஹேஶான ஶூலின் ஜடாஜூடதாரின் |
த்வமேகோ ஜகத்வ்யாபகோ விஶ்வரூப:
ப்ரஸீத ப்ரஸீத ப்ரஹோ பூர்ணரூப ॥ 4 ॥

**शिवाकान्त** மங்களரூபிணியான பார்வதியின் மனதிற் கிசைந்த நாயகனையும், **शंभो** க்ஷேமங்கள் அனைத்திற்கும் உறைவிட மானவனும் **शशाङ्कार्धमौले** இளம் சந்திரனை தலைக்கு அணியாய் வைத்துக்கொண்டவனும், **महेशान** ஈச்வரன் எனக் கருதப்படும் ப்ரம்மாதிகளிலும் பெரிய ஈச்வரனையும், **शूलिन्** சூலத்தை கையில் வைத்திருப்பவரும் **जटाजूट-धारिन्** ஜடைக்கூட்டத்தை அணிந்தவரும் **पूर्णरूप** எங்கும் நிறைந்த உருவம் உடையவரும் ஆன **प्रभो** ப்ரபுவே **त्वम् एकः** நீர் ஒருவரே **जगद्व्यापकः** உலகம் முழுவதும் வியாபித்து இருக்கின்றீர். **प्रसीद प्रसीद** என்னிடத்தில் தயவு செய்யும்; தயவு செய்யும்.

கருத்து—பார்வதியின் மனதிற் கிசைந்த பர்த்தாவாயும், அர்த்த சந்திரனை தலையில் சூடியவரும், கையில் சூலமும் தலையில் சடையும் அணிந்தவரும், மஹேச்வரனும் ஆன சம்புவே தாங்கள் ஒருவரே உலகம் முழுவதும் நிறைந்து உலகப் பொருள்களின் அந்தந்த உருவத்தோடு விளங்குகிறீர். ஆகவே தாங்களே என்னை அனுக்ரகித்தருள வேண்டும்.

குறிப்பு :—**जगद्व्यापकः विश्वरूपः** இவ்விரண்டு சொற்களும் கடவுளைத் தவிர மற்றொன்றில்லை என்ற கருத்தை விளக்குகிறது. ஆகவே அவரை '**पूर्णरूपः**' எங்கும் நிறைந்த உருவமுடையவர் என்று கூறுவது பொருந்துகிறது.

**परात्मानमेकं जगद्बीजमाद्यं**
**निरीहं निराकारमोंकारवेद्यम् ।**
**यतो जायते पाल्यते येन विश्वं**
**तमीशं भजे लीयते यत्र विश्वम् ॥ ५ ॥**

பராத்மான மேகம் ஜகத்பீஜமாத்யம்
நிரீஹம் நிராகாரமோங்காரவேத்யம் |
யதோ ஜாயதே பால்யதே யேன விஸ்வம்
தமீஸம் பஜே லீயதே யத்ர விஸ்வம் ‖ 5 ‖

**परात्मानं** பரமாத்மாவாயும் **एकं** ஒன்றாயும், **आद्यं** முதலாவதான **जगद्बीजम्** ஜகத்காரணமாயும், **निरीहं** ஆசை அற்றவரும், **निराकारम्** உருவமில்லாதவரும் **ओङ्कारवेद्यम्** ஓம் என்ற வர்ணத்தால் அறியத் தகுந்தவரும், **यतः** எந்த பரமேச்வரனிடமிருந்து **विश्वं** உலகம் **जायते** உண்டாகிறதோ **येन** எவரால் **विश्वं** அந்த உலகம் **पाल्यते** காப்பாற்றப்படுகிறதோ **यत्र** எந்த பரமேச்வரனிடத்தில் **विश्वं** உலகம் **लीयते** மறைகிறதோ **तम् ईशं** அந்த ஈச்வரனை **भजे** பஜிக்கிறேன்.

கருத்து:—எதில் நின்று உலகமனைத்தும் உண்டாகி, எதனால் காப்பாற்றப்பெற்று, எதில் மறைகின்றதோ, ஜகத்திற்கு ஆதிகாரணமாயும், ஆசையற்றவரும், உருவமின்றி ஆகாசம்போலிருக்கின்றவரும், ஓங்காரத்தாலேயே அறியத் தகுந்தவரும், பரமாத்மாவாயும் இருக்கின்ற அந்த பரமேச்வரனை நான் ஸேவிக்கின்றேன்.

குறிப்பு:—**ओंकारवेद्यम्** எல்லா வேதங்களுடைய கருத்தும் ஓங்காரத்தில் அடங்கியதாக உபனிஷத்துக்களே கூறியிருக்கின்றன. ஆகவே வேதத்தால் அறிவிக்கப்படும் பரமாத்மா ஓங்கரத்தால் அறியப்படுகிறார் என்று கூறுவது பொருத்தமாய் இருக்கிறது. **त्रिमूर्तिं** பரமாத்மாவெனப்படும் சுத்த ப்ரம்மத்திற்கு 'உலகு எதில், உண்டாகி, இருந்து, அழிகின்றதோ அதுவே ப்ரம்மம்' என்று லக்ஷணம் ப்ரம்ம ஸூத்திரம் முதலானதில் காணப்படுகிறது. அதையே இங்கு ச்லோகத்தில் பகவான் ஆசார்யர் அமைத்திருக்கிறார்.

**न भूमिर्न चापो न वह्निर्न वायुः**
**न चाकाशमास्ते न तन्द्रा न निद्रा ।**
**न चोष्णं न शीतं न देशो न वेषो**
**न यस्यास्ति मूर्तिः त्रिमूर्तिं तमीडे ॥ ६ ॥**

ந பூமிர்ந சாபோ ந வஹ்நிர்ந வாயு:
ந சாகாஶமாஸ்தே ந தந்த்ரா ந நித்ரா ।
ந சோஷ்ணம் ந ஶீதம் ந தேஶோ ந வேஷோ
ந யஸ்யாஸ்தி மூர்த்தி: த்ரிமூர்த்திம் தமீடே ॥ 6 ॥

**(यः** எந்த பரமசிவன்) **भूमिः** பூமியாக **न आस्ते** இல்லேயோ **आपः च न** ஜலமாகவும் இல்லேயோ **न वह्निः** அக்னியாக இல்லேயோ **न वायुः** காற்ருக இல்லேயோ **न आकाशं च** ஆகாசமாகவும் இல்லேயோ **न तन्द्रा** சோம்பலாக இல்லேயோ **न निद्रा** தூக்கமாயில்லேயோ **न उष्णं च** சூடாகவும் இல்லேயோ **न शीतं** குளுமையாகவும் இல்லேயோ **यस्य** எவருக்கு **न देशः अस्ति** இருப்பிடமில்லேயோ **न वेषः** வேஷம் இல்லேயோ **न मूर्तिः** உருவமில்லேயோ **त्रिमूर्तिं** ப்ரம்ம விஷ்ணு ருத்ரரூபரான **तं** அந்த பரமசிவனே **ईडे** போற்றுகிறேன்.

கருத்து:—எவர், பூமி முதலிய ஐந்து பூதங்களாயும் சோம்பல், தூக்கம், உஷ்ணம், சீதம் இவைகளாகவும், இல்லேயோ; எவருக்கு, இருப்பிடம், வேஷம், உருவம் முதலியன இல்லேயோ, மும்மூர்த்தி வடிவம் கொண்ட அப்பரமேச்வரனே ஸ்தோத்திரம் செய்கிறேன்.

குறிப்பு :—எக்கடவுள் எல்லாமாகவும் இருக்கிறரோ அவரை ஒன்று மட்டுமாக குறிப்பது தகுதியல்ல. ஆகவே, 'எல்லாவற்றிற்கும் மேல்பட்டவர்' என்பதாலேயே பூமி முதலியதாக பகவான் இருக்கவில்லே என்று இந்த ச்லோகம் விளக்குகிறது. உலகை படைப்பதால் இப்பரமசிவனே ப்ரம்மா என்ற பெயர் பெறுகிறர். அப்படியே காப்பாற்றுவதால் விஷ்ணுவென்றும் அழிப்பதால் ருத்ரர் என்றும் கூறப்படுகிறர். இக்கருத்தையே இங்கு **त्रिमूर्ति** என்ற சொல் விளக்குகிறது.

**अजं शाश्वतं कारणं कारणानां**
**शिवं केवलं भासकं भासकानाम् ।**
**तुरीयं तमः पारमाद्यन्तहीनं**
**प्रपद्ये परं पावनं द्वैतहीनम् ॥ ७ ॥**

அஜம் ஶாஶ்வதம் காரணம் காரணனும்
ஶிவம் கேவலம் ஹாஸகம் ஹாஸகானும் |
துரீயம் தமஃ பாரமாத்யந்தஹீனம்
ப்ரபத்யே பரம் பாவனம் த்வைதஹீனம் ‖ 7 ‖

**अजं** பிறவி இல்லாதவரும், **शाश्वतं** எப்பொழுது மிருப்பவரும் **कारणानां** காரணம் என்று கருதப்படுகிறதுகளுக்கும் **कारणं** காரணமாயும் **केवलम्** ஒப்பற்றவர்வற்று தனித்திருப்பவரும் **भासकानां** உலகைப்ரகாசிக்கச் செய்யும் சூர்யன் முதலியவர்களையும் **भासकं** விளங்கச் செய்பவரும், **तुरीयं** மும்மூர்த்திகளையும் கடந்த நான்காவதானவரும், **तमःपारं** ஆணவத்திற்கு அக்கரையாயும் **आद्यन्तहीनं** ஆதி அந்தம் அற்றவரும் **परं** மேலான **पावनं** பரிசுத்தியைச் செய்கிறவரும் **द्वैतहीनम्** த்வைதம் அற்றவருமான **शिवं** மங்கள வடிவமான சிவனை **प्रपद्ये** அடிபணிகிறேன்.

கருத்து—உலகிற்கு காரணங்களாகக் கருதப்படும் ஆகாசம் முதலிய ஐந்து பூதங்களுக்கும் காரணமாயும், தனக்கோர் காரணமில்லாததாயும், யாவற்றையும் விளங்கச் செய்யும் சூர்யன் சந்திரன் முதலியோருக்கும் ப்ரகாசமளிப்பதாயும், அஞ்ஞானத்திற்கு அப்பால் இருப்பதும், ஆதி அந்தமற்றதும், நினைத்தமாத்திரத்தில் யாவற்றையும் பருசுத்தமாக்குவதும், அத்வைதமாயும் இருக்கும் சதாசிவம்என்ற மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்ட தத்வத்தை அடி பணிகிறேன்.

குறிப்பு :—உலகில் நாம் காணும் எந்த சக்தியும் பரமசிவனுடையதே என்பது சாஸ்திரக் கருத்து. சூர்யனுக்கு ஒளி கொடுப்பதும் அவரே. தண்ணீருக்கு நனைக்கும் திறன் அளிப்பதும் அவரே. ஆகவே விளங்கவைக்கும் பொருளையும் விளக்குபவர் என்று இங்கு குறித்திருக்கிறது. **तुरीयं** விழிப்பு, சொப்பனம், உறக்கம் இம்மூன்று நிலையில் ஆன்மாவிற்கு, விச்வன் தைஜஸன் ப்ராக்ஞன் என்று முறையே பெயர்கள். இம்மூன்று நிலையைத் தாண்டிய ஆன்மா சுத்தப்பிரமமம் என்றும் நான்காவது என்றும் உபனிஷத்து விளக்குறது.

नमस्ते नमस्ते विभो विश्वमूर्ते
नमस्ते नमस्ते चिदानन्दमूर्ते ।
नमस्ते नमस्ते तपोयोगगम्य
नमस्ते नमस्ते श्रुतिज्ञानगम्य ॥ ८ ॥

நமஸ்தே நமஸ்தே விபோ விஶ்வமூர்த்தே
நமஸ்தே நமஸ்தே சிதானந்தமூர்த்தே |
நமஸ்தே நமஸ்தே தபோயோகம்ய
நமஸ்தே நமஸ்தே ஶ்ருதிஜ்ஞானகம்ய ॥ 8 ॥

**विभो** எங்கும் நிறைந்தவரும் **विश्वमूर्ते** எல்லாமாய் உரு வெடுத்தவரும் ஆன பரமசிவனே **ते** உமக்கு **नमः** நமஸ்காரம். **ते** உமக்கு **नमः** நமஸ்காரம். **चिदानन्दमूर्ते** ஞான ஆனந்த வடிவமானவரே **ते** உமக்கு **नमः** நமஸ்காரம் **ते** உமக்கு **नमः** நமஸ்காரம் **तपोयोगगम्य** தவத்தாலும் யோகத்தாலும் அடையத்தகுந்தவரே **ते** உமக்கு **नमः** நமஸ்காரம **ते** உமக்கு **नमः** நமஸ்காரம். **श्रुतिज्ञानगम्य** வேதத்தால் அடையும் ஞானத்தால் அறியத்தகுந்தவரே **ते** உமக்கு **नमः** நமஸ்காரம் **ते** உமக்கு **नमः** நமஸ்காரம்.

கருத்து:—எங்கும் நிறைந்து எல்லாமாய் இருப்பவரும், ஞான ஆனந்த வடிவம் கொண்டவரும், தவம், யோகம், வேதாந்தம் புகட்டிய அறிவு இவைகளால் அடையக்கூடியவரும் ஆன பரமசிவனே, உமக்கு நமஸ்காரம்.

**प्रभो शूलपाणे विभो विश्वनाथ**
**महादेव शम्भो महेश त्रिणेत्र ।**
**शिवाकान्त शान्त स्मरारे पुरारे**
**त्वदन्यो वरेण्यो न मान्यो न गण्यः ॥ ९ ॥**

ப்ரபோ ஶூலபாணே விபோ விஶ்வநாத
மஹாதேவ ஶம்போ மஹேஶ த்ரிணேத்ர ।
ஶிவாகாந்த ஶாந்த ஸ்மராரே புராரே
த்வதன்யோ வரேண்யோ ந மான்யோ ந கண்ய: ॥ 9 ॥

**प्रभो** ப்ரபுவாயும், **शूलपाणे** சூலாயுதத்தை கையில் ஏந்தியவரும், **विभो** எங்கும் நிறைந்தவரும் **विश्वनाथ** அனைத்திற்கும் நாதனையும், **महादेव** தேவர்களுக்கும் தேவனையும் **शंभो** மங்களங்களிற்கு உறைவிடமாயும் **त्रिणेत्र** முக்கண் படைத்தவராயும் **शिवाकान्त** மங்களரூபியாகிய பார்வதியின் பர்த்தாவா

யும், **शान्त** சாந்தவடிவம் கொண்டவரும் **स्मरारे** மன்மதனை எரித்தவரும் **पुरारे** த்ரிபுரர்களை வென்றவரும் ஆன **महेश** மஹேச்வரனே **त्वदन्यः** உம்மைத்தவிர மற்றொருவன் **वरेण्यः** போற்றத்தகுந்தவனாயும் **मान्यः** வெகுமதிக்கத்தகுந்தவனாயும் **न** இல்லை **गण्यः** சிறந்தவனாக எங்களால் எண்ணக்கூடியவனாக வும் **न** இல்லை.

கருத்து:—எங்கும் நிறைந்து ஸர்வ சக்திகளும் பொருந்தி, சூலம் கையில் பிடித்து உலகை காத்துவரும் மஹேச்வரனே, முக்கண்ணனே, பார்வதியின் ஆசை நாயகனே, மதனனையும், த்ரிபுரர்களையும் வென்றவனே, சாந்த ரூபியே, சம்புவே, உம்மைத் தவிர எங்களுக்கு ஓர் பொருட்டாக எண்ணி போற்றக் கூடியவன் இல்லை.

குறிப்பு :—**विभो चिश्वनाथ** என்பதால், எங்கும் நிறைந்திருப்பதால் தான் கடவுள் எல்லோரையும் அடக்கி காத்து அருளுகிறார். நாம் காணும் அரசர்களைப் போல் பகவான் கைலாசத்தில் மட்டுமாய் இருந்தால் நம்மை காப்பது இயலாது. அவர் அங்கிருந்து இங்கு வருவதற்கு முன் நாம் பல துன்பங்களை அனுபவிக்க நேரிடும். அது பற்றியே அவர் விபுவாய் இருக்கிறார் என்ற பொருள் வெளியாகிறது. மன்மதன் த்ரிபுரர்கள் இவர்களை நல்லகதி அடைவதற்காகவே அவர் அழித்தார் என்பதால் அவர் எப்பொழுதும் சாந்தமூர்த்தி என்பது கிடைக்கிறது. அதை விளக்கவே இங்கு **शान्त स्मरारे पुरारे** என்று சேர்த்துக் கூறப்பட்டிருக்கிறது.

**शम्भो महेश करुणामय शूलपाणे**
**गौरीपते पशुपते पशुपाशनाशिन् ।**
**काशीपते करुणया जगदेतदेकः**
**त्वं हंसि पासि विदधासि महेश्वरोऽसि ॥ १० ॥**

ஶம்ஹோ மஹேஶ கருணாமய ஶூலபாணே
கௌரீபதே பஶுபதே பஶுபாஶநாஶின் |
காஶீபதே கருணயா ஜகதேததேக:
த்வம் ஹம்ஸி பாஸி விதயாஸி மஹேஶ்வரோऽஸி ‖ 10 ‖

**करुणामय** கருணை வடிவம் கொண்டவரும் **शूलपाणे** சூலத்தை கையில் தரித்தவரும் **गौरीपते** கௌரியின் நாதனும் **पशुपते** பசுக்கள் எனப்படும் ஜீவன்களுக்கு பதியாயும் **पशुपाशनाशिन्** பசுவான ஜீவன்களுடைய கர்மா என்ற பாசத்தை அகற்றுபவரும் **काशीपते** காசிக்கு பதியாயும் இருக்கின்ற **महेश** மஹேச்வரனே **शम्भो** மங்களங்களைச் செய்யும் சம்புவே **त्वं** நீர் **एकः** ஒருவனே **करुणया** தயவினால் **एतत्** இந்த **जगत्** உலகத்தை **हंसि** அழிக்கின்றீர். **पासि** காப்பாற்றுகிறீர் **विदधासि** படைக்கிறீர். ஆகவே நீர் **महेश्वरः** எல்லோருக்கும் மேலான மஹேச்வரனாக **असि** இருக்கிறீர்.

கருத்து :—கையில் சூலம் ஏந்தி காசியின் அரசனாய் வாழும் பசுபதியே தாங்கள் ஒருவரே ஜீவன்கள் தன் கர்மாக்களை அனுபவித்து தீர்த்து மோக்ஷமடையட்டும் என்ற கருணையினால் உலகை படைத்து, காத்து, அழிக்கின்றீர். உமக்கு நிகரான மற்றோர் கடவுள் இல்லை; தாங்களே மஹேச்வரன்.

குறிப்பு :—**पशुपाश** இவ்வுலகில் ஜீவன்கள் பசுக்கள்போல் கர்மா வென்ற பாசத்தால் கட்டுண்டு கஷ்டப்படுகின்றன. இடையன் மாடுகளை அவிழ்த்து அவைகளிஷ்டப்படி சுற்றித்திரிய எவ்விதம் விடுகிறானோ; அப்படியே பசுபதி இப்பசுக்களைகர்மாவாகிய பாசத்தை அறுத்து தன்னிஷ்டப்படி ஆனந்த முறும் நிலையை அல்லது மோக்ஷத்தை அடைவிக்கிறார்—என்ற கருத்து இச்சொல்லில் வெளியாகிறது.

त्वत्तो जगद्भवति देव भव स्मरारे
त्वय्येव तिष्ठति जगन्मृड विश्वनाथ ।
त्वय्येव गच्छति लयं जगदेतदीश
लिङ्गात्मके हर चराचरविश्वरूपिन् ॥ ११ ॥

த்வத்தோ ஜகத்³ ப⁴வதி தே³வ ப⁴வ ஸ்மராரே
த்வய்யேவ திஷ்ட²தி ஜகன்ம்ருட³ விஶ்வநாத² |
த்வய்யேவ க³ச்ச²தி லயம் ஜக³தே³ததீ³ஶ
லிங்கா³த்மகே ஹர சராசரவிஶ்வரூபின் ‖ 11 ‖

**देव** ப்ரகாச ரூபியாயும் **स्मरारे** மதனனை வென்றவரும் ஆன **भव** எல்லாவற்றிற்கும் மூல காரணமாகிய பரமசிவனே **त्वत्तः** உம்மிடமிருந்து **जगत्** உலகம் **भवति** உண்டாகிறது. **विश्वनाथ** அனைத்திற்கும் நாதனாகிய **मृड** பரவசிவனே **जगत्** உண்டாகிய உலகம் **त्वयि एव** உம்மிடத்திலேயே **तिष्ठति** இருக்கிறது. **ईश** யாவற்றையும் ஆளுபவரும் **चराचरविश्वरूपिन्** அசைகின்றதும் அசைவற்றதுமான எல்லா பொருளாயுமிருக்கின்ற **हर** சம்ஹார மூர்த்தியாகிய சிவனே **लिङ्गात्मके** லிங்கவடிவங் கொண்ட **त्वयि एव** உம்மிடத்திலேயே **एतत्** இந்த **जगत्** உலகம் **लयं** மறைவை **गच्छति** அடைகிறது.

கருத்து :—தேவனே பவன் எனப்படும் தங்களிடமிருந்தே இவ்வுலகம் உண்டாகிறது. ம்ருடன் என்று கூறப்பட்ட உம்மிடத்திலேயே இந்த உலகம் நிலைவுற்று நிற்கிறது. ஹரன் என்ற பெயர் பெற்ற சர்வகாரண ரூபமான தங்கள் உருவத்திலேயே இவ்வுலகம் மறைகிறது. நீரே உலக வடிவமாக இருக்கிறீர்கள்.

குறிப்பு:—**भव** என்ற சொல் எதில் நின்று ஏற்படுகிறதோ அதை குறிக்கிறது. ஆகவே உலகை ஆக்கும்பொழுது அதற்கு காரணமான கடவுள் பவன் ஆகிறார். **मृड** காப்பாற்றி சுகப்படுத்துகிறவன் என்று இச்சொல்லிற்கு பொருள். அது பற்றி உலகை காக்கும் பொழுது பகவான் மிருடன் என்றுகூறப்படுகிறார். **हर** என்ற சொல்லிற்கு சிதறிக் கிடப்பதை தன்னிடம் கொண்டுவந்து சேர்த்துக் கொள்பவன் என்ற பொருள். ப்ரளய காலத்தில் சிவன் பரவிக்கிடக்கும் உலகை தன்னில் சேர்த்துக் கொள்கிறார் என்று புராணம் கூறுகிறது. ஆகவே லயத்தில் அவர் ஹரன் எனப்படுகிறார். **लिङ्गं** லிங்கம் என்ற சொல்லிற்கு நாம் உலகில் காணும் சிவலிங்கம் என்று பொதுப்படையான பொருள். அதற்கு உட்கருத்து காரணம் என்று, உலகிற்கு காரணம் பகவான். ஆகவே காரண நிலையை நமக்கு விளக்குவதற்காக லிங்காகாரமாய் பகவானை பெரியோர்கள் நமக்கு காட்டி இருக்கிறார்கள். ஆகவே ஜகத்திற்கு காரணமாகிய சிவனிடத்திலேயே அது மறைகிறது. காரணத்திலேயே தான் கார்யம் லயிக்கும்.

**श्रीवेदसारशिवस्तोत्रं संपूर्णम्**

ஸ்ரீ வேதஸார சிவ ஸ்தோத்ரம் முற்றிற்று

---

श्रीः

# ॥ श्रीशिवपञ्चाक्षरस्तोत्रम् ॥

## ஸ்ரீ சிவ பஞ்சாக்ஷர ஸ்தோத்ரம்

---

नागेन्द्रहाराय त्रिलोचनाय
भस्माङ्गरागाय महेश्वराय ।
नित्याय शुद्धाय दिगम्बराय
तस्मै नकाराय नमः शिवाय ॥ १ ॥

நாகேந்த்ரஹாராய த்ரிலோசனய
பஸ்மாங்கராகாய மஹேஶ்வராய |
நித்யாய ஶுத்தாய திகம்பராய
தஸ்மை நகாராய நம: ஶிவாய ‖ 1 ‖

**नागेन्द्रहाराय** பாம்புகளுக்கு அரசனுகிய வாஸுகியை மாலையாயுடையவரும், **त्रिलोचनाय** முக்கண்ணனும், **भस्माङ्ग-रागाय** விபூதியையே உடம்பிற்கு பூசிக்கொள்ளும் வாசனை த்ரவ்யமாயுடையவரும் **महेश्वराय** பெரிய ஈச்வரனுயும் **नित्याय** ஆதி அந்தம் அற்றவரும் **शुद्धाय** பரிசுத்தமானவரும் (அஞ்ஞானம் என்ற மலமற்றவரும்) **दिगम्बराय** திக்குக்களையே வஸ்திரமாக உடையவரும் **नकाराय** பஞ்சாக்ஷரத்தின் முதல் எழுத்தாகிய நகாரமானவரும் ஆன **तस्मै** அந்த **शिवाय** பரமசிவனுக்கு **नमः** நமஸ்காரம்.

கருத்துரை:—வாஸுகியை மாலையாய்க் கொண்டவரும், மூன்று கண் படைத்தவரும், உடம்பு முழுவதும் திருநீறு அணிந்தவரும், தேவாதி தேவனும், ஆதி அந்தம் அற்று ஆணவம் என்னும் மலப்பற்று நீங்கி எங்கும் நிறைந்திருப்

பவரும், பஞ்சாக்ஷரங்களில் முதலான நகார ரூபியுமான அந்த சிவனுக்கு நமஸ்காரம்.

குறிப்பு :— **विलोचनाय** என்பதற்கு, ஒற்றைப்படையான கண்ணை உடையவர் என்றும், விசேஷம் பொருந்திய கண்ணை உடையவர் என்றும் பொருள் கூறலாம். எல்லோருடைய கண்களையும்விட பரமசிவன் நெற்றிக் கண்ணிற்கு உள்ள விசேஷத்தை அனைவரும் அறிவார்கள். **दिगम्बराय** என்பதால் பகவான் உலகம் முழுவதும் அளாவி நிற்கிறார் எனப் பொருள் கிடைக்கிறது. திக்குக்களுக்கு எல்லை இல்லாததால் அவைகளே பகவானை ஆடைபோல் சுற்றிக் கொண்டிருக்கின்றன என்று கூறுவது வழக்கம். மேலும் வஸ்திரம் கட்டாதவனுக்கு திக்குகள்தான் மறைவு. எல்லாவற்றையும் மறைக்கும் பரம்பொருளுக்கு மற்றொன்று மறைப்பதற்கில்லை என்றும் பொருள் கூறலாம். **नकाराय** பஞ்சாக்ஷரம் என்பது ஓர் மந்திரம். **नमः शिवाय** என்பது சிவபஞ்சாக்ஷரம். இம்மந்திரத்திற்கும் அதற்கு தேவதையான சிவனுக்கும் வேற்றுமை இல்லை; இரண்டும் ஒன்றே தான் என்பது மந்திர சாஸ்திரத்தின் கருத்து. அதை ஒட்டி இந்த ஸ்துதியில், ஐந்து அக்ஷரங்களாகவும் பகவான் இருப்பதாக ஐந்து ச்லோகங்களாலும் கூறப்படுகிறது. முதல் ச்லோகத்தில் முதல் எழுத்தாகிய நகாரமாக பகவானை குறித்திருக்கிறது. இந்த ஸ்தோத்திரத்தில் உள்ள ஐந்து ச்லோகங்களும் வரிசையாக பஞ்சாக்ஷர மந்திரத்தின் எழுத்துகளில் ஆரம்பமாகின்றன. ஆகவே இந்த ஸ்தோத்திரம் மந்திரமாகவும் அமைந்திருக்கிறது.

मन्दाकिनीसलिलचन्दनचर्चिताय
नन्दीश्वरप्रमथनाथमहेश्वराय ।
मन्दारमुख्यबहुपुष्पसुपूजिताय
तस्मै मकारमहिताय नमः शिवाय ॥ २ ॥

மந்தாகினீஸலிலசந்தனசர்சிதாய
நந்தீஸ்வரப்ரமதநாதமஹேஸ்வராய |
மந்தாரமுக்யபஹுபுஷ்பஸுபூஜிதாய
தஸ்மை மகாரமஹிதாய நமஃ ஸிவாய || 2 ||

**मन्दाकिनी-सलिल-चन्दन-चर्चिताय** தேவகங்கையின் ஜலமாகிய சந்தனத்தை பூசிக்கொண்டவரும், **नन्दीश्वर-प्रमथनाथ-**

**महेश्वराय** நந்திகேச்வரன், ப்ரமதகணங்களுக்கு தலைவன் இவர்களுக்கும் ஈச்வரனையும், **मन्दारमुख्य-बहुपुष्प-सुपूजिताय** மந்தாரம் முதலிய பற்பல மலர்களால் அர்ச்சனை செய்யப் பட்டவரும், **मकार-महिताय** ம என்ற எழுத்தால் பூஜிக்கப் பட்டவரும் ஆன **तस्मै** அந்த **शिवाय** பரமசிவனுக்கு **नमः** நமஸ்காரம்.

கருத்து:—கங்கையை தலையில் அணிந்துகொண்டு அதி லிருந்து உடம்பில் பெருகும் நீரை சந்தனம்போல் ஆனந்த மாய் பூசிக்கொள்பவரும், நந்திகேச்வரன், ப்ரமத கணங் களுக்கு தலைவன் முதலிய மஹான்களையும் அடக்கி ஆள்பவ ரும், மந்தாரம் முதலிய கற்பகவிருக்ஷத்தின் பூக்களால் என் றும் பூஜிக்கப்பட்டவரும், பஞ்சாக்ஷரத்தின் இரண்டாவது எழுத்தாகிய மகாரத்தினல் பூஜிக்கப்பட்டவரும் ஆன அந்த சிவபிரானுக்கு எனது வணக்கம்.

குறிப்பு :—கங்காதேவியை, பரமசிவனின் ஆசை நாயகியாக காவ்யங்களிலும், புராணங்களிலும் வர்ணிப்பதுண்டு. ஆகவே பக வான் கங்கையின் ஜலத்தை சந்தனம்போல் பூசிக்கொண்டிருக்கிறார் என்று கூறி இருப்பது மிகப் பொருத்தமானது. அவர் மனம் அதனல் இன்பமுற்றிருக்கிறது என்பதும் இதிலிருந்து வெளியாகிறது. சிவன் அபிஷேகப்ரியர் ஆனதால் அவர் தலையில் எப்பொழுதும் கங்கை இருப்பதும் பொருத்தமானதே.

शिवाय गौरीवदनाब्जबृन्द-
सूर्याय दक्षाध्वरनाशनाय ।
श्रीनीलकण्ठाय वृषध्वजाय
तस्मै शिकाराय नमः शिवाय ॥ ३ ॥

ஶிவாய கௌரீவதநாப்ஜப்ருந்த-
ஸூர்யாய தக்ஷாத்வரநாஶநாய ।
ஸ்ரீநீலகண்டாய வ்ருஷத்வஜாய
தஸ்மை ஶிகாராய நமঃ ஶிவாய ॥ 3 ॥

**शिवाय** மங்களரூபியாயும், **गौरी-वदनाब्ज-वृन्द-सूर्याय** பார்வதியின் முகமாகும் தாமரைக்கு சூர்யனும், **दक्षाध्वर-नाशनाय** தக்ஷனுடைய வேள்வியை அழித்தவராயும் **श्री-नील-कण्ठाय** அழகுவாய்ந்த கறுத்தகழுத்தை உடையவராயும் **वृषध्वजाय** காளையை கொடியில் உடையவராயும், **शिकाराय** சிகார வடிவமாயு மிருக்கின்ற **तस्मै** அந்த **शिवाय** பரமசிவனுக்கு **नमः** நமஸ்காரம்.

கருத்து :—மங்கள மூர்த்தியாயும், மலைமகளாகிய பார்வதியின் முகமாகின்ற தாமரையை மலரச் செய்வதில் கதிரவனும், தக்ஷப்ரஜாபதியின் யாகத்தை அழித்தவரும், காலகூட விஷத்தால் நீலமாகிய அழகிய கழுத்தை உடையவரும், விருஷபத்வஜராயும், பஞ்சாக்ஷரத்தின் மூன்றுவது அக்ஷரமாகிய சிகாரரூபமாயுமிருக்கின்ற அந்த பரமேச்வரனுக்கு எனது நமஸ்காரம்.

குறிப்பு :—**शिवाय** சிவ என்ற சொல்லிற்கே மங்களம் எனப் பொருள். ஆகவே மங்களரூபியாகிய பகவானுக்கு அப்பெயர் அமைந்தது. **गौरी-** பார்வதிக்கு பரமேச்வரனைக் காணும்பொழுது எல்லை அற்ற ஆனந்தம் பொங்குவதால் முகம் கதிரவனைக்கண்ட தாமரை போல் மலருகிறது. ஆகவே தேவியின் முகத்தை தாமரையாகவும் பரமசிவனை சூரியனாகவும் இங்கு கூறி இருக்கிறது. **दक्षाध्वरनाशनाय** தக்ஷன் என்பவன் பரமசிவனை அழையாமல் விலக்கி அவமதிக்கும் நோக்கத்தோடு யாகம்செய்தான். பகவான் வீரருத்ராவதாரம் செய்து அந்த யாகத்தை அழித்தார் என்ற கதையை இங்கு நினைத்துக் கொள்ளவேண்டும்.

**वसिष्ठकुम्भोद्भवगौतमादि-**
**मुनीन्द्रदेवार्चितशेखराय ।**
**चन्द्रार्कवैश्वानरलोचनाय**
**तस्मै वकाराय नमः शिवाय ॥ ४ ॥**

வஸிஷ்ட்கும்போத்பவகௌதமாதி-
முனீந்த்ரதேவார்சிதஶேகராய |
சந்த்ரார்கவைஶ்வானரலோசனாய
தஸ்மை வகாராய நமஃ ஶிவாய ‖ 4 ‖

**वसिष्ठ-कुम्भोद्भव-गौतमादि-मुनीन्द्र-देवार्चित-शेखराय** வஸிஷ்டர், அகஸ்த்யர், கௌதமர் முதலிய சிறந்த முனிவர்களாலும், தேவர்களாலும் பூஜிக்கப்பெற்ற கங்கையை தலைக்கு அணியாக உடையவரும் **चन्द्र-अर्क-वैश्वानर-लोचनाय** சந்திரன், சூர்யன், அக்னி இவைகளை கண்ணுடையவரும் **वकाराय** வகாரரூபியுமான **तस्मै** அந்த **शिवाय** பரமசிவனுக்கு **नमः** நமஸ்காரம்.

கருத்து :—வஸிஷ்டர், அகஸ்த்யர், கௌதமர் போன்ற மாமுனிவர்களும் பணிந்து பூஜைசெய்யும் கங்கையை கிரீடம்போல் அணிந்துகொண்டும், சந்திரன், சூர்யன், அக்னி இம் மூவர்களை தன் மூன்று கண்களாய் செய்து கொண்டும், பஞ்சாக்ஷரத்தின் நான்காவது எழுத்தாகிய வகாரமாயும் விளங்கும் பரமசிவனுக்கு நான் பணிகிறேன்.

குறிப்பு :—**चन्द्रा**-உலகிற்கு ப்ரகாசமளித்து கண்போல் பொருளை விளங்கச் செய்பவர், சந்திரன், சூர்யன், அக்னி ஆகிய மூன்றுபேர். அவர்கள் உலகவடிவமாக விளங்கும் பரமசிவனுக்கு கண்களாக அமைந்திருப்பதாக இங்கு சொல்லி இருக்கிறது.

यक्षस्वरूपाय जटाधराय
पिनाकहस्ताय सनातनाय ।
दिव्याय देवाय दिगम्बराय
तस्मै यकाराय नमः शिवाय ॥ ५ ॥

யக்ஷஸ்வரூபாய ஜடாதராய
பினாகஹஸ்தாய ஸனாதனாய |
திவ்யாய தேவாய திகம்பராய
தஸ்மை யகாராய நமஃ ஶிவாய ‖ 5 ‖

**यक्षस्वरूपाय** பூஜிக்கத்தக்க உருவம் கொண்டவரும், **जटाधराय** ஜடையை தரித்தவரும் **पिनाकहस्ताय** பிநாகம் என்ற வில்லைக் கையில் ஏந்தியவரும் **सनातनाय** அழிவற்றவராயும் **दिव्याय** அப்ராக்ருதமாயும் **देवाय** தேஜோரூபியாயும் **दिगम्बराय** திக்கையே வஸ்திரமாய் உடையவராயும் **यकाराय** ய என்ற எழுத்தாயும் இருக்கின்ற **तस्मै** அந்த **शिवाय** பரமசிவனுக்கு **नमः** நமஸ்காரம்.

கருத்து—எல்லோரும் வியந்து பக்தியோடு பூஜிக்கத் தக்க வடிவம் கொண்டவரும், ஜடை சூடியவரும், பிநாகம் என்னும் வில்லை கையில் தரித்தவரும், என்றும் நித்யமாய் விளங்குபவரும், மாயையின் செய்கைக்கு உட்படாதவரும், எங்கும் ஒளிரும் ப்ரகாசம் பொருந்தியவரும், உலகத்தையே ஆட்கொண்டவரும் பஞ்சாக்ஷரத்தின் ஐந்தாவது வர்ணமாகிய யகாரமாயுமிருக்கின்ற அப்பரமசிவனுக்கு நான் அடிபணிகிறேன்.

குறிப்பு:—**यक्ष**—கேனோபனிஷத்தில் இந்திரன் முதலிய தேவர்களும் அறிய இயலாத உருவத்தோடு ப்ரம்மம் தோன்றியதாகக் கூறி இருக்கிறது. அதை யக்ஷம் என்ற சொல்லாலேயே அங்கு அழைத்திருக்கிறபடியால் இங்கும் அச்சொல் அந்நிகழ்ச்சியை நினைவூட்டுகிறது. **दिगम्बराय** இச்சொல் முதல் ச்லோகத்திலும் கடைசி ச்லோகத்திலும் அமைந்துளது. அதிலிருந்து பகவானுக்கு பல குணங்கள் இருப்பினும் எங்கும் நிறைந்த வடிவம் உண்மையானது, மேலானதும்கூட; என்ற பொருளை நாம் அறியலாம்.

## इति श्रीशिवपञ्चाक्षरस्तोत्रं संपूर्णम्

ஸ்ரீ சிவ பஞ்சாக்ஷர ஸ்தோத்ரம் முற்றிற்று



श्रीः

# ॥ श्री दशश्लोकीस्तुतिः ॥

# ஸ்ரீ தசச்லோகீஸ்துதி:

---

साम्बो नः कुलदैवतं पशुपते साम्ब त्वदीया वयं
साम्बं स्तौमि सुरासुरोरगगणाः साम्बेन सन्तारिताः ।
साम्बायास्तु नमो मया विरचितं साम्बात्परं नो भजे
साम्बस्यानुचरोऽस्म्यहं मम रतिः साम्बे परब्रह्मणि ॥ १ ॥

ஸாம்போ ந: குலதைவதம் பசுபதே ஸாம்ப த்வதீயா வயம்
ஸாம்பம் ஸ்தௌமி ஸுராஸுரோரகணா: ஸாம்பேந ஸந்தாரிதா: |
ஸாம்பாயாஸ்து நமோ மயா விரசிதம் ஸாம்பாத்பரம் நோ பஜே
ஸாம்பஸ்யாநுசரோऽஸ்ம்யஹம் மம ரதி: ஸாம்பே பரப்ரஹ்மணி ॥ 1 ॥

**साम्बः** பார்வதி அன்னையோடு கூடிய பரமசிவன் **नः** நமக்கு **कुलदैवतं** பரம்பரையாக எங்கள் குடும்பத்தார் வழிபட்டு வரும் தெய்வம். **पशुपते** பசுக்களாகிய ஜீவன்களை காக்கும் பதியாகிய **साम्ब** பரமசிவனே **वयं** நாங்கள் **त्वदीयाः** உம்மைச் சேர்ந்தவர்கள். **साम्बं** பார்வதியோடு இணைபிரியா திருக்கும் உன்னை **स्तौमि** ஸ்தோத்திரம் செய்கிறேன். **साम्बेन** பரமசிவனாகிய உன்னால் **सुरासुरोरगगणाः** தேவர்கள், அசுரர்கள், பாம்புகள் முதலியவற்றின் கூட்டங்கள் **सन्तारिताः** சம்சாரமாகிற இப்பெரிய ஸமுத்திரத்தினின்று கரையேற்றப்பட்டார்கள். **मया** என்னால் **विरचितं** செய்யப்பட்ட **नमः** நமஸ்காரம் **साम्बाय** பரமசிவனுக்கு **अस्तु** இருக்கட்டும்.

**साम्बात् परं** பரமசிவனைத் தவிர மற்றொருவனை **नो भजे** ஸேவிக்கமாட்டேன். **अहं** நான் **साम्बस्य** பரமசிவனுடைய **अनुचरः** வேலைக்காரனாக **अस्मि** இருக்கின்றேன். **परब्रह्मणि** மாயைக்கு அப்பால் என்றும் ஒரே வடிவமாய்த் துலங்கும் ப்ரம்மவடிவமான **साम्बे** தாயாகிய பார்வதியோடு கூடிய பரம சிவனிடத்தில் **मम** எனக்கு **रतिः** அன்பு **अस्तु** இருக் கட்டும்.

கருத்து—கடவுளின் திருவுள்ளம் இல்லாமல் ஒன்றும் அசையவும் முடியாது என்று அறிவாளிகள் கூறுகிறார் கள். ஜீவகோடிகள் அவரவர்கள் முன் ஜன்மங்களில் செய்த வினையின் விளைவாகப் பிறக்கிறார்கள். அவரவர்களுடைய கர்மாக்களை அனுபவித்து தீர்த்து கடைத்தேற வேண்டும் என்ற கருணையினாலே பரமசிவன் அவர்களை பிறப்பித்து வைக்கின்றார். ஆகவே ஜன்மா எடுத்த நாம் அனைவரும் கடவுளுடைய திருவருளுக்கு பாத்திரமாகிய இந்நிலையை அடைந்துள்ளோம் என்று உணர்வதே மேலானது. அத னால் பரமாசார்யர் பகவானை ஸேவித்து உணரவேண்டிய முறையை இந்த ச்லோகத்தின் வாயிலாக நமக்கு புகட்டு கிறார்.

பரமசிவன் தான் நமக்கு குலதெய்வமாக இருக்கின் றார். பசுபதியாய், பரதேவதையான பார்வதி அம்மனோடு விளங்கும் சிவனே, நாங்கள் உமது அடியார்கள். ஆகவே உம்மையே நாங்கள் எப்பொழுதும் புகழ்கிறோம். தேவர் கள், அசுரர்கள் யாவரும் உம்மாலேயே கடைத்தேற்றப் படுகிறார்கள். எங்களையும் நீர் கடைத்தேற்ற வேண்டும். உமதடி பணிகின்றோம். உம்மைத் தவிர எங்களைத் தேற்றும் மற்ற தெய்வத்தை நாங்கள் அறியோம். உமக்குப் பணி விடை செய்யும் ஸேவகர்களாக எங்களை ஏற்றுக்கொள்ளும். ப்ரம்மமாய் உலகனைத்துக்கும் காரணமாய் விளங்கும் உம்

மிடத்திலேயே என் மனது ஆசையோடு பற்றியிருக்க வேண்டும்.

குறிப்பு :—**साम्बः** பரமசிவன் மாயையின் பற்றுதலற்றவர். அவரை ஸேவிப்பவர்களுக்கு மோக்ஷம் கைகூடுவது நிச்சயம். ஆயினும் இவ்வுலக ஸௌக்கியங்கள் அவர்களுக்குக் கிட்டுவதில்லை. ஆகவே இவ்வுலகத்தில் இன்புற்று பரலோகத்திலும் மோக்ஷமடைய விரும்புவோர்கள் கருணைக் கடலாகிய பார்வதி தேவியோடுகூடிய பரமசிவனை ஸேவிக்கவேண்டும் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. பார்வதி தேவியே தன் மைந்தர்கள் போன்ற ஜீவன்களிடம் தயவு செய்து அவர் விரும்புகிறபடியெல்லாம் பலனளித்து காப்பாற்றுகிறார். அதனாலேயே இங்கு அம்பிகையோடு கூடிய பரமசிவன் என்று கூறியிருக்கிறது. இந்த ச்லோகத்தில் **साम्ब** என்ற பதம் ப்ரதமை முதலிய எழுவிபக்திகளிலும், ஸம்புத்தியிலும் கூட உபயோகிக்கப் பட்டிருப்பதை கவனிக்கவும்

विष्णवाद्याश्च पुरत्रयं सुरगणा जेतुं न शक्ताः स्वयं
यं शम्भुं भगवन्वयं तु पशवोऽस्माकं त्वमेवेश्वरः ।
स्वस्वस्थाननियोजिताः सुमनसः स्वस्था बभूवुस्ततः
तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ २ ॥

விஷ்ண்வாத்யாஶ்ச புரத்ரயம் ஸுரகணா ஜேதும் ந ஶக்தாः ஸ்வயம்
யம் ஶம்பும் பகவன் வயம் து பஶவோऽஸ்மாகம் த்வமேவேஶ்வரः ।
ஸ்வஸ்வஸ்தாநநியோஜிதாः ஸுமனஸः ஸ்வஸ்தா பபூவுஸ்ததः
தஸ்மின் மே ஹ்ருதயம் ஸுகேந ரமதாம் ஸாம்பே பரப்ரஹ்மணி ॥ 2 ॥

**विष्णवाद्याः** விஷ்ணு முதலிய **सुरगणाः च** தேவர்களின் கூட்டங்கள் கூட **पुरत्रयं** பட்டின வடிவம் கொண்டு உலகை அழித்து வந்த புராள் என்ற மூன்று அசுரர்களை **स्वयं** தானாக **जेतुं** ஜயிப்பதற்கு **न शक्ताः** திறமை அற்றவர்களாக இருந்ததினால் **यं** எந்த **शम्भुं** மங்களங்களுக்கு உறைவிடமாக எல்லோருக்கும் மங்களங்களைச் செய்யும் பரமசிவனை அடை

ந்து भगवन् எல்லா ஐச்வர்யங்களும் நிறைந்த பகவானே वयं तु நாங்களோ पशवः பசுக்கள். (எங்களுடைய நன்மை தீமையை அறிவதற்கு கூட விசேஷ அறிவில்லாதவர்கள்.) अस्माकं எங்களுக்கு त्वमेव நீர்தான் ईश्वरः அடக்கி ஆளக்கூடிய திறன்வாய்ந்த ஈச்வரன். (என்று ஸ்தோத்திரம் செய்து நீ தான் தஞ்சம்என்று சரணம்அடைந்தார்களோ) ततः பிறகு (ஒரு நொடியில் அசுரர்களை வென்றுவிட்டதால்) सुमनसः விஷ்ணு முதலியதேவர்கள் स्व-स्व-स्थान-नियोजिताः அவரவர் ஸ்தானங்களில் முன்போல் வைக்கப்பட்டவர்களாக स्वस्थाः மனக்கவலை இன்றி தன் நிலையை அடைந்தவர்களாக बभूवुः இருந்தார்களோ तस्मिन् அந்த परब्रह्मणि பரப்ரம்ம ரூபமான साम्बे அம்பிகையோடு சேர்ந்த பரமசிவனிடத்தில் मे என்னு டைய हृदयं உள்ளம் सुखेन இன்பத்தோடு रमतां விளையாடிக் கொண்டிருக்கட்டும்.

கருத்து :—முன்பொருகாலத்தில் த்ரிபுரர்கள் என்ற அசுரர்கள் மூவுலகையும் ஜயித்து, தேவதைகளுடைய ஸ்தானங்களையும் ஜயித்தார்கள். மேலும் பட்டின வடிவம் கொண்டு பூலோகத்தில் பலவிடங்களில் உட்காருவதும் அதனால் எல்லா தேசங்களும் நகரங்களும் அழிவதுமாக இருந்தது. அப்பொழுது விஷ்ணு முதலிய தேவதைகள் பரமசிவனிடம் தங்கள் தங்கள் நிலையை முறையிட்டு நாங்கள் பசுக்கள்; விவேகமில்லாதவர்கள்; நீர் ஒருவரே எங்களுக்கு பதி; பசுபதியாகிய நீர்தான் எங்களை காக்கவேண்டும்' என்று வேண்டிக் கொண்டார்கள். உடனே பரமசிவன் தனது சிரிப்பினாலேயே அவ்வசுரர்களை அழித்து தேவர்களை அவரவர்கள் அதிகார ஸ்தானத்தில் இருக்கச்செய்தார். இவ்விதம் உலகத்தோருக்கு இன்னல்கள் நேரிடும்பொழுது அவைகளினின்றும் உலகத்தைக் காத்து அருளுவதே இயல்பாகக் கொண்ட பரப்ரம்ம வடிவமான

பார்வதி தேவியோடு கூடிய பரமசிவனிடத்தில் எனது உள்ளம் இன்புற்றிருக்கட்டும்.

क्षोणी यस्य रथो रथाङ्गयुगलं चन्द्रार्कबिम्बद्वयं
कोदण्डः कनकाचलो हरिरभूद्बाणो विधिस्सारथिः ।
तूणीरो जलधिर्हयाः श्रुतिचयो मौर्वी भुजङ्गाधिपः
तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ३ ॥

க்ஷோணீ யஸ்ய ரதோ ரதாங்கயுகலம் சந்த்ரார்கபிம்பத்வயம்
கோதண்டஃ கனகாசலோ ஹரிரபூத்பாணோ விதிஸ்ஸாரதிஃ |
தூணீரோ ஜலதிர்ஹயாஃ ச்ருதிசயோ மௌர்வீ புஜங்காதிபஃ
தஸ்மின்மே ஹ்ருதயம் ஸுகேந ரமதாம் ஸாம்பே பரப்ரஹ்மணி

**यस्य** எந்த பரமசிவனுக்கு, (த்ரிபுரர்களை கொல்லும் பொழுது) **क्षोणी** பூமி தேராகவும் **चन्द्रा-र्क-बिम्बद्वयं** சந்திரன் சூர்யன் இவ்விரண்டு பிம்பங்களும் **रथाङ्गयुगलं** இரண்டு சக்ரமாயும் **कनकाचलः** தங்க மலையாகின்ற மேரு பர்வதம் **कोदण्डः** வில்லாகவும் **हरिः** மகாவிஷ்ணு **बाणः** அம்பாகவும் **विधिः** ப்ரம்மா **सारथिः** தேரோட்டியாகவும் **जलधिः** ஸமுத்திரம் **तूणीरः** அம்புறுத்தூணியாகவும் **श्रुतिचयः** வேதக்கூட்டம் **हयाः** குதிரைகளாகவும் **भुजङ्गाधिपः** பாம்புகளுக்கு அரசனாகிய வாஸுகி **मौर्वी** ஞாண் கயிறாகவும் **अभूत्** இருந்ததோ **तस्मिन्** + **रमताम्**.

கருத்து:—த்ரிபுரர்களை வெல்வதற்காக பரமசிவன் புறப்பட்டபொழுது அவருக்கு, ஏற்றயுத்த ஸாமான்கள் உலகில் இல்லாததால் பூமியே தேராகவும், சூர்யனும், சந்திரனும் தேருக்கு இரண்டு சக்கிரங்களாகவும், மேருமலை வில்லாகவும், விஷ்ணு பாணமாகவும், வேதங்கள் குதிரைகளாகவும், வேதங்களை வசப்படுத்தி ஆளும் ப்ரம்மா தேரோட்டியாகவும், வாஸுகி வில்லிற்கு ஞாணாகவும் அமைந்ததாக புரா

ணங்கள் கூறுகின்றன. அத்தகைய மஹாமஹிமை வாய்ந்த பார்வதியோடு கூடிய பரமசிவனிடத்தில் எனதுள்ளம் இன்புற்றிருக்கட்டும்.

**येनापादितमङ्गजाङ्गभसितं दिव्याङ्गरागैः समं**
**येन स्वीकृतमब्जसंभवशिरः सौवर्णपात्रैः समम् ।**
**येनाङ्गीकृतमच्युतस्य नयनं पूजारविन्दैः समं**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ४ ॥**

யேநாபாதிதமங்ஜாங்பஸிதம் திவ்யாங்ராகை: ஸமம்
யேந ஸ்வீக்ருதமப்ஜஸம்பவசிர: ஸௌவர்ணபாத்ரைஸ்ஸமம் |
யேநாங்கீக்ருதமச்யுதஸ்ய நயனம் பூஜாரவிந்தைஸ்ஸமம்
தஸ்மின்மே ஹ்ருதயம் ஸுகேந ரமதாம் ஸாம்பே பரப்ரஹ்மணி

**येन** எந்த பரமசிவனுல் **अङ्गजाङ्गभसितं** மன்மதனுடைய உடம்பின் சாம்பல் **दिव्याङ्गरागैः** தேவலோகத்திய உடம்பிற்கு பூசிக்கொள்ளும் சந்தனம் முதலிய த்ரவ்யங்களோடு **समं** துல்யமாக **आपादितं** செய்யப்பட்டதோ, **येन** எவரால் **अब्ज-सम्भव-शिरः** தாமரையினின்று உண்டான ப்ரம்மாவினுடைய தலையோடு **सौवर्ण पात्रैः** தங்கத்தால் செய்த பாத்திரங்களுக்கு **समं** நிகராக **स्वीकृतं** எடுத்துக் கொள்ளப் பட்டதோ **येन** எவரால் **अच्युतस्य** மஹாவிஷ்ணுவினுடைய **नयनं** கண் **पूजारविन्दैः** பூஜைக்காக கொண்டுவந்த தாமரைப் பூக்களுக்கு **समं** ஸமமாக **अङ्गीकृतं** ஏற்றுக் கொள்ளப் பட்டதோ **तस्मिन्+रमताम्.**

கருத்து:—பரமசிவன், தக்ஷிணு மூர்த்தியாக இருந்து தவம் செய்யும்பொழுது, தேவதைகளுக்கு நன்மை செய்வதற்காக பார்வதியின் முன்னிலையில் சிவன்பேரில் மன்மதன் அம்பு எய்தினன். அப்பொழுது சிவன் தன் நெற்றிக்கண் நெருப்பில் அவனை நீற்று அந்த சாம்பலை உடம்பில் சந்தனம் போல் பூசிக்கொண்டார். தக்ஷன் பரமசிவனை அவமதிக்க

வெண்ணி அவரை அழைக்காமல் யாகம் செய்தான். அப்பொழுது சிவன், கோபங்கொண்டு வீரபத்திரனுய் அவதரித்து தக்ஷனைக்கொன்ருர். யாகத்திற்கு வந்திருக்கும் ப்ரம்மாவின் ஐந்து தலைகளில் ஒன்றையுங்கிள்ளி அதனுடைய ஓட்டைத் தங்கப் பாத்திரம்போல்சிவன் தன்கையில் பிக்ஷை வாங்கவைத்துக் கொண்டிருக்கிருர். ஒரு காலத்தில் விஷ்ணு பூஜைக்காக தாமரை மலர்களை எண்ணி வைத்துக்கொண்டு பூஜை செய்து கொண்டிருக்கும் பொழுது அவருடைய பக்தியைச் சோதிப்பதற்காக ஓர் தாமரை மலரை சம்பு ஒளித்து வைத்துக் கொண்டார். மஹாவிஷ்ணு பூவிற்கு பதிலாக தன் கண்ணை எடுத்து அர்ச்சனை செய்தபொழுது தாமரைக்கு நிகராக அக்கண்ணை சிவன் ஏற்றுக் கொண்டார். பார்வதியோடு கூடிய அந்த பரமசிவனடிகளில் என் மனம் களிப்புற்றிருக்க வேண்டும்.

गोविन्दादधिकं न दैवतमिति प्रोचार्य हस्तावुभौ
उद्धृत्याथ शिवस्य संनिधिगतो व्यासो मुनीनां वरः।
यस्य स्तंभितपाणिरानतिकृता नन्दीश्वरेणाभवत्
तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ५ ॥

கோவிந்தாதயிகம் ந தைவதமிதி ப்ரோச்சார்ய ஹஸ்தாவுபௌ
உத்த்ருத்யாத ஶிவஸ்ய ஸன்னிதிகதோ வ்யாஸோ முனீனாம் வரः |
யஸ்ய ஸ்தம்பிதபாணிரானதிக்ருதா நந்தீஶ்வரேணாபவத்
தஸ்மின்மே ஹ்ருதயம் ஸுகேன ரமதாம் ஸாம்பே பரப்ரஹ்மணி

मुनीनां மஹர்ஷிகளுக்குள் वरः சிறந்த व्यासः வ்யாஸ மஹர்ஷி यस्य எந்த शिवस्य பரமசிவனுடைய सन्निधिगतः ஸன்னிதியில் இருந்துகொண்டு उभौ இரண்டு हस्तौ கைகளை उद्धृत्य உயரத்தூக்கி गोविन्दात् மஹா விஷ்ணுவைக் காட்டிலும் अधिकं மேலான दैवतं தைவம் न இல்லை इति என்று

**प्रोच्चार्य** சொல்லி **अथ** பிறகு **आनतिकृता** சிவனிடம் பணியாத வர்களை பணியவைக்கும் **नन्दीश्वरेण** நந்திகேச்வரனல் **स्तम्भितपाणिः** அசைவற்று தூக்கியவாறு இருக்கும்படி செய்யப்பட்ட கையை உடையவராக **अभवत्** இருந்தாரோ **तस्मिन्+रमताम्**.

கருத்து:—வேதங்களை வகுத்து அதன் கருத்துக்களை பதினெட்டு புராணங்களாகவும், மஹாபாரதமாயும் இயற்றியுள்ள வ்யாஸ மஹர்ஷி, பரமசிவன் வீற்றிருக்கும் ஸபையில் வந்து அவருக்கு எதிரிலேயே இரண்டு கைகளையும் தூக்கி 'கோவிந்தனுக்கு மேல் தெய்வமில்லை' என்று கூறினர். அப்பொழுது, பரமசிவனுடைய அடியார்களில் சிறந்தவரும், பரமசிவனுக்கு அடிபணியாமல் மதம்கொண்டிருப்பவர்களைப் பணியச்செய்து நற்கதி அடையச் செய்பவருமான நந்திகேச்வரன் வ்யாஸருடைய உயரத் தூக்கிய கையைக் கீழே தணிக்க முடியாமல் அசைவற்றிருக்கச் செய்து விட்டார். அந்த நந்திகேச்வரன் மனமார்ந்து வழிபடும் தெய்வமாகிய பரமசிவனிடத்தில் எனது உள்ளம் இன்புற்று விளங்கவேண்டும்.

आकाशश्चिकुरायते दशदिशाभागो दुकूलायते
शीतांशुः प्रसवायते स्थिरतरानन्दः स्वरूपायते ।
वेदान्तो निलयायते सुविनयो यस्य स्वभावायते
तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ६ ॥

ஆகாஶஶ்சிகுராயதே த³ஶதி³ஶாபா⁴கோ³ து³கூலாயதே
ஶீதாம்ஶு: ப்ரஸவாயதே ஸ்தி²ரதரானந்த³: ஸ்வரூபாயதே |
வேதா³ந்தோ நிலயாயதே ஸுவினயோ யஸ்ய ஸ்வபா⁴வாயதே
தஸ்மின்மே ஹ்ருத³யம் ஸுகே²ன ரமதாம் ஸாம்பே³ பரப்³ரஹ்மணி ‖ 6 ‖

**यस्य** எந்த பரமசிவனுக்கு **आकाशः** ஆகாசம் **चिकुरायते** தலைமயிர் போல் இருக்கிறதோ **दशदिशाभागः** பத்துதிக்குக் களும் **दुकूलायते** பட்டு வஸ்திரம் போல் இருக்கிறதுகளோ **शीतांशुः** குளுமையான கிரணங்கள் உடைய சந்திரன் **प्रसवायते** புஷ்பத்தைப்போல் இருக்கிறனோ **स्थिरतरानन्दः** என்றும் நிலை பெற்ற ஆனந்தம் **स्वरूपायते** தன்னுருவமாய் இருக்கின்றதோ **वेदान्तः** உபநிஷத்து **निलयायते** இருப்பிடமாக இருக்கிறதோ **सुविनयः** நல்ல வணக்கம் **स्वभावायते** இயற்கையாக இருக்கிறதோ **तस्मिन्+रमताम्**.

கருத்து:—பரமசிவன் உலகம் முழுவதும் அளாவி நிற்பதாக சாஸ்திரங்களினின்று உணருகிறோம். அத்தகைய பரமசிவனுக்கு தலை ஆகாசமாயும், பத்துதிக்குகளும் ஆடையாயும், சந்திரன் கூந்தலில் அணிந்த பூவாயும், நிலைத்த ப்ரம்மானந்தம் உண்மை ஸ்வரூபமாகவும், வேதாந்தம் இருப்பிடமாகவும், வணக்கமே இயற்கை குணமாகவும் இருக்கிறது. பார்வதியோடு கூடிய அந்தப் பரமசிவனிடத்தில் என் மனது இன்புற்றிருக்கட்டும்.

குறிப்பு:—ஆகாசம் பரமசிவனுக்குத் தலை என்றால் அப்படியே பொருள்கொள்வது சரியல்ல. உருவமில்லாத பொருளாகிய பரமசிவனுக்கு தலை ஒன்றிருக்க முடியாது. ஆகிலும் எங்கும் நிறைந்த பொருளை நாம் வர்ணிக்கும்பொழுது பூமியைப் பாதமாகவும் ஆகாசத்தைத் தலையாகவும் கூறுதல் கேட்போர்கள் மனதிற்கு பொருத்தமாயிருக்கும்.பரமசிவன் திகம்பரன் என்று ப்ரஸித்தமானதால் பத்துதிக்குகளும் வஸ்திரம்போல் இருப்பதாக இங்கு சொல்லி இருக்கிறது. ஆகாசம் தலையாக இருந்தால் அங்கிருக்கும் சந்திரன் தலையில் இருக்கும் பூபோல் இருக்கிறன் என்று கூறுவது பொருந்தும். அத்துடன் பரமசிவனும் பிறை சூடி என்று பெயர் பெற்றவர் அல்லவா? ஆத்மா ஸத், சித், ஆனந்த வடிவமானது என்று வேதத்தில் கூறப்பட்டிருக்கிறது. அது பற்றியே இங்கு நிலைபெற்ற பேரானந்தம் பரமசிவனுடைய உண்மை ஸ்வரூபம் என்று கூறி இருக்கிறது. சிவனை வேதாந்தம் போற்றி இருப்பதால் வேதாந்தத்தை சிவனுடைய இருப்பிடமாய் சொல்லி இருக்கிறது.

विष्णुर्यस्य सहस्रनामनियमादम्भोरुहाण्यर्चयन्
एकोनोपचितेषु नेत्रकमलं नैजं पदाब्जद्वये ।
संपूज्यासुरसंहतिं विदलयंस्त्रैलोक्यपालोऽभवत्
तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ७ ॥

விஷ்ணுர்யஸ்ய ஸஹஸ்ரநாமநியமாதம்போருஹாண்யர்சயன்
ஏகோநோபசிதேஷு நேத்ரகமலம் நைஜம் பதாப்ஜத்வயே |
ஸம்பூஜ்யாஸுரஸம்ஹதிம் விதலயம்ஸ்த்ரைலோக்யபாலோऽபவத்
தஸ்மின்மே ஹ்ருதயம் ஸுகேந ரமதாம் ஸாம்பே பரப்ரஹ்மணி

**यस्य** எந்த பரமசிவனுடைய **पदाब्ज-द्वये** தாமரைபோன்ற இரண்டு கால்களில் **विष्णुः** மஹாவிஷ்ணு **सहस्रनामनियमात्** ஆயிரம் நாமங்களின் கணக்காய் **अम्भोरुहाणि** தாமரைகளை **अर्चयन्** பூஜை செய்து கொண்டு வருங்கால் **एकोनोपचितेषु** ஒன்று குறைந்த பொழுது **नैजं** தன்னுடைய **नेत्रकमलं** கண் என்னும் தாமரையை எடுத்து **सम्पूज्य** பூஜை செய்து **असुरसंहतिं** அசுரக்கூட்டத்தை **विदलयन्** அழித்து **त्रैलोक्यपालः** மூன்று உலகிற்கும் காப்பாற்றுகிறவனாக **अभवत्** ஆனரோ **तस्मिन्+रमताम्.**

கருத்து:—மஹாவிஷ்ணு பரமசிவனுக்கு ஆயிரம் நாமாக்களைச் சொல்லி அர்ச்சனை செய்வதற்காக ஆயிரம் தாமரைப் பூக்களைப் பறித்து பூஜை செய்து கொண்டிருந்தார். கடைசியில் ஒரு பூ குறையவே தாமரைப் பூவின் ஸ்தானத்தில் தன் கண்ணைப்பறித்து சிவன் திருவடியில் அர்ச்சித்தார். அதன் பயனாக அசுரர்களை வென்று மூன்று உலகிற்கும் அரசனாகிவிட்டார். அத்தகைய பெருமை வாய்ந்த பரமசிவனிடத்தில் எனது உள்ளம் பற்றி நிற்கவேண்டும்.

குறிப்பு:—விஷ்ணுவிற்கு **अरविन्दाक्षः** செந்தாமரைக் கண்ணன் என்ற பெயர் தாமரைக்கு பதிலாக கண்ணை உபயோகித்ததாலேயே வந்தது என்றும் செல்லலாம்.

शौरिं सत्यगिरं वराहवपुषं पादाम्बुजादर्शने
चक्रे यो दयया समस्तजगतां नाथं शिरोदर्शने ।
मिथ्यावाचमपूज्यमेव सततं हंसस्वरूपं विधिं
तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ८ ॥

ஶௌரிம் ஸத்யகிரம் வராஹவபுஷம் பாதாம்புஜாதர்ஶனே
சக்ரே யோ தயயா ஸமஸ்தஜகதாம் நாதம் ஶிரோதர்ஶனே ।
மித்யாவாசமபூஜ்யமேவ ஸததம் ஹம்ஸஸ்வரூபம் விதிம்
தஸ்மின்மே ஹ்ருதயம் ஸுகேந ரமதாம் ஸாம்பே பரப்ரஹ்மணி

**सत्यगिरं** உண்மையான வார்த்தைகளை உடையவரும் **पादाम्बुजादर्शने** பரமசிவனுடைய தாமரை போன்ற சரணங்களைக் காண்பதில் **वराहवपुषं** பூமிக்குள் புகுந்து பார்ப்பதற்கு தகுந்தவாறு பன்றியின் சரீரத்தை எடுத்துக்கொண்டவரும் ஆன **शौरिं** மஹா விஷ்ணுவை **यः** எந்த பரமசிவன் **दयया** தயவினால் **समस्तजगतां** எல்லா உலகங்களுக்கும் **नाथं** நாதனாக **चक्रे** செய்தாரோ, **शिरोदर्शने** தலையைப் பார்ப்பதில் (துவங்கிய வரும்) **मिथ्यावाचं** தலையைப் பார்க்காமலே பார்த்தேன் என்று பொய்யான வார்த்தையைக் கூறியவரும் **हंसस्वरूपं** ஆகாசத்தில் அளாவிய பரமசிவன் தலையைப் பார்ப்பதற்கு அனுகூலமான ஹம்ஸத்தின் உருவத்தை உடையவரும் ஆன **विधिं** ப்ரம்மாவை **सततं** எப்பொழுதும் **अपूज्यम् एव** பூஜிக்கத்தகாதவராகவே **चक्रे** செய்தாரோ **तस्मिन्+रमताम्.**

கருத்து.—பரமசிவன் ஆகாசத்தையும் பூமியையும் அளாவிநிற்கும்பொழுது விஷ்ணு, வராஹ ரூபம் கொண்டு பூமியைக் குடைந்து அவருடைய கால்களைப் பார்ப்பதற்கும், ப்ரம்மா, ஹம்ஸவடிவம் எடுத்து பறந்து கொண்டு தலையைப் பார்க்கவும் ஆரம்பித்தார்கள். இரண்டு பேரும் வெகுநாள் சென்றும் காலையும் தலையையும் காணமுடியாமல் திரும்பி விட்டார்கள். ஆனால் ப்ரம்மா

மட்டும், தான் தலையை கண்டுவிட்டதாகவும், அதற்கு பரம சிவன் தலையில் நின்றுவிழுந்த ஓர் தாழம்பூ ஸாக்ஷி என்றும் சொல்லிவிட்டார். விஷ்ணு உண்மையைக் கூறவே அவரை உலகத்திற்கு நாதனாக சிவன் செய்துவிட்டார். பொய் கூறிய ப்ரம்மாவை பூஜிக்கத்தகாதவராகவும் செய்தார். இவ்விதம் ப்ரம்மாவாலும் விஷ்ணுவாலும் கண்டறிய முடியாத சக்திவாய்ந்த அந்தப் பரமசிவனிடத்தில் என்னுடைய உள்ளம் களிகூறி இருக்கட்டும்.

**यस्यासन्धरणोजलाग्निपवनव्योमार्कचन्द्रादयः**
**विख्यातास्तनवोऽष्टधा परिणता नान्यत्ततो वर्तते ।**
**ओंकारार्थविवेचनी श्रुतिरियं चाचष्ट तुर्यं शिवं**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ९ ॥**

யஸ்யாஸந் தரணீஜலாக்நிபவனவ்யோமார்கசந்த்ராதய:
விக்யாதாஸ்தனவோऽஷ்டதா பரிணதா நாந்யத்ததோ வர்ததே |
ஓங்காரார்த்தவிவேசனீ ஶ்ருதிரியம் சாசஷ்ட துர்யம் ஶிவம்
தஸ்மின்மே ஹ்ருதயம் ஸுகேன ரமதாம் ஸாம்பே பரப்ரஹ்மணி ‖ 9 ‖

**धरणी-जल-अग्नि-पवन-व्योमा-र्क-चन्द्रा-दयः** பூமி, ஜலம், அக்னி, காற்று, ஆகாசம், சூர்யன், சந்திரன் முதலிய **अष्टधा** எட்டுவிதமாக **परिणताः** ஏற்பட்டவைகளும் **विख्याताः** புகழ் பெற்றவைகளுமான **तनवः** சரீரங்கள் **यस्य** எந்தப் பரமசிவனுக்கு **आसन्** இருக்கின்றனவோ **ततः** இவ்வெட்டு உருவமான பரமசிவனைக் காட்டிலும் **अन्यत्** வேறொன்று **न वर्तते** இல்லையோ **ओंकारार्थ-विवेचनी** ஓங்காரத்தின் அர்த்தத்தைவிளக்கும் **इयं श्रुतिः च** இந்த மாண்டூக்ய ச்ருதியும் (எந்த பரமசிவனை) **तुर्यं** ஜாக்ரத்,ஸ்வப்னம், ஸுஷுப்தி இம்மூன்றவஸ்தைகளிலும் இருக்கும் விச்வம், தைஜஸன், ப்ராஜ்ஞன் இம்மூவரைக் காட்டிலும் வேறாக நான்காவதாகவும் **शिवं** மங்கள ரூபியாகவும் **आचष्ट** சொல்லுகிறதோ **तस्मिन्+रमताम्**

கருத்து:—பஞ்சபூதங்கள், சூர்யன், சந்திரன், யஜமானன் ஆகிய எட்டுவிதமாய்ப் பிரிந்த இந்த உலகம் சிவனுடைய உடம்பாய் இருக்கிறது. யோசித்து ஆராய்ந்து பார்ப்பவர்களுக்கு பரமசிவனைத் தவிர்த்து இந்த உலகில் மற்றொன்றில்லை. இவ்விதம் உலக வடிவமாகவே இருந்த போதிலும் ஒன்றிலும் பற்றில்லாமல் ஜாக்ரத், ஸ்வப்பனம், ஸுஷுப்தி இம்மூன்றவஸ்த்தையையும் கடந்து நான்காவதாக சுத்த ரூபத்தோடு மங்களரூபமாய் விளங்குகிறது, என்று ஓம் காரத்தை ஆராய்ச்சி செய்கின்ற மாண்டூக்ய உபநிஷத்து கூறுகின்றது. பார்வதியோடு இணைபிரியாத அந்தப் பரம சிவனிடத்தில் என் உள்ளம் களிப்போடு இருக்கட்டும்.

विष्णुब्रह्मसुराधिपप्रभृतयः सर्वेऽपि देवा यदा
संभूताज्जलधेर्विषात् परिभवं प्राप्तास्तदा सत्वरम् ।
तानार्तान् शरणागतानिति सुरान् योऽरक्षदर्धक्षणात्
तस्मिन् मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ १० ॥

விஷ்ணுப்ரஹ்மஸுராதிபப்ரப்ருதய: ஸர்வேऽபி தேவா யதா
ஸம்பூதாஜ்ஜலதேர் விஷாத் பரிபவம் ப்ராப்தாஸ்ததா ஸத்வரம்
தானார்தான் சரணாகதானிதி ஸுரான் யோऽரக்ஷதர்த்தக்ஷணாத்
தஸ்மின்மே ஹ்ருதயம் ஸுகேன ரமதாம் ஸாம்பே பரப்ரஹ்மணி
॥ 10 ॥

यदा எப்பொழுது विष्णु-ब्रह्म-सुराधिप-प्रभृतयः விஷ்ணு, ப்ரம்மா, தேவேந்திரன் முதலிய सर्वेऽपि देवाः எல்லா தேவர்களும் जलधेः ஸமுத்திரத்திலிருந்து संभूतात् உண்டான विषात् ஹாலாஹல விஷத்திலிருந்து परिभवं அவமானத்தை प्राप्ताः அடைந்தார்களோ, तदा அப்பொழுது सत्वरं சீக்கிரமாக आर्तान् கஷ்டமுற்ற तान् அந்த सुरान् தேவர்களை शरणागतान् சரணமாக அடைந்தவர்கள் इति என்ற காரணத்தால் यः எந்த பரமசிவன் अर्धक्षणात् அரைநொடியில் अरक्षत् காப்பாற்றினாரோ तस्मिन्+रमताम्

கருத்து:—தேவர்களும் அசுரர்களும் அமிருதத்தை எடுக்கப் பாலாழியைக் கடைந்தார்கள். அப்பொழுது முதலில் ஹாலாஹலம் என்ற நஞ்சு கிளம்பி தேவர்களையும் அசுரர்களையும் துன்புறுத்தத் தொடங்கியது. அத்துன்பம் தாங்காமல் விஷ்ணு, ப்ரம்மா, இந்திரன் முதலிய தேவர்கள் பரமசிவனை சரண்புகுந்தார்கள். நம்மை சரணமடைந்தவர்களைக் காக்கவேண்டும் என்ற ஒரே கருணையால் ஹாலாஹலத்தை உண்டு தேவர்களை அரைக்ஷண நேரத்தில் காத்தருளினார். அந்தப் பரமசிவனிடத்தில் என் மனது இடைவிடாமல் பற்றி இருக்கவேண்டும்.

इति श्री दशश्लोकीस्तुतिः समाप्ता ॥

ஸ்ரீ தசச்லோகீஸ்துதிஃ முற்றிற்று.



மூன்ருவது பதிப்பு 1945 ஜனவரி மீ௴ வெளிவரும்!
உங்கள் புத்தகத்திற்கு முன்னதாகவே எழுதுங்கள்!!

---

ஸ்ரீ குருப்யோ நம:

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் பாஷ்யத்துக்கு
வே. நாராயணன், எழுதிய தமிழ் அனுவாதத்துடன் கூடியது.

உலகம் எங்கும் சங்கடமான நிலைமை எற்பட்டிருக்கிறது; இப்பொழுது பொதுஜனங்கள் செய்யவேண்டியது என்ன? அவர்கள் நன்மை பெறுவது எப்படி? லோக க்ஷேமத்தை நாடி அவர்கள் என்ன செய்யலாம்?

இந்தக் கேள்விகளுக்கு விடையாக அமைந்தது ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம் இந்த ஸ்தோத்ரத்தைப் பக்தியோடு பாராயணஞ் செய்தால் இவ்வுலகிலே சுகமாக வாழலாம்; மேலுலகிலும் சுகத்தைப் பெறலாம்; பயம் நீங்கிவிடும்; வந்த ஆபத்து விலகிப்போம்; நோய் பிடிக்காது; எல்லா இடையூறுகளையும் சுலபமாகக் கடந்து விடலாம்; சுகம் உண்டு; செல்வம் உண்டு; புகழ் உண்டு. கோபம், லோபம், மோஹம் முதலிய துர்க்குணங்கள் நம்மைவிட்டு நீங்கிவிடும். பொறுமை, தைர்யம், வீரம், தேஜஸ் முதலிய குணங்கள் நம்மிடம் விளங்கும். 'இது வெறும் வார்த்தையன்று, உண்மையே' என்று ஸ்ரீசங்கர பகவத் பாதர்கள் உறுதி கூறுகிருர்கள்.

பாராயணத்திலே சிரத்தைவேண்டும். அதற்கு அனுகூலமாக, ஸஹஸ்ர நாமங்களுக்கும் ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் பாஷ்யஞ் செய்திருக்கிருர்கள். விஷ்ணுவின் நாமாக்களை ஸங்கீர்த்தனஞ் செய்வதால் பரிபூர்ண ஞானம் உண்டாகும் என்றும், புராண புருஷனை ஸ்துதிப்பவர்கள் உண்மை ஞானிகளாகிருர்கள் என்றும் கூறுகிருர்கள்.

கண்ணைக் கவரும் அழகிய மூவர்ணப் படங்களும் 248 பக்கங்களும் கொண்ட இந்தப் புத்தகத்திற்கு மிகவும் குறைந்த விலை ரூ. 1—4—0

கிடைக்குமிடம்:—

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம், கும்பகோணம்

---

Printed at The Liberty Press. G.T., Madras



ஸ்ரீ சந்த்ர மௌளீச்வராய நம:

## ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின் வெளியீடுகள்

ஒவ்வொரு புத்தகமும் பல படங்களுடனும் ஸ்ரீ ஆசார்யாளுடைய அனுக்ரஹ பூர்வமான ஸ்ரீமுகத்துடனும் கூடியது. ரு. அ.

1. ஸ்ரீ மூகபஞ்ச சதீ — ஸ்ரீ மூக கவி அருளிச் செய்தது. 500 ஸ்லோகங்கள் கொண்டது. தேவநாகரி மூலமும் தமிழ் மொழி பெயர்ப்பும். பக்கம் 260. ... ... 1—8
2. ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ரர்கள் அருளிய சிவ மானஸிக பூஜா, கீர்த்தனங்கள், ஆத்ம வித்யா விலாஸ: என்னும் நூல்கள் ஸ்ரீ. வே. நாராயணன், எழுதிய தமிழ் ஆங்கில அனுவாதங்களுடன் திருப்புகழ்மணி T. M. கிருஷ்ணஸ்வாமி அய்யர் பி.ஏ.பி.எல்., எழுதிய முகவுரையுடன் (2-ம் பதிப்பு) 0-10
3. ஸ்ரீ ஆனந்த ஸாகரஸ்தவம் — ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் இயற்றிய ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும், ஸ்ரீ Y. மகாலிங்க சாஸ்திரியார், எம்.ஏ., பி.எல்., எழுதிய தமிழ் இங்கிலீஷ் அனுவாதமும், ராவ் ஸாஹிப் N. நடேச அய்யர் அவர்கள் எழுதிய ஆங்கில முன்னுரையுடன் கூடியது ... ... 0-12
4. ஸ்ரீ முகுந்தமாலா — ஸ்ரீ குலசேகரப் பெருமாள் அருளியது. ஸாஹித்ய வல்லப ஸ்ரீ T. ஸுந்தராசார்ய ஸ்வாமிகள், பி. ஏ., பி. எல்., எழுதிய தமிழ் உரையுடன் கூடியது. ... 0—5
5. ஸ்ரீ பஜகோவிந்தம் — ஸம்ஸ்க்ருத மூலமும் ஸ்ரீ ஏ. எஸ். நடராஜ ஐயர் பி.ஏ., எம்.எல்., எழுதிய தமிழ் அனுவாதமும். 0-2½
6. ஸ்ரீ சாந்தி விலாஸம் — ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் இயற்றிய ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் ஸ்ரீ Y. மகாலிங்க சாஸ்திரியார், எம்.ஏ., பி.எல்., எழுதிய தமிழ் அனுவாதமும்; கனம் ஜட்ஜ் திவான் பகதூர் N. சந்த்ரசேகர அய்யர் அவர்கள் எழுதிய முன்னுரையுடன் கூடியது ... ... ... 0—6
7. ஸ்ரீ ப்ரச்நோத்தர ரத்ந மாலிகா — ஸ்ரீ சங்கர பகவத் பாதர்கள் இயற்றியதை ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் தமிழில் உபதேசித்தது. (தமிழ் லிபியில்) ... 0-2½
8. ஷ்டி (தெலுங்கு லிபியில் தெலுங்கு அனுவாதத்துடன்) 0-2½
9. ஷ்டி (ஸம்ஸ்க்ருத மூலமும் ஆங்கில அனுவாதமும்)... 0-2½
10. ஸ்ரீ தேவீ ஸ்தோத்ர ரத்னகரம் — ஸ்ரீ ச்யாமளா தண்டகம் முதலிய பதின்மூன்று தேவீ ஸ்தோத்ரங்கள் அடங்கியது. 0-12
11. ஸ்ரீ மாத்ருகா புஷ்பமாலா ஸ்துதி: — ஸ்ரீமத் ஆத்ய சங்கர பகவத் பூஜ்ய பாதர்கள் எழுதிய ஸம்ஸ்கிருத ஸ்தோத்ரமும் பண்டித N. அருணசல சாஸ்திரியார் எழுதிய அநுவாதமும் 0—8
12. ஸ்ரீ ஆர்யா ஷஷ்டி — ஸ்ரீ ஸ்ரீதர வெங்கடேச அய்யாவாள் இயற்றிய ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரம், தமிழ் ஆங்கில அனுவாதங்களுடனும், குறிப்புக்களுடனும், Dr. V. ராகவன், எம். ஏ., பி. எச்டி., எழுதிய முன்னுரையுடனும் கூடியது... 0-10

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம், கும்பகோணம்.